# கள்ளர் மரபினரின் பட்டப்பெயர்கள் - ஓர் ஆய்வு

திருச்சிராப்பள்ளி
பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர்
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர் :
**வீ. சிவபாதம்,** எம்.ஏ., எம்.ஃபில்.,



**தமிழ் உயராய்வு மையம்**
**அ. வீரையா வாண்டையார் நினைவு**
**திரு புட்பம் கல்லூரி (தன்னாட்சி)**
**பூண்டி-613 503**
**தஞ்சாவூர் மாவட்டம்**

**1995**

முனைவர் அ. தட்சிணாமூர்த்தி, பி.ஏ.(ஆனர்சு), பி.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,
முதல்வர்,
செந்தமிழ்க் கல்லூரி,
மதுரை-625 001.

## நெறியாளர் சான்றிதழ்

"கள்ளர் மரபினரின் பட்டப்பெயர்கள் - ஓர் ஆய்வு" என்னும் பொருளில் பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையின்கீழ் பூண்டி அ. வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரித்(தன்னாட்சி) தமிழ்த்துறை உயராய்வு மையத்தில் முழுநேர ஆய்வு மாணவராக 1991 அக்டோபர் முதல் திரு. வீ. சிவபாதம், எம்.ஏ., எம்.ஃபில்., அவர்களால் மேற்கொள்ளப்பட்ட இவ்வாய்வு இவரது சொந்த உழைப்பின் பயனால் உருவாக்கப்பட்டது என்றும், இவ்வாய்வேடு அல்லது இதன் பகுதிகள் இதற்குமுன் வேறு பட்டத்திற்கோ பல்கலைக்கழகத்திற்கோ, ஆய்வரங்கத்திற்கோ அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: மதுரை,
நாள்: 29.10.95

(அ. தட்சிணாமூர்த்தி)

வீ.சிவபாதம், எம்.ஏ., எம்.ஃபில்.,
தமிழ் விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
அ.வீரையா வாண்டையார் நினைவு திரு புட்பம் கல்லூரி
(தன்னாட்சி),
பூண்டி-613 503,
தஞ்சாவூர் மாவட்டம்.

## ஆய்வாளர் உறுதிமொழி

"கள்ளர் மரபினரின் பட்டப் பெயர்கள் - ஓர் ஆய்வு" என்னும் தலைப்பில் பாரதிதாசன் பல்கலைக் கழகத்தின் முனைவர் பட்டத்திற்காக மேற்கொள்ளப்பட்ட இவ்ஆய்வு எனது சொந்த உழைப்பின் பயனாய் விளைந்ததென்றும், இதற்குமுன் இவ்ஆய்வேடு மற்றும் ஆய்வுப் பகுதிகள் வேறு எந்தப் பல்கலைக்கழகத்திற்கோ, பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: பூண்டி
நாள்: 29.10.95

(வீ.சிவபாதம்)
ஆய்வாளர் கையொப்பம்.

# நன்றியுரை

அ.வீரையா வாண்டையார் நினைவு திரு.புட்பம் கல்லூரியைத் தோற்றுவித்த அ.வீரையா வாண்டையார், அ.கிருட்டிணசாமி வாண்டையார் ஆகிய பெருமக்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

புகுமுக வகுப்பு முதல் முனைவர் பட்ட ஆய்வு வரை படிப்பதற்கு வாய்ப்பளித்து ஆசிரியப்பணியையும் அளித்து எனக்கு எல்லாமாய் விளங்குகின்ற கல்லூரிச் செயலர் மற்றும் தாளாளர் அகிலம் போற்றும் செம்மனச்செம்மல், கல்விக் காவலர், திருமிகு கி.துளசிஐயா வாண்டையார், எம்.பி., அவர்களுக்கு நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உயரிய நோக்கும் இனிய பண்பும் ஒருங்கே அமைந்து இந்த ஆய்வு சிறக்க பல்வேறு நிலைகளில் உதவிய கல்லூரி முதல்வர் எம் பேராசிரியர் திருமிகு ந.மெய்ப்பொருள் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

தமிழ்த்துறைத் தலைவர்களாக விளங்கிய முனைவர் வே.காத்தையன், முனைவர் கோ.இரா.கிருட்டிணமூர்த்தி, முனைவர் இரா.செயபால் ஆகியோர்க்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இன்று துறைத் தலைவராக விளங்கும் முனைவர் குரு.கோவிந்தராசன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னையும் ஒருபொருளாக் கொண்டு எம்பிரான் அருள்செய்தாரேல் என்ற ஆன்றோர் வாக்கிற்கு இணங்க, என்னையும் ஒரு ஆய்வாளனாக ஏற்றுக்கொண்டு என்னை நம்பி இந்த ஆய்வுப் பொருளைத் தந்து, ஆய்வு

நிறைவடைய பல்வேறு நிலைகளில் உதவி, நெறிப்படுத்திய அறிஞர் எம் ஆசிரியர் மற்றும் இந்த ஆய்வின் நெறியாளர் மதுரை செந்தமிழ்க் கல்லூரியின் முதல்வர் முனைவர் திருமிகு அ. தட்சிணாமூர்த்தி அவர்களுக்கு நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்விற்குப் பலவகையில் ஊக்கமளித்து உதவிபுரிந்த சகோதரி திருமதி செயகுமாரி தட்சிணாமூர்த்தி, செல்வி த. அலர்மேல் மங்கை ஆகியோர்க்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வுக்காகப் புதுக்கோட்டைப் பகுதியில் கள ஆய்வு செய்தபோது என்னோடு கடைசிவரை வந்து பேருதவி செய்த ஓய்வுபெற்ற தலைமையாசிரியர் புலவர் சரவண ஆறுமுகம் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைப் புலப்படுத்துகிறேன்.

இவ்வாய்வேட்டைத் திருத்திப் பல்வேறு தவறுகளை நீக்கி ஆய்வேடு செம்மையாக அமைய அருஞ்செயலாற்றிய எம் ஆசிரியர்கள் முனைவர் இரா. செயபால், முனைவர் பெ. சுப்பிரமணியன் ஆகியோர்க்கு என் நெஞ்சார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றும் இந்த ஆய்விற்கு பல நிலைகளிலும் உதவிய பேராசிரியர்கள், மாணவர்கள், தகவல் தந்தோர்கள் ஆகிய அத்துணைபேர்களுக்கும் என் நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| சிலம்பு. | – | சிலப்பதிகாரம் |
| தஞ்சை. | – | தஞ்சாவூர் |
| திருச்சி | – | திருச்சிராப்பள்ளி |
| நீடா. | – | நீடாமங்கலம் |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பரணி. | – | கலிங்கத்துப் பரணி |
| புறம். | – | புறநானூறு |
| மன்னை. | – | மன்னார்குடி |
| A.R.E. | – | Archaeological Resources and Epigraphy |
| Epy. | – | Epigraphy |
| Ibid. | – | Ibidem |
| Ind. | – | India |
| S.I.I. | – | South Indian Inscriptions |
| Vol. | – | Volume |

# பொருளடக்கம்

அறிவுத்துறைகளில் ஒன்றாகிய வரலாற்றுத்துறை கடந்த காலத்திற்கும் வருங்காலத்திற்கும் நிகழ்காலத்தோடு உறவு உண்டாக்கி மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக் கொள்ள உதவும் ஒரு சிறந்த துறையாகும். அரச மரபினரிடையே நிகழ்ந்த நிகழ்வுகளை - குறிப்பாகப் போர் நிகழ்ச்சிகளை மட்டும் கூறும் பதிவேடாக வரலாற்றைக் கருதிய முன்னர் இருந்த நிலை மாறி, இன்று மக்கள் வாழ்வியலுக்கு முதன்மை கொடுப்பதன் இன்றியமையாமை வரலாற்று அறிஞர்களால் பெரிதும் உணரப் பட்டுள்ளது. இந்தியப் பண்பாட்டின் அடிப்படைக் கூறுகளில் ஒன்று சாதி அமைப்பாகும். எண்ணற்ற சாதிகளைக் கொண்ட இந்திய நாட்டில் ஒவ்வொரு சாதியும் தனக்கே உரிய வரலாற்றுச் சிறப்பும் பண்பாட்டுச் செம்மையும் கொண்டு திகழ்கிறது. இப்பல்வேறு சமூகங்களிலும் காணப்படும் வாழ்வியல் சிறப்புக்களைப் பொதுவாக இந்தியப் பண்பாடு என வழங்குகிறோம். எனவே பல்வேறு சாதிகளைப் பற்றிய வரலாறுகள் நாட்டு வரலாற்றின் முழுமைக்குரிய பகுதிகளாகவே கருதப்பட வேண்டும். இன்று பல்வேறு சாதிகளைப் பற்றிய ஆய்வுகள் அறிஞர்களால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. சாதிச் சங்கங்கள் நாடெங்கணும் தோன்றியமையால் அவ்வச் சாதியாரும் தத்தம் சாதியின் வரலாறுகளை எழுதுவதில் ஊக்கங்காட்டி வருகின்றனர். தமிழக வரலாற்றில் தொன்மைமிக்க குலமாகிய கள்ளர் குலமக்கள் தமக்கே உரிய சிறப்பிடத்தைப் பெற்றுள்ளனர்.

## ஆய்வு நோக்கம்

கள்ளர் குல மக்களது வரலாறு தமிழ்நாட்டின் தொன்மைக்காலம் முதல் அண்மைக்காலம் வரைத் தொடர்புடையதாகத் தோன்றுகிறது. இவர்களுடைய வரலாற்றை உள்ளபடி வரைந்தால் அது தமிழ்நாட்டின் வரலாறாக முடியும்.

இவர்களைப் பற்றி ஆய்வதற்குரிய களங்கள் மிகுதியாக இருப்பினும் குறிப்பிடத் தக்க அளவிற்கு ஆய்வுகள் செய்யப்படவில்லை. இக்குறையை ஓரளவு நிறைவு செய்யும் நோக்குடன் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

ஆய்வுப்பொருள்

இவ்வாய்வின் பொருள், "கள்ளர் மரபினரின் பட்டப்பெயர்கள் - ஓர் ஆய்வு" என்பதாகும். கள்ளர் குலத்தவரின் வாழ்வியல் கூறுகள் பெரும் ஆராய்ச்சிக்கு உரியனவாகும். இதுகாறும் கள்ளர் குலத்தவர் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட அறிஞர்களில் பெரும்பான்மையானோர் பாண்டியநாட்டுக் கள்ளர்களைப் பற்றிய ஆய்வில் பெருங்கவனம் செலுத்தியுள்ளனர். 'தென்னிந்திய குலங்களும் குடிகளும்' பற்றிய நூலில் கள்ளர்கள் பற்றிய தகவல்களைத் தரும் தர்ஸ்டன், பெரிதும் பாண்டிய நாட்டுக் கள்ளர்களைப் பற்றியே விவரித்துச் செல்கின்றார். சோழநாட்டுக் கள்ளர்களைப் பற்றி மிகக் குறைவான விவரங்களையே தருகிறார் என்பது குறிப்பிடத்தகுந்தது. புறமலைக் கள்ளர்கள் தமக்கேயுரிய புதுமையான பழக்கவழக்கங்களைக் கொண்டு இனக்குழுத் தன்மையோடு விளங்குவதனால் மேலைநாட்டு அறிஞர்கள் அவர்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்தனர் என்று கருதத் தோன்றுகிறது.

ஆய்வு மூலங்கள் அல்லது ஆய்வுக்களம்

சோழநாட்டுக் கள்ளர்கள் பற்றிய ஆய்வில் மிக இன்றியமையாது இடம்பெற வேண்டியது அவர்களிடையே வழங்குகின்ற பட்டப்பெயர்களேயாகும். இப் பட்டப் பெயர்கள் குடும்பப்பெயர்களாக அமைந்து இயற்பெயரோடு சேர்த்து வழங்கப்படுகின்றன. இப்பட்டப்பெயர்கள் பற்றிய ஆய்வு தேவையான அளவுக்கு மேற்கொள்ளப்படவில்லை. மேலைநாட்டு அறிஞர்கள் இப்பட்டப்

பெயர்கள் பற்றி முழுமையாக அறிந்துகொள்வதற்கு அந்நாளில் வாய்ப்பில்லை என்று தெரிகிறது. அதனால்தான் அவர்களுடைய ஆய்வில் பட்டப்பெயர்களைப் பற்றிய செய்தி மிகச் சிறிய அளவிலேயே காணப்படுகிறது. கள்ளர்களைப் பற்றி ஆராயும் தர்ஸ்டன், மதுரைக் கள்ளர்களைப் பற்றி விரிவாக ஆய்ந்த பிறகு "தஞ்சாவூர் கள்ளர்களில் ஒரு பிரிவினர் தங்கள் வகுப்புக்களுக்குப் பல்லவ ராசா, தஞ்சாவூர் ராசா, தெற்கை வென்றவன், வல்லமையுடைய மன்னன் என்பன போன்ற பலவகை உயர் பட்டப்பெயர்களாக உடையவர்கள் உள்ளனர்" என்று கூறியுள்ளார். ஒரு பிரிவினர் என்று கூறுவதிலிருந்து, கள்ளர்கள் வழிவழியாய்ப் பூண்டு வரும் பலநூறு பட்டங்களை அவர் அறியவில்லை என்று தெரிகிறது.

சோழ நாட்டுக் கள்ளர்களின் தோற்றத்தையும் வரலாற்றையும் அவர்களின் முற்காலத்து நிலைமைகளையும் உணர்வதற்கு அவர்களுடைய பட்டப் பெயர்களிலும் வலிமையான சான்றுகள் இல்லை. எனவேதான் ந.மு.வேங்கடசாமி நாட்டாரும், மு.சுவாமிநாத மாதவராயரும் பட்டப்பெயர் ஆராய்ச்சியில் தம் கருத்தைச் செலுத்துவாராயினர். இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், நடைமுறையிலுள்ள பட்டங்கள் ஆகியவற்றை ஒருங்குவைத்து ஆய்ந்து தம் முடிவுகளை வெளியிட்டனர்.

மு. தியாகராச நாட்டாரும் மு. பஞ்சநத நாட்டாரும் தொகுத்துக் கொடுத்த 348 பட்டப்பெயர்களை அடிப்படையாக வைத்து, 'கள்ளர் சரித்திரம்' ந.மு.வேங்கடசாமி நாட்டாரால் வரையப்பட்டது. இப்பட்டியல் முழுமையானது அன்று. இவ்வுண்மையை வேங்கடசாமி நாட்டார் தம்முடைய நூலில் ஒப்புக்கொண்டு பின்வருமாறு எழுதுகின்றார். "கள்ளர்

வகுப்பினருக்கு வழங்கும் பட்டங்களை இப்புத்தகத்தின் இறுதியில் காணலாம். யாம் அறியலாகாத பட்டங்கள் பல இன்னும் இருத்தல் கூடும்". தமிழ்நாடு முழுவதும் பரவி வாழும் கள்ளர்களுடைய அனைத்துப் பட்டங்களையும் கள ஆய்வின் மூலம் கண்டறிந்து உருவாக்கப்பட்டதாக இப்பட்டியலைக் கொள்ள முடியாது.

கல்வெட்டுக்களில் காணப்படுகின்ற சில பட்டப் பெயர்களைக் கண்ணுற்ற ந.மு.வேங்கடசாமி நாட்டார் அவையும் கள்ளர்களுக்கு உரியனவோ என ஐயுற்ற நிலையில் பின்வருமாறு எழுதுகின்றார். "கனகராயன், களப்பாளராயன், குருகுலராயன், சம்புவராயன், தமிழதரையன், பங்களராயன், மன்றாடி, மீனவராயர், மூவராயர் கண்டன், மூவேந்தரையன், வங்கத்தரையன், வாணவராயன், விலாடத்தரையன், விழுப்பாதராயன் முதலியன. இவையும் கள்ளர்க்குரியனவாயிருப்பினும் இருக்கலாம். இப்பட்டங்களுடையார் எங்கிருக்கின்றன ரென இப்பொழுது எமக்கு அறியவாராமையால் இவை இன்னார்க்குரியவெனத் துணிந்துரைக்கக்கூடவில்லை."

ந.மு.வேங்கடசாமி நாட்டார் தம் ஏவலர்கள் இருவர் திரட்டிக் கொடுத்த பட்டங்களை அடிப்படையாகக் கொண்டு தம் ஆய்வை மேற்கொண்டார் எனின் மு.சுவாமிநாத மாதவராயர் கள்ளர் பற்றுக்களை நேரிற் கண்டு ஆங்காங்கு உள்ளாரை உசாவி அறிந்து நாட்டார் நூலில் காணப்படும் பட்டங்களினும் மிகுதியானவற்றை அவற்றின் பல்வேறு திரிந்த வடிவங்களோடு பதிவு செய்துள்ளார். போக்குவரத்து வசதிகள் இன்றுபோல் பெருகி வராத அந்நாளில் பட்டப்பெயர்களைத் திரட்டுவது மிக அரிதான செயல் என்று அறிவது ஏற்றுக் கொள்ளக் கூடியதேயாகும். இவர் வேளிர், நாகர், பல்லவர், சோழர் அனைவரும் சூரிய குலத்தைச் சார்ந்தவர் என்று கூறுகின்றார். இவரிடம் ஊர்ப்பெயர்களோடு பல பட்டப்பெயர்களை இணைக்கும் போக்குக்காணப்படுகின்றது.

கச்சிமன், கூழைமன், கீரமன், வண்டமன் முதலிய வரலாற்றில் காணமுடியாத பல மன்னர் பெயர்களைக் கூறி, பெயர் ஒற்றுமை ஒன்றை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு அப்பெயரோடு ஒற்றுமையுடைய பட்டப்பெயர்களைக் கூறுகின்றார். அவ்வாறே அப்பெயருடைய மன்னன் அப்பெயரோடு ஒற்றுமையுடைய ஊர்களை உண்டு பண்ணியவன் என்றும் கூறுகின்றார். எடுத்துக்காட்டாக, கச்சிமன் என்று பெயர் கூறப்பட்ட மன்னன், செம்பியன் மரபில் வந்தவன் என்றும் கச்சி என்னும் நகரத்தை உண்டு பண்ணி இராசதானியாகக் கொண்டவன் என்றும் இவன் பெயர் கச்சிராயன் எனவும் வழங்கும் என்றும் கச்சியூர், கச்சூர், கச்சைசூர் என்னும் தேவாரம் பெற்ற சிவத்தலங்களையும் கச்சிகுடி, கச்சிமங்கலம் காஞ்சிப்பட்டி முதலிய ஊர்களை உண்டாக்கியவன் என்றும் இவன் மரபோர்க்கு கச்சிராயன் என்னும் பட்டப்பெயர் வழங்குகின்றது என்றும் கூறுகின்றார்.

இவர்களை அடுத்த அ. தட்சிணாமூர்த்தி, 1979 ஆம் ஆண்டு 'தமிழ்நாடும் கள்ளரும்' என்னும் கட்டுரையை எழுதி வெளியிட்டார். தொடர்ந்து 'முத்தரையர் யார்'? 'கள்ளர் பட்டப் பெயர்களும் அரச மரபினரும்', 'The Title of the Kallas - A Historical Study' என்னும் கட்டுரைகளையும் வெளியிட்டார். மேற்கூறிய ஆய்வுக் கட்டுரைகளில் கல்வெட்டு, வரலாறு போன்றவற்றில் இடம்பெறும் பல பட்டப்பெயர்களைக் கள்ளர் பட்டப்பெயர்களோடு ஒப்பிட்டு அவை தமிழகத்தை ஆண்ட பல்வேறு அரச மரபினரோடும் தொடர்புடையன என்பதைச் சுருக்கமாக எடுத்துக் கூறியுள்ளார்.

வேங்கடசாமி நாட்டார், சுவாமிநாத மாதவராயர் ஆகியோருடைய நூல்களையும் அ. தட்சிணாமூர்த்தி, எழுதிய கட்டுரைகளையும் பயன்படுத்தி, ஒய்வு பெற்ற அறநிலையத்துறை ஆணையர் திரு. உ. சுப்பிரமணியன் கள்ளர் பட்டப்

பெயர்களைத் தொகுத்து அகர வரிசைப்படுத்தி ஒரு சிறு நூலாக வெளியிட்டார். புலமை வேங்கடாசலம், கள்ளர் வரலாறு என்னும் நூலை அம்மையில் வெளியிட்டார். அந்நூலில் உ. சுப்பிரமணியன் தொகுத்துத் தந்த பட்டப்பெயர்ப் பட்டியலுக்கு வரிசை எண் அமைத்து ஒரு பட்டியலைத் தந்துள்ளார். மேலும் மு. சுவாமிநாத மாதவராயரின் பெரும்பான்மையான விளக்கங்களை ஏற்றுக்கொண்டு அவர் நூலில் உள்ளவாறே பதிவுசெய்துள்ளார். வரலாற்றுச் சிறப்புமிக்க சேதிராயர், காடவராயர் முதலான பட்டங்களுக்கு வரலாற்று நூல்களிலிருந்து கூடுதலாகச் சான்றுகளைக் கொடுத்துள்ளார்.

இங்குக்கூறப்பட்ட பட்டப்பெயர் ஆய்வினை மேலும் விரிவாகக் காண்பதற்கு நிறைய வாய்ப்புக்கள் உள்ளன. ந.மு.வேங்கடசாமி நாட்டாரும் மு. சுவாமிநாத மாதவராயரும் கொண்ட முடிவுகளுக்கு மேலும் அரண் சேர்ப்பதற்கும் புதிய செய்திகளைக் கூறுவதற்கும் இடம் இருப்பதாக உணர்ந்தமையால் "கள்ளர் பட்டப்பெயர்கள் - ஓர் ஆய்வு" என்னும் ஆய்வுப் பொருள் தேர்ந்து கொள்ளப்பட்டது.

## ஆய்வு எல்லை

தலைப்பில் உள்ள கள்ளர் என்பது சோழ நாட்டுக் கள்ளர்களை மட்டுமே குறிக்கும். பட்டப்பெயர்கள் என்பது இவ்வினத்தவர்கள் தம் இயற்பெயரோடு தவறாது சேர்த்து வழங்கும் மழவராயர், முனையரையர் போன்ற சிறப்புப் பெயர்களைக் குறிக்கும்.

இவ்ஆய்வு மேலும் விரிவாக ஆய்வதற்கு இடம் தந்து நிற்கிறது. பல பட்டங்களின் உருவம் சிதைந்து காணப்படுகிறது. இவற்றின் உண்மையான வடிவங்கள் கண்டறியப்பட வேண்டும். பட்டங்களுக்கும் பல ஊர்களுக்கும்

இடையே உள்ள உறவு ஆராயப்படவேண்டும். இம்மக்கள் எங்கிருந்து எங்கே பரவினர் என்பதனைப் பட்டப்பெயர்களைக் கொண்டே கண்டறிய இடம் இருக்கிறது. இன்ன பிற கருதலான விவரங்களைக் கண்டறிய விரிவான ஆராய்ச்சி தேவையாகும். இந்தத் தேவையை இந்த ஆய்வு ஓரளவு நிறைவு செய்கிறது.

இவ் ஆய்விற்கு முதன்மை ஆதாரமாக ந.மு.வேங்கடசாமி நாட்டாரின் கள்ளர் சரித்திரம், மு. சுவாமிநாத மாதவராயரின் சூரியகுலக் கள்ளர் சரித்திரம் ஆகிய நூல்களும், துணை ஆதாரமாகக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், ஆய்வுக் கட்டுரைகள், வரலாற்று நூல்கள், இலக்கியங்கள், கள ஆய்வு, வினாநிரல், நேர்க்காணல் ஆகியவையும் கொள்ளப்பட்டன.

இந்த ஆய்வு பட்டப்பெயர்களின் வரலாற்றுச் சிறப்பினையும் புதைந்து கிடக்கும் பிற உண்மைகளையும் கண்டறிவதனை முதன்மை நோக்கமாகக் கொண்டது. எல்லாப் பட்டங்களையும் விளக்குவதற்குரிய வாய்ப்புக்கள் குறைவாக உள்ளமையால் தெளிவுபடுத்த வாய்ப்பளிப்பன மட்டுமே ஆய்வில் எடுத்துக் கொள்ளப்பெற்றன.

இவ்வாய்வேடு,

1. முன்னுரை
2. கள்ளர் இனம் – ஒரு பொதுப்பார்வை
3. பட்டப்பெயர்கள் – ஒரு பொதுப்பார்வை
4. கள்ளர் பட்டங்களும் பல்லவ மரபினரும்
5. கள்ளரும் சோழரும்
6. கள்ளரும் பிற அரச மரபினரும்
7. கள்ளர் பட்டப்பெயர்களும் ஊர்ப்பெயர்களும்
8. கள்ளர் பட்டப்பெயர்களும் சமூகத்தில் அவற்றின் சிறப்பிடமும்
9. சில பட்டப்பெயர்களின் விளக்கங்கள்
10. முடிவுரை

எனப் பத்து இயல்களாக அமைந்துள்ளது.

மேலும் பின்னிணைப்புக்களையும் கொண்டுள்ளது.

முதல் இயல் ஆய்வேட்டின் முன்னுரையாக அமைந்துள்ளது.

இரண்டாம் இயலில் கள்ளர்களைப் பற்றிய பொதுவான செய்திகள் பற்றிய ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. கள்ளர்களின் வாழ்விடம், மக்கள் தொகை, கள்ளர் என்னும் பெயர் பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள், கள்ளர்களைப் பற்றிய புராணச் செய்திகள், கள்ளர்களிடையே காணும் பிரிவுகள், கள்ளர் நாட்டுப் பிரிவுகள், நாட்டுக் கூட்டம் முதலான செய்திகள் ஆய்வு செய்யப்படுகின்றன.

மூன்றாவது இயலில் பெயர், இயற்பெயர், சிறப்புப்பெயர் பற்றிய பொதுவான மரபுகளும், தமிழ்நாட்டில் பட்டப்பெயரின் தோற்றமும், தொல்காப்பியமும் சங்க இலக்கியங்களும் தரும் செய்திகளும், பல்லவர் பட்டங்களும் சோழர்கால அரசியல் சூழலும் பட்டங்களும் சோழமன்னர்களின் பட்டங்களும் பிறருக்குச் சோழர்கள் வழங்கிய பட்டங்களும் பாண்டியர் கல்வெட்டுக்களில் காணப்படும் பட்டங்களும் பட்டங்களின் பொதுவான அமைதியும் ஆய்வு செய்யப்படுகின்றன.

நான்காவது இயலில், பல்லவர் வரலாறும் பல்லவராட்சியின் சிறப்பும் பல்லவர்க்குரிய பட்டப்பெயர்களும் இப்பட்டப்பெயர்கள் கள்ளர் இனத்தவர் பட்டங்களோடு ஒத்திருக்கும் செய்தியும் படையாட்சிகளின் பட்டங்களுக்கும் கள்ளர் பட்டங்களுக்கும் உள்ள ஒற்றுமையும் அதன் வரலாற்றுச் சிறப்பும் ஆராயப்படுகின்றன.

ஐந்தாவது இயலில் சோழர்களின் தொன்மையும், சோழப் பேரரசின் விரிவும் சிறப்பும், சோழ மன்னரின் சிறப்புப் பட்டங்களும்,

சோழர் கையாண்ட பட்டமளிப்பும், பட்டம் பெற்றோரும் சோழ மன்னர்க்குரிய சில சிறப்புப் பட்டங்களும் கல்வெட்டுக்களில் இடம்பெறும் பல பட்டங்கள் கள்ளர் பட்டங்களோடு ஒத்து இருத்தலின் வரலாற்றுச் சிறப்பும் சோழர் வென்ற நாடுகளுக்கும் கள்ளர் பட்டப்பெயர்களுக்கும் உள்ள உறவும் ஆராயப்படுகின்றன.

ஆறாவது இயலில் அதியமான் மரபினரின் பழைமையும் சங்ககாலம் முதல் சோழர் காலம் வரை இவர்களின் நிலையும் இவர்களின் ஆட்சிச் சிறப்பும் அதியமான் பட்டமுடைய கள்ளர் இருப்பிடம் முதலியனவும் ஆராயப்படுகின்றன. இவ்வாறே மழவராயர், முனையரையர், வாணாதிராயர், முத்தரையர் மலையமான்கள், இருக்கு வேளிர், களப்பிரர் முதலிய அரசமரபினர் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் அவர்களின் ஆட்சிச் சிறப்புக்களையும் கள்ளர் பட்டப்பெயர்களுக்கும் இவர்களுக்கும் உள்ள உறவும் இப்பட்டமுடையார் வாழும் இடம் முதலியனவும் ஆராயப்படுகின்றன.

ஏழாவது இயலில் ஊர்ப்பெயர்களின் வரலாற்றுச் சிறப்பும், ஊர்ப் பெயர் ஆய்வின் இன்றியமையாமையும், கள்ளர் பட்டப்பெயர்களில் ஊர்ப்பெயர்க இவ்வூர்களில் இவர்களுக்குள்ள சிறப்பும் கள்ளர் ஊர்ப்பெயர்கள் காட்டும் வரலாற்றுப் பின்னணியும் இவ்வூர்கள் அமைந்த வட்டாரத்தின் தன்மையும் ஆய்வு செய்யப்படுகின்றன.

எட்டாவது இயலில் கள்ளர் பட்டப்பெயர்கள் கள்ளர் சமூகத்தில் பெறும் சிறப்பிடமும் இப்பட்டப்பெயர்கள் புறமணக்குழுவாக அமைந்திருக்கும் சிறப்புச் செய்தியும் தமிழகத்தில் பெரும்பான்மையாக வாழும் வேறு சில மக்களின் புறமண, அகமண உறவு பற்றிய செய்திகளும் ஆய்வு செய்யப்படுகின்றன.

ஒன்பதாவது இயலில் மக்கள் வழக்கில் பட்டப்பெயர்களில் ஏற்பட்டுள்ள திரிபுகளும் இதனால் இவற்றின் பொருள் விளங்காமையும் பட்டப் பெயர்களின் உண்மையான வடிவங்களும் அவற்றின் பொருளும் பட்டப்பெயர்களைப் பொதுக்கூறு சிறப்புக்கூறு என்ற அடிப்படையில் பிரித்துப் பார்த்தும் பொருள் அறியப்பட்ட செய்தி முதலியனவும் ஆராயப்படுகின்றன.

பத்தாவது இயலான முடிவுரையில் முதல் ஒன்பது இயல்களில் கூறப்பட்ட செய்திகள் சுருக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. மேலும் எதிர்காலத்தில் மேற்கொள்ள வேண்டிய ஆய்வு பற்றியும் சொல்லப்பட்டுள்ளது.

தமிழகத்தில் வாழும் பிராமணர் அல்லாத குடிமக்களில் கள்ளர் என்னும் பெயருடைய இனத்தவர் கணிசமான எண்ணிக்கையில் தமிழகத்தில் வாழ்ந்து வருகின்றனர். 1931 ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட மக்கள் தொகைக் கணக்கின்படி தமிழகத்தில் கள்ளர் இன மக்களின் தொகை 5,10,000 ஆகும்.[1] இம்மக்கள் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி முதலிய மாவட்டங்களில் வாழுகின்றனர். இன்று அவர்களின் எண்ணிக்கை கணிசமான அளவிற்குப் பெருகியிருக்கும் என்பதில் ஐயமில்லை. இம்மக்களுடைய வரலாறு, சமூகம், பண்பாடு முதலிய கூறுகள் பற்றிய ஒரு பொதுவான ஆய்வு இவ்வியலில் மேற்கொள்ளப்படுகிறது.

முதற்கண் இவ்வினத்தாருக்கு அமைந்த கள்ளர் என்னும் பெயரை ஆய்வது வேண்டத்தக்கதாகும். சங்க இலக்கியங்களில் 'கள்வன்' என்று ஒருமையிலும் கள்வர் எனப் பன்மையிலும் பயன்படுத்தப்படும் சொற்கள் உள்ளன. 'அத்தக்கள்வர்' என ஆக்களைக் களவிடுகின்ற மாந்தர் சுட்டப் படுகின்றனர்.[2] 'கள்வன் போலக்கொடியன் மாதோ' என ஒரு தலைவனுடைய கொடுமைக்குத் திருடனுடைய கொடும் பண்பு உவமை கூறப்படுகிறது. இதனால் கள்ளுதல் என்கின்ற சொல்லுக்குப் பிறரை வஞ்சித்து அவர்தம் பொருளைக் கொள்ளுவது என்னும் பொருள் தோன்றக் காணலாம்.

அகநானூற்றில் இரு செய்யுள்களில் இரண்டு தலைவர்கள் கள்வர்களுக்குத் தலைவர்களாகப் பாராட்டப்படுகின்றனர். ஒருவன் வேங்கடமலைப் பகுதியில் ஆட்சிபுரிந்த வீரமும் வண்மையும் மிக்க புல்லி என்பவன். மற்றொருவன் மதுரையில் ஆண்ட தென்னவ் என்பவன் ஆவான். இச்செய்யுள்களில் கள்வர்

என்னும் சொல் கொள்ளையர்களைக் குறிப்பதன்றி ஒரு வகுப்பாரைக் குறிப்பதாக அமையக் காணலாம். சங்கப்புலவர்கள் இவர்களின் வீரத்தையும் வன்மையையும் மனம் உவந்து பாராட்டுவதனால்[3] இவர்களைக் கொள்ளைக் கூட்டத் தலைவர்கள் என்று கொள்வதற்கில்லை. மாறாகக் கள்வர் என்பது ஒரு குடிப்பெயராகக் கொள்ளத்தக்க நிலையில் அமைந்துள்ளது. "வழுவில் வன்கை மழவர் பெரும"[4] என்பதிலும் ஆவியர்கோ[5] என்பதிலும் இடம்பெறும் மழவர், ஆவியர் என்னும் சொற்கள் குடிப்பெயரைக் குறிப்பதுபோல் மேற்கண்ட இடங்களிலும் கள்வர் என்பது குடிப்பெயரையே குறித்தது என்று கொள்ள வேண்டியுள்ளது.

இதனால் கள்வர் என்னும் சொல்லுக்குத் தீய பொருள் ஒன்றே உண்டு எனக் கருதுவது பிழை என்பது தெரிகிறது. மேலும் ஆய்வுக்குரிய இனத்தார் கள்வர் என்றன்றி, கள்ளர் என்றே அறியப்படுகின்றனர். சங்க இலக்கியத்தில் இச்சொல் காணப்படவில்லை. பிற்காலக் கல்வெட்டிலும் கள்ளர் என்றே சுட்டப்படுகின்றனர். எனவே இதனையும் கருத்தில் கொண்டே சிந்திக்க வேண்டியுள்ளது. பிற்காலத்தில் கள்வன், கள்ளன் என்னும் இரண்டுக்கும் ஒரே பொருள் ஏற்பட்டிருந்தாலும் முற்காலத்தில் இதற்கு மாறான நிலையும் இருந்திருக்க இடமுண்டு. கள்ளர் என்பதைக் கள் அர் என்று பிரித்துப் பொருள் கொள்ள இடமிருக்கிறது. இச்சொல், கள்ளை விரும்பி உண்பவர். கள்ளை மிகுதியாகக் கொண்டிருப்பவர் என்ற பொருளை உள்ளடக்கியதாகக் கொள்ளலாம். இச்சொல் பொதுவாக வீரர்களைச் சுட்டுவதாகக் கொள்ளலாம். சங்க இலக்கியத்தில் ஒரு புலவர், ஒரு மன்னனைக் கள்ளை விரும்பி உண்பவன் என்னும் பொருளில் 'கட்காமுறுநன்' என்று பாராட்டுகின்றார்.[6] ஒரு வீரனைப் பாராட்டும்போது இன்னொரு புலவரும் 'கள் வெய்யோன்'[7] என்று புகழ்கின்றார். அரசர்கள் வீரர்களுக்குத் தம் கையால் கள் வழங்குவது பெருமையாகக் கருதப்பட்டது. அரசன் தான் தெளிவை உண்டு கலங்கலைத் தனக்குத் தந்த நிகழ்ச்சியை நன்றியோடு நினைவு

கூர்கிறார்.[8] ஒரு வீரன் வெற்றி பெற்றபோது உண்டாட்டு நடத்திக் கொண்டாடுவது அன்றைய மரபாக இருந்தது. இதனால் உண்டாட்டு என்னும் புறத்துறை அமையலாயிற்று. அரசன் நண்பர்களுடன் கள்ளை உண்டு நாட்காலத்தே அவையில் இருந்தான். இதனை 'நாண்மகிழ் மகிழின்'[9] என்றனர். ஊரின் வளத்திற்குக் கள்ளை மிகுதியாக உண்டமை அடையாளமாகக் கொள்ளப்பட்டது. 'மகிழ்நனை மருகின் மதுரை'[10], 'இன்கடுங் கள்ளின் ஆமூர்'[11] என்னும் இலக்கியச் சான்றுகள் இதனை விளக்கும், இங்ஙனம் கள்ளுக்கும் வீரத்திற்கும் இடையேயுள்ள நெருக்கமான உறவை இலக்கியம் சுட்டிக்காட்டுவதால் கள்ளர் என்கின்ற சொல்லையும் அரசரோடும் வீரரோடும் பொருத்திக் காண்பது தவறாகாது எனத் தோன்றுகிறது.

கள்ளர் சரித்திரம் எழுதிய ந.மு.வேங்கடசாமி நாட்டார், தஞ்சை அறிஞர் வ.கோபாலசாமி ரகுநாத ராசாளியார் கருத்தாக எடுத்துக்கூறும் செய்தி ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. அது வருமாறு:

கள்வன் என்னும் சொல்லுக்குத் திவாகர நிகண்டு கரியோன் என்று பொருள் தருகிறது. பிங்கலந்தையும்இப்பொருளைத் தருகிறது. எனவே கள்வன் என்னும் சொல் கருநிறம் உடையோனைக் குறித்துத் தொன்றுதொட்டு வழங்கி வருவது புலப்படும். ஆரியர், தமிழரைக் கரியவர் என்று இருக்கு வேதத்தில் குறித்தனர். இந்திரனுக்கும்இப்பெயர் உண்டு. சோழனும் கருநிறம் பற்றி மால் என்று அழைக்கப்படுகின்றான். இதனால் இந்திர குலத்தவர் எனினும் கள்வர் குலத்தவர் எனினும் பழங்குடியினரான தமிழர் என்பதே பொருள் என்று துணியப்படுகின்றது.

கள்வர் என்னும் சொல்லுக்குப் பிறர் பொருளை வவ்வுவோர் என்பதோடு பகைவர் என்ற பொருளும் உண்டு. இதற்கு நேரான தஸ்யு

என்னும் சொல்லை வடமொழி, அமரகோசத்தில் சூத்திர வர்க்கத்தில் சோரன் என்னும் பொருளில் வைத்திருப்பதோடு சத்திரிய வர்க்கத்தில் பகைவன் என்னும் பொருளிலும் வைத்துள்ளனர். இதனால் ஆரியர்களால் தமக்குப் பகைவர் என அழைக்கப்பட்ட பழந்தமிழரே கள்வர் என்னும் சொல்லுக்குப் பொருளாய் நிற்கின்றனர்.

இனிச் சீவகசிந்தாமணி 741 ஆம் செய்யுளில் "கள்ளரால் புலியை வேறு காணிய" என்னும் தொடருக்கு 'அரசரைக் கொண்டு சீவகனைப் போர் காண வேண்டி' என நச்சினார்க்கினியர் உரை வகுப்பதை எடுத்துக் காட்டிக் கள்ளர் என்னும் சொல்லுக்கு அரசர் என்னும் பொருள் உண்டு என்று விளக்குகிறார் ந.மு.வேங்கடசாமி நாட்டார். ஆறலைக் கள்வர்களுக்கும் இவர்களுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லை என வலியுறுத்தும்இவ்வறிஞர், பல்லவர், சோழ மன்னரது வழியினராய் இன்றைக்கும் பல இடங்களில் குறுநில மன்னராய் இருந்து வரும் ஒரு பெரிய வகுப்பினர் தமது தீச்செயல் பற்றிப்பிறர் இட்ட பெயரினைத் தமக்குக் குலப்பெயராக ஒருங்கே ஏற்றுக்கொண்டனர் என்பது அறியாமையாகும் என்று விளக்குகின்றார். இதுபற்றி மேலும் முடிவாகக் கூறும் ந.மு.வேங்கடசாமி நாட்டார், "இதுகாறும் கூறியவற்றிலிருந்து கள்வர் அல்லது கள்ளர் என்பவரின் குலப்பெயரின் வரலாறு பலரால் பலவாறு கூறப்படினும் வீரர் என்னும் பொருள் பற்றி அப்பெயர் உண்டாயிற்று என்பதே முற்றிலும் பொருந்தியது எனில் பெறப்படுமாறு காண்க"[12] என்கின்றார்.

தமிழ்நாட்டு அறிஞர்கள் இவ்வாறு கூறினும் மேலை நாட்டு அறிஞர்கள் இவர்களைத் திருட்டுக் கூட்டத்தார் என்பதாகவே விளக்கியுள்ளார் டெய்லர், 1817இல் டி.டர்ன்புல் என்பவர் மதுரை மாவட்டக் கள்ளர்களைப் பற்றிக் கூறும்போது பின்வருமாறு குறிப்பிடுகின்றார். "கள்ளர் என்ற சொல் சாதி,

இனம், நாடு முதலிய வேறுபாடின்றித் திருடர்களைக் குறிக்கப் பயன்படும் சொல்லாகும். இச்சாதியினர் இப்பெயருக்கு உரியவராகத் திருடர் என்ற பெயருக்கு உரியவராகவும், மதுரை அரசன் ஒருவனுக்கு வரி செலுத்துவதிலிருந்து விலக்குப் பெறாத ஒரு காட்டுப் பகுதிக்குத் தலைவர்களாக வளர்ந்தவரும் பரிணாம வளர்ச்சி ஆராயப்பட வேண்டியதாகும்".[13]

நெல்சன் என்னும் அறிஞர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். "தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை ஆகிய மாவட்டங்களிலும் புதுக்கோட்டைப் பகுதிகளிலும் மிகுதியாகக் காணப்படும் நடுத்தர உயரமும் கருத்த நிறமும் உடையவர்கள் கள்ளர்கள். திருட்டு எனப் பொருள்படும் 'கள்ளம்' என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து வந்த பெயரே கள்ளர் எனப் பொதுவாக வழங்கி வருகிறது"[14] டர்ன்புல் என்பவரின் கூற்றை நெல்சன் ஐயுறுகின்றார். ஒபர்ட் என்ற அறிஞரும் திருடர் என்று வழங்கும் பொருளை ஏற்றுக் கொள்கிறார்.

ஒபர்ட், பல்லவர் நாட்டின் தொண்டை மண்டலமே கள்ளர்களின் பழைய நாடாகும் என்று கூறி, இவர்கள் முதலில் படைவீரர்களாக இருந்து பின்னர் அதனைக் கைவிடவேண்டி வந்தவுடன் கொள்ளையில் ஈடுபட்டுத் தங்களுடைய கொள்ளை, திருட்டு ஆகியவற்றால் மற்றவர்களின் வெறுப்புக்கு மிகுதியும் ஆட்பட்டுவிட்டதால் இச்சாதியாருக்குக் 'கள்ளன்' என்ற பெயரே பட்டப்பெயராக நிலைத்துவிட்டது என்கிறார்.[15]

இனி, மக்கள் குலங்களின் தோற்றங்களுக்குச் சூரியன், சந்திரன் முதலிய இயற்கைப் பொருள்களையும் இந்திரன் முதலிய தெய்வங்களையும் அடிப்படையாகக் கூறுகின்ற இந்திய நாட்டின் வழக்கப்படி, கள்ளர்களின் தோற்றத்திற்கு ஒரு புராணக்கதை சொல்லப்பட்டிருக்கிறது. கள்ளர், மறவர், அகம்படியர் என்னும் மூன்று இனத்தவரும் இந்திரனுக்கும் அகலிகைக்கும் பிறந்த

மக்கள் என வழங்கும் புராணக்கதையை அறிவிலார் கூற்று எனக் கடிந்துரைக்கும் ந.மு.வேங்கடசாமி நாட்டார், "தமிழர்களாகிய இவரை இந்திரனுக்கும் அகலிகைக்கும் பிறந்தவர்கள் என்று கூறுவது சிறிதும் சரித்திர இயல்புடையது ஆகாது என்பதே நம் கருத்து"[16] என்று முடிவு கூறுகின்றார்.

இனி, ஞவிந்திர புராணம், கள்ளகேசரி புராணம் என்னும் புராணங்களில் கூறப்பட்ட விவரங்களைக்கூறி, இக்கதைகள் கள்ளர், மறவர், அகம்படியர் என்னும் மூன்று வகுப்பினரும் நெருங்கியதொடர்புடையராய் இந்திர குலத்தவர் என வழங்கப்பட்டு வந்திருக்கின்றனர் என்ற அளவு உண்மை எனக் கொள்ளலாம் எனக்கருத்துத் தெரிவிக்கின்றார். மேலும் மணிமேகலைக் காப்பியம் நாகபுரத்து மன்னனான பூமிச்சந்திரன், புண்ணியராசன் என்னும் நாகஅரசர்களை இந்திர குலத்தார் எனக் கூறுவது கொண்டு மிகப்பழைய நாளில் இந்திர குலத்தினரான நாகர் வழியிலே வந்த பல்லவரின் வழிவந்தமையால் இந்திரகுலத்தினர் என்று வழங்கப்பட்டிருத்தல் கூடும் என்றும் சோழர்களும் இந்திரன் வழியினர் என்பது ஒரு சாரார் கொள்கை என்றும் கூறுகின்றார். சோழர்கள் தம்குல முதல்வனாகிய வேந்தனைத் தெய்வமாகக்கொண்டு வழிபட்டு வந்தனர் என்றும் அவர்கள் இந்திரவிழா நடத்திச் சிறப்புச் செய்தனர் என்றும் அதனாலே அவர்கள் வழியினராகிய கள்ளர் இந்திர குலத்தினர் ஆயினர் என்றும் விளக்குகின்றார். மேலும் முக்குலத்தோர், தேவர் என வழங்கப்பட்டு வருவதையும் எடுத்துக் காட்டுகின்றார்.[17]

இவ்வாற்றால் பண்டுதொட்டு வழங்கியுள்ள இந்திரகுலம் என்னும் வழக்கும் இவ்வகுப்பினருக்குப் பொருத்தமானதென்றே ஏற்படுகிறது. கள்ளர், இந்திர குலத்தார், தேவர், அரையர், நாடாள்வார் என்னும் இவ்வைந்தும் இவ்வகுப்பினரைக் குறிக்கும் பொதுவான பெயர்களாகும். இவற்றுள்ளும் அரையர்

என்பது பல பட்டங்களோடும் கலந்திருத்தலாலும் சரித்திர ஆதரவுடைமையாலும் முற்றிலும் பொருந்தியதோர் பொதுப் பெயராகக் கொள்ளும் பாலது என்று முடிவு செய்கின்றார்.

பல்வேறு அறிஞர்களின் கருத்துக்கள்

வி. கனகசபைப்பிள்ளை, தமிழகத்தில் நுழைந்த தொன்மைக் குடிகளாகிய நாகர்களோடு கள்ளர்களை உறவுபடுத்துகின்றார். இந்தியாவின் தெற்கிலும் கிழக்கிலும் உள்ள தீவுகளில் வாழ்ந்த இவர்கள் தமிழகத்துக்குள் நுழைந்து சில இடங்களைக் கைப்பற்றி ஆண்டிருக்க வேண்டும் என்பது இவருடைய கருத்து ஆகும்.[18]

நீலகண்ட சாஸ்திரி

இவர், கள்ளர்களைப் புதுக்கற்காலத்தைச் சேர்ந்தவர்கள் என்றுகூறி, அவர்கள் நடுநிலக்கடல் இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.[19]

ந.மு. வேங்கடசாமி நாட்டார்

சங்க நாளில் வேங்கடமலைப் பகுதியை ஆண்ட கள்வர் கோமான் புல்லி, காஞ்சியை ஆண்ட பல்லவர்கள், தஞ்சையை ஆண்ட சோழமன்னர்கள் ஆகியவர்களோடு உறவுடைய ஓர் இனம் கள்ளர் இனம் என்பதும் அவர்கள் நாடாண்ட பரம்பரையினரே யன்றிச் சிலர் கருதியதைப்போல் திருட்டையே தொழிலாகக் கொண்டவர்கள் அல்லர் என்பதும் ந.மு. வேங்கடசாமி நாட்டாரின் கருத்தாகும்.[20]

மு.சுவாமிநாத மாதவராயர்

கள்ளர் இனத்தவர்கள் புகழ் வாய்ந்த சோழ மன்னர்களின் கால்வழியினர் என்பது மு.சுவாமிநாத மாதவராயரின் கருத்தாகும். இவர் வேளிர், பல்லவர், நாகர் ஆகிய யாவரும் சோழரோடு உறவுடையார் என்னும் கருத்துடையவர் ஆவார்.[21]

கிருட்டிணசாமி ஐயங்கார்

கிருட்டிணசாமி ஐயங்கார் சொல் ஆராய்ச்சி அடிப்படையில் கள்ளர், களப்பிரர் என்னும் சொல் ஒற்றுமைகொண்டு கள்ளர்களை, மூவேந்தர்களை வென்ற களப்பிரர்களோடு உறவுபடுத்துகின்றார். கள்வர் அல்லது களவர் என்னும் தமிழ்ச் சொல் களபர் என்று கன்னடமொழியில் வழங்கும் என்றும் அது வடமொழியில் களப்ர என மருவியிருக்கக்கூடும் என்றும் இவர் கருதுகின்றார்.[22]

வ.வேணுகோபால்

புதுக்கோட்டை தொண்டைமான்களைப் பற்றி ஆராய்ந்த வ.வேணுகோபால் இதே கருத்துடையவராகக் காணப்படுகின்றார். கள்ளர், கள்வர், களவர், களப்பிரர், களப்பாளர், களபரு என்பவை யாவும் ஓரினம் என்றே கருத வேண்டும் என்பது இவருடைய கருத்தாகும்.[23]

பிற்காலச் சோழர் வரலாறு என்னும் நூலாசிரியர் தி.வை.சதாசிவ பண்டாரத்தார், களப்பாளர் என்பார் தமிழ்ச் சிற்றரசருள் ஒருவர் என்றும் களப்பிரர் என்பார் அயலவர் என்றும் முதலில் கருதினார்.[24] வேள்விக்குடிச் செப்பேடும் தளவாய்புரச் செப்பேடும் கூறும் செய்திகளைக் கொண்டு களப்பிரரும் களப்பாளரும் ஒருவரே என்ற முடிவுக்கு வந்தார்.

தமிழகத் தொல்லியல்துறை இயக்குநர் நடன.காசிநாதன் பொன்னிவாடி கல்வெட்டைக் கொண்டு களப்பிரரும் களப்பாளரும் ஒருவரே எனத் தெரிவிக்கின்றார். இக்கல்வெட்டில் "கலி நிருப கள்வனாயின கோக்கண்டன் ரவி" குறிக்கப்படுகின்றான். வேள்விக்குடிச் செப்பேடும் களப்பிரரைக் கலியரசன் என்றே குறிப்பிடுகின்றது என்பதையும் எடுத்துக்காட்டியுள்ளார்.[25]

ஜே.எச்.நெல்சன், கள்ளர்கள் குறும்பர் இனத்தவர் என்றும் இவர்கள் தொண்டைமண்டலத்தில் ஆடுமாடு மேய்த்து வாழ்ந்தவர் என்றும், ஆதொண்டை மன்னனால் துரத்தப்பட்டுத் தெற்கு நோக்கி வந்து பாண்டிய நாடு வரை குடியேறியவர் என்றும் கருதுகின்றார். தொண்டை மண்டல நாடு என்னும் ஆட்சிப் பிரிவு பாண்டிய நாட்டிலுள்ள கள்ளரிடையே வழக்கில் இருப்பது இக்கருத்தை உறுதிசெய்யும் எனக் கருதினார்.[26]

ஜே.எச்.நெல்சன் என்பாரும் டெய்லர் கூறிய கருத்துக்களையே ஏற்றுக் கொள்கிறார்.[27]

அண்மையில் கள்ளர்களைப் பற்றி ஆய்ந்து கண்ட 'கில்பர்ட் பிளாக் பேர்ன்' என்பவர் கள்ளர்குடி குற்றப் பரம்பரைச் சாதி என்று கூறப்பட்ட கருத்தை மறுஆய்வு செய்யவேண்டும் என்ற கருத்தைத் தெரிவிக்கின்றார்.[28]

மக்கள் தொகைக் கணக்கில் இவர்கள் உழவுத் தொழில் செய்பவராகவே பதிவு செய்யப்பட்டிருப்பதை இவர் எடுத்துக்காட்டுகின்றார். தம் ஆராய்ச்சியின் முடிவாக இவர்கள் தமிழ்நாட்டின் பழங்குடி மக்கள் என்றும் பரவலாக வாழுகின்ற உழவர் குடியினர் என்றும் நாடு காவல் தொழிலும் அவர்களுக்கு உரியது என்றும் கூறுகின்றார். அவர்களுடைய நாடு, அம்பலக்காரர் என்றும் சமூக நிறுவனங்கள் தன்னுரிமை வாய்ந்த ஒரு சமூகமாக அவர்களை ஆக்கின என்றும் பெரும்பாலும்

மதுரை நாயக்கர்களுடைய ஆட்சியிலிருந்து தனித்து வாழக்கூடிய இனமாக ஆக்கிற்று என்றும் கூறுகின்றார். இந்தத் தன்னுரிமைத் தன்மையே ஆங்கில அரசுக்கும் இவர்களுக்கும் இடையே மோதலை உருவாக்கிற்று என்கின்றார்.

1979 ஆம் ஆண்டில் அ. தட்சிணாமூர்த்தி 'தமிழ்நாடும் கள்ளரும்' என்னும் கட்டுரையையும் 'கள்ளர் பட்டப் பெயர்களும் அரசமரபினரும்' என்னும் கட்டுரையையும் 1992 ஆம் ஆண்டு 'கள்ளரின் பட்டப்பெயர்கள் – ஒரு வரலாற்று ஆய்வு' என்னும் கட்டுரையையும் எழுதி வெளியிட்டார். இக்கட்டுரைகளில் கள்ளர் என்போர் சங்ககாலம் முதற்கொண்டு தமிழகத்தை ஆண்ட பல அரசமரபினரோடும் உறவுடைய ஓர் இனத்தவர் என்னும் கருத்தினை வலியுறுத்தியுள்ளார்.

<u>கள்ளர்களிடையே காணப்படுகின்ற பிரிவு</u>

தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டைப் பகுதிகளில் வாழும் கள்ளர்களைச் சோழநாட்டுக் கள்ளர்கள் என்றும், பாண்டிய நாட்டுப் பகுதிகளில் வாழும் கள்ளர்களைப் பாண்டிய நாட்டுக் கள்ளர்கள் என்றும் இரண்டு பிரிவாகப் பிரிக்கலாம். சோழநாட்டுக் கள்ளர்கள் நூற்றுக்கணக்கான பட்டப்பெயர்களைத் தாங்கி வருகின்றனர். பாண்டிய நாட்டுக் கள்ளர்கள் தேவர் அல்லது அம்பலம் என்னும் பட்டப்பெயர் கொண்டவர்களாக விளங்குகின்றனர். இவர்கள் நாடு, நாட்டின் உட்பிரிவுகளைக் கொண்டு பிரித்து அறியப்படுகின்றனர். அவை வருமாறு:

1. மேல்நாடு, 2. சிறுகுடிநாடு, 3. வெள்ளூர் நாடு, 4. மல்லாக்கோட்டை நாடு, 5. பாகனேரி நாடு, 6. கண்டர்மாணிக்கம் அல்லது கண்ணன் கோட்டை நாடு, 7. கண்டதேவி நாடு, 8. புறமலைநாடு,

9. தென்னிலை நாடு, 10. பழைய நாடு என்பன. புறமலை நாட்டுத் தலைவரை ஆயர் முடிசூட்டுவது வழக்கம். மேல்நாடானது வடக்குத் தெரு, கிழக்குத் தெரு, தெற்குத் தெரு என்று மூன்று உட்பிரிவுகளையுடையது. சிறுகுடி நாட்டின் உட்பிரிவுகளாக ஆண்டி, மண்டை, அய்யனார், வீரமாகாளி என்ற தெய்வங்களின் பெயர்கள் விளங்குகின்றன. வெள்ளூர் நாட்டின் உட்பிரிவுகளாக வேங்கைப்புலி, வெக்காளிப்புலி, சாமிப்புலி, சம்மட்டி மக்கள், திருமான், சாயும் படை தாங்கி என்பன போன்றவை விளங்குகின்றன. சிவகங்கைச் சீமையில் பதினான்குநாடுகள் உள்ளன. ஆண்டிற்கு ஒரு முறை பதினான்கு நாடு களின் தலைவர்களும் சுவர்ணமூர்த்தி சுவாமி திருவிழாத் தொடர்பாகக் கண்டதேவியில் கூடுவது வழக்கம். உஞ்சனை, செம்பொன்மாரி, இரவுச்சேரி, தென்னிலை என்ற நான்கு நாடுகளும் சிவகங்கைச் சமீனில் மற்றொரு பகுதியாகும். இவையன்றி, பட்டமங்கல நாடு, குன்னங்கோட்டை நாடு, திருவாதவூர் நாடு, கீழக்குடி நாடு என மேலும் நான்கு நாடுகள் உள்ளன. பாண்டிநாட்டுக் கள்ளர்கள் நாட்டார்கள்ளர், புறமலைக் கள்ளர் என மேலும் இருபிரிவினராக விளங்குகின்றனர்.

சோழநாட்டுக் கள்ளர் நாடுகளாக, எஸ்.குமாரசாமி மேற்கொண்டார் செப்புப் பட்டயத்திலுள்ள கள்ளர் நாடுகளின் பெயர்களைக் குறிப்பிடுகின்றார். அவை தந்திநாடு, மனைபள்ளி நாடு, அய்யூர் நாடு, செங்குள நாடு, மேல் செங்குள நாடு, கீழ் செங்குள நாடு, புளியூர் நாடு, செங்களி நாடு, பிரம்பை நாடு, கானம் பூண்டி நாடு, சித்தர்குடி நாடு, மேலமகாநாடு, கீழ்வேங்கை நாடு, குலமங்கல நாடு, சித்த பத்து நாடு, பனையக்கோட்டை நாடு, காசாங்கோட்டை நாடு, தென்னம நாடு, ஒக்கு நாடு, உரத்தநாடு, பட்டுக்கோட்டை வளநாடு, கறப்பிங்கா நாடு, அஞ்சு வண்ணப் பத்து நாடு, கல்லாக்கோட்டை நாடு, ஐயலூர் நாடு, தென்பத்து நாடு, மத்தச் செருக்குடி நாடு, அன்னவாசல் பத்து நாடு, குன்னுவாரந்தய நாடு, கோட்டைப் பத்து

நாடு, பிங்கலக்கோட்டை நாடு, மேலபத்து நாடு, பெரிய சுத்தப்ப நாடு, அமரந்தாங்கி கீழாநெல்லி நாடு, வடூர் நாடு, திருமங்கலக்கோட்டை நாடு, பாப்பாநாடு, முசிறி நாடு, பிள்ளையூர் நாடு, விற்குடி நாடு, அம்பு நாடு, ஆலங்குடி நாடு, நிசிலி நாடு, நாலு நாடு, காசாநாடு, கோனூர் நாடு, சுந்தரநாடு, மருங்கை நாடு, வாகரை நாடு, நீர்வதி நாடு, வாராப்பூர் நாடு, பெருங்களூர் நாடு, வித்தி நாடு, வத்தனாக்கோட்டை நாடு, தென்மலை நாடு, வடமலை நாடு, குண்டாக்கோயில் நாடு, சோத்துப்பாளை நாடு, மின்னாத்தூர் நாடு, தொடியூர் நாடு, அண்டக்குள நாடு, செருவாசல் நாடு, திருப்பத்து நாடு, அஞ்சிநில நாடு, ஆமையூர், காவிக் கோவல் நாடு, வல்ல நாடு, மாலை நாடு, என்பனவாகும். அவ்வாறே பல நாடுகளும் அந்த நாடுகளுக்கு உரிய முதற்களரையும் பற்றிய விவரங்கள் கிடைத்துள்ளன.

கள்ளர் நாடுகளில் நாட்டாண்மைக் காரர்களுக்கு உரிய செல்வாக்கு குறிப்பிடத்தகுந்ததாகும். யாதேனும் ஒரு கோயிலை மையமாக வைத்து நாட்டில் வாழும் கள்ளர்களின் சமூக வாழ்க்கை நிலவுகிறது. கள்ளர் நாடுகளில் நடைபெறும் நாட்டுக்கூட்டங்கள் சிறப்பு மிக்கவையாகும். அவர்களின் சமூக வாழ்க்கையில் இவை மிகச்சிறப்பான இடம் வகிக்கின்றன. இவற்றின் நடைமுறைகளைப் பற்றி ஆராய்வதற்கு இது ஏற்ற இடம் அன்று.

சோழநாட்டுக் கள்ளர்களைப் பொறுத்தவரையில் சில சிறப்பான செய்திகளைக் கருத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது. 17 ஆம் நூற்றாண்டில் புதுக்கோட்டையில் தொண்டைமான்கள் தம்முடைய ஆட்சியைத் தொடங்கினர். இந்திய நாடு விடுதலை பெறும்வரை தொண்டைமான்களின் ஆட்சி புதுக்கோட்டையில் நிலவிற்று என்பது யாவரும் அறிந்த செய்தியாகும். சோழ நாட்டின் தலைநகராகிய தஞ்சையைச் சார்ந்த 13 சமீன்தார்களில் 11 பேர் கள்ளர் சமூகத்தைச் சேர்ந்தவர்களாகவே அறியப்படுகின்றனர்.

சோழர் ஆட்சி நிலை தளர்ந்த பின்பு சோழ நாடு முழுவதும் நாடுகளாகவும் கூற்றங்களாகவும் பிரிக்கப்பட்டு அரையர் என்றும் நாடாள்வார் என்றும் பெயர் பெற்ற கள்ளர்குலத் தலைவர்களால் ஆளப்பட்டன என்பதை ந.மு.வேங்கடசாமி நாட்டார் குறிப்பிடுகின்றார்.[29] 7 கூற்றங்களும் 18 நாடுகளும் பற்றிக் கூறும் ஒரு பழைய ஏட்டில் சேதிராயர், கலிங்கராயர், வாணாதிராயர், கொங்குராயர், விசயராயர், கனகராயர், கொடுமளூர்ராயர் என்னும் அரையர்களின் பெயர்கள் காணப்படுகின்றன.

இன்றளவும் திருச்சிராப்பள்ளிப் பகுதியில் நாடாள்வார் என்னும் கள்ளர் இனத்தார் வாழ்கின்றனர். பல ஊர்கள் கள்ளர் இனத்தவர் பூண்டுள்ள பட்டப்பெயர்களால் அறியப்படுகின்றன. இச்சான்றுகளைக் கொண்டு கள்ளரில் பலர் அரசர்களாக இருந்து ஆண்டனர் என்ற செய்தியை நன்கு அறியமுடிகின்றது.

இனி, இத்தகைய சிறப்புமிக்க கள்ளர் இனத்தவர் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட அறிஞர்களில் பெரும்பாலோர் பாண்டிய நாட்டுக் கள்ளர்களைப் பற்றிய ஆய்விலேயே பெருங்கவனம் செலுத்தியுள்ளனர். 'தென்னிந்திய குலங்களும் குடிகளும்' பற்றிய நூலில் கள்ளர் பற்றிய தகவல்களைத் தரும் தர்ஸ்டன் பெரிதும் பாண்டிய நாட்டுக் கள்ளர் பற்றியே விவரித்துச் செல்கின்றார். தஞ்சாவூர் கள்ளர்களைப் பற்றி மிகக் குறைவான விவரங்களையே தருகிறார் என்பது குறிப்பிடத்தகுந்தது. புறமலைக் கள்ளர்கள் தமக்கேயுரிய புதுமையான பழக்கவழக்கங்களைக் கொண்டு இனக்குழுத் தன்மையோடு விளங்குவதனால் மேலைநாட்டு அறிஞர்கள் அவர்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்தனர் என்று கருதத் தோன்றுகிறது.

சோழநாட்டுக் கள்ளர்கள் பற்றிய ஆய்வில் மிக இன்றியமையாது இடம் பெறவேண்டியது அவர்களிடையே வழங்குகின்ற பட்டப் பெயர்களேயாகும்.

இப்பட்டப் பெயர்கள் குடும்பப் பெயர்களாக அமைந்து இயற்பெயரோடு சேர்த்து வழங்கப்படுகின்றன. இப்பட்டப்பெயர்கள் பற்றிய ஆய்வு தேவையான அளவிற்கு மேற்கொள்ளப்படவில்லை. மேலைநாட்டு அறிஞர்கள் இப்பட்டப்பெயர்கள் பற்றி முழுமையாக அறிந்துகொள்வதற்கு அந்நாளில் வாய்ப்பில்லை என்று தெரிகிறது. அதனால்தான் அவர்களுடைய ஆய்வில் பட்டப்பெயர்களைப் பற்றிய சிந்தனை மிகமிகச் சிறிய அளவிலேயே காணப்படுகிறது. கள்ளர்களைப் பற்றி ஆராயும் தர்ஸ்டன் மதுரைக் கள்ளர்களைப் பற்றி விரிவாக ஆய்ந்த பிறகு தஞ்சாவூர் கள்ளர்களில் ஒரு பிரிவினர் தங்கள் வகுப்புக்களுக்குப் பல்லவராசா, தஞ்சாவூர் ராசா, தெற்கை வென்றவன், வல்லமையுடைய மன்னன் என்பன போன்ற பலவகை உயர் பட்டப்பெயர்களை உடையவர்களாக உள்ளனர் என்று சுருக்கமாக முடித்து விடுகின்றார். ஒரு பிரிவினர் என்று கூறுவதிலிருந்து இவருக்கு, கள்ளர்கள் வழிவழியாகப் பூண்டு வரும் பலநூறு பட்டங்களை அறிய முடியவில்லை என்று தெரிகிறது.

சோழநாட்டுக் கள்ளர்களின் தோற்றத்தையும் வரலாற்றையும் அவர்களின் முற்காலத்து நிலைமையையும் உணர்வதற்கு அவர்களுடைய பட்டப் பெயர்களிலும் வலிமையான சான்றுகள் இல்லை. எனவேதான் ந.மு.வேங்கடசாமி நாட்டாரும், மு.சுவாமிநாத மாதவராயரும் பட்டப்பெயர் ஆராய்ச்சியில் தம் கருத்தைச் செலுத்துவார் ஆயினர். இலக்கியங்களையும் கல்வெட்டுக்களையும் செப்பேடுகளையும் நடைமுறையிலுள்ள பட்டங்களையும் ஒருங்கு வைத்து ஆய்ந்து தம்முடிவுகளை வெளியிட்டனர்.

மு.தியாகராச நாட்டாரும், மு.பஞ்சநதநாட்டாரும் தொகுத்துக் கொடுத்த 348 பட்டப்பெயர்களை அடிப்படையாக வைத்துக் கள்ளர் சரித்திரம் ந.மு.வேங்கடசாமி நாட்டாரால் வரையப்பட்டது. இப்பட்டியல் முழுமையானது அன்று. தமிழ் நாடு முழுவதும் பரவி வாழும் கள்ளர்களுடைய

அனைத்துப் பட்டங்களையும் கள ஆய்வின்மூலம் கண்டறிந்து உருவாக்கப்பட்டதாக இப்பட்டியலைக் கொள்ள முடியாது. இப்பட்டியல் முழுமையானது அன்று என்னும் உண்மையை வேங்கடசாமி நாட்டார் தம்முடைய நூலில் ஒப்புக்கொண்டு, "கள்ளர் வகுப்பினருக்கு வழங்கும் பட்டங்களை இப்புத்தகத்தின் இறுதியில் காணலாம். யாம் அறியலாகாத பட்டங்கள் பல இன்னும் இருத்தல் கூடும். வேறு எவ்வகுப்பினுள்ளும் இத்துணை மிகுதியான பட்டப்பெயர்கள் இருப்பதாக யாம் விசாரித்த அளவில் வெளியாகவில்லை" என்று எழுதுகின்றார்.

கல்வெட்டுக்களில் காணப்படுகின்ற சில பட்டப்பெயர்களைக் கண்ணுற்ற ந.மு.வேங்கடசாமி நாட்டார் அவையும் கள்ளருக்கு உரியனவோ என்று ஐயுற்ற நிலையில் பின்வருமாறு எழுதுகின்றார். கனகராயன், களப்பாளராயன், குருகுலராயன், சம்புவராயன், தமிழதரையன், பங்களராயன், மன்றாடி, மீனவராயன், மூவராயர் கண்டன், மூவேந்தரையன், வங்கத்தரையன், வாணுவராயன், விலாடத்தரையன், விழுப்பாதராயன் முதலியனவும் கள்ளர்க்குரியனவாக இருப்பினும் இருக்கலாம். இப்பட்டங்களுடையார் எங்கிருக்கின்றனர் என இப்பொழுது எமக்கு அறிய வாராமையினால் இவை இன்னார்க்கு உரியவெனத் துணிந்து உரைப்பதற்கில்லை.

ந.மு.வேங்கடசாமி நாட்டார் தம் இளவல்கள் இருவர் திரட்டிக் கொடுத்த பட்டங்களை அடிப்படையாகக் கொண்டு தம்ஆய்வை மேற்கொண்டார். எனின் மு.சுவாமிநாத மாதவராயர் கள்ளர் பற்றுக்களைநேரிற் கண்டு ஆங்காங்கு உள்ளாரை உசாவி அறிந்து நாட்டார் நூலில் காணப்படும் பட்டங்களினும் மிகுதியானவற்றை அவற்றின் பல்வேறு திரிந்த வடிவங்களோடு பதிவு செய்துள்ளார். போக்குவரத்து வசதிகள் இன்றுபோல் பெருகிஇராத அந்நாளில் பட்டப்பெயர்களைத் திரட்டுவது என்பது மிக அரிதான செயல் என்று அறிவது ஒத்துக்கொள்ளக்கூடியதே. இன்றும்கூட மேற்சொன்ன அறிஞர்கள்

தந்த பட்டியலைக் கொண்டே ஆராய்ச்சிகள் செய்யப்படுகின்றனவேயன்றித் தமிழகம் தழுவிய நிலையில் பட்டப்பெயர் ஆராய்ச்சி மேற்கொள்ளப்படவில்லை. இவ்வாய்வாளர் புதுக்கோட்டைப் பகுதியில் கள ஆய்வின்மூலம் பல புதிய பட்டப்பெயர்களைத் திரட்டியுள்ளார். இத்தகைய முயற்சி ஏனைய பகுதிகளிலும் எதிர்காலத்தில் செய்யப்படவேண்டும்.

ந.மு.வேங்கடசாமி நாட்டார், மு.சுவாமிநாத மாதவராயர், ஆகியோருடைய நூல்களையும் அ.தட்சிணாமூர்த்தி எழுதிய கட்டுரைகளையும் பயன்படுத்தித்தமிழ்நாடு, அறநிலையத்துறை ஆணையராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற உ.சுப்பிரமணியன் கள்ளர் பட்டப் பெயர்களைத் தொகுத்து அகர வரிசைப்படுத்தி ஆய்வாளருக்கு உதவியான ஒரு பட்டியலை வெளியிட்டார். இவற்றின் அடிப்படையில் தஞ்சை வழக்கறிஞர் புலமை.வேங்கடாசலம் கள்ளர் பட்டப்பெயர்களின் பட்டியல் ஒன்றையும் வெளியிட்டுள்ளார். இப்பட்டியல் உ.சுப்பிரமணியன் வெளியிட்ட பட்டியலிலும் வேறானது அன்று. பட்டப் பெயர்களுக்கு வரிசை எண் இட்டிருப்பது ஒன்றே இப்பட்டியலில் காணத்தகும் புதுமையாகும். இவருடைய நூலில் மு.சுவாமிநாத மாதவராயருடைய பெரும்பான்மையான விளக்கங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டு அவரது நூலில் உள்ளவாறே பதிவு செய்யப்பட்டுள்ளன. வரலாற்றுச் சிறப்புமிக்க சேதிராயர், காடவராயர் முதலான பட்டங்களுக்கு வரலாற்று நூல்களிலிருந்து கூடுதலான சான்றுகளை இவர் கொடுத்துள்ளார்.

## நாட்டுக்கூட்டம்

நாட்டுக் கூட்டத்தின் இயல்பு தஞ்சை மாவட்ட அரசு இதழில் (1906) பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

"கள்ளர் நாடுகளில் கிராமப் பஞ்சாயத்து வழக்கமாக இருந்து வந்தது. வேளாளர் பழக்கத்தைப் பின்பற்ற ஆரம்பித்தமையால் இது நின்று விட்டது. கிராமத்தில் முக்கியமானவர் அம்பலகாரர் எனப்படுவார். இவர் ஊரிலுள்ள சில்லறைச் சச்சரவுகளைத் தீர்த்து வைப்பார். ஏனையரில் மேலானவராகக் கொள்ளப்படுவார். சில சமயங்களில் பல கிராமப் பஞ்சாயத்தார்கள் ஒன்றுகூடிப் பொதுக்காரியங்களை ஆராய்வதுண்டு"[30]

கள்ளர் நாடுகளில் உள்ள ஒவ்வொரு ஊரிலும் அம்பலக்காரர் அல்லது நாட்டாண்மைக்காரர் தலைவர்களாக விளங்குவர். இவர்களைக் காரியக் காரர் என்றும் சொல்வதுண்டு. ஊரிலுள்ள வழக்குகளை அம்பலக்காரரிடம் தெரிவித்தால் அவர் நடுவுநிலைமை தவறாது உண்மையைக் கண்டறிந்து அவ்வழக்கைத் தீர்த்து வைப்பார். வழக்கில் தொடர்புடையோர் அத்தீர்ப்புக்குக் கட்டுப்படுவர். அம்பலக்காரர் என்னும் உரிமை பரம்பரையாகத் தொடர்ந்து வருவதாகும். அம்பலக்காரருக்கு வாரிசு இல்லாத நிலையில் அவரைச் சார்ந்த தகுதியுடைய மற்றொருவரை ஊர்மக்கள் தேர்ந்தெடுப்பர். அம்பலக்காரர் வறுமையால் எளிய நிலையை அடைந்தாலும் அவரது உரிமை பழுதாகாது. சில நேரங்களில் பெண்களும் அவ்வுரிமையை வகித்து வந்துள்ளனர். ஒரு நாட்டிலுள்ள ஒவ்வொரு ஊர் அம்பலக்காரரும் ஆண்டிற்கு ஒருமுறை கூடுவர். இக்கூட்டம் நாட்டுக்கூட்டம் அல்லது மகாநாடு எனப் பெயர் பெறும். நாட்டின் முதற்கரை அல்லது தலைமைக் கிராமத்தில் உள்ள அம்பலக்காரர் மற்றைய ஊர்களின் தலைவர்களுக்கு நாட்டுக் கூட்டத்திற்கான நாள் குறிப்பிட்டுத் திருமுகம் அனுப்புவர். நாட்டின் பொதுத்தலத்தில் குறிப்பிட்ட நாளில் கூட்டம் தொடங்கும்.

ஒவ்வொரு நாட்டில் அல்லது அந்நாட்டிற்கு உட்பட்ட பகுதியில் ஏதேனும் ஒரு தெய்வம் இருக்கும். அத்தெய்வத்திற்குக் காப்புக்கட்டித் திருவிழா செய்வதற்காகப் பெரும்பாலும் நாட்டுக்கூட்டம் கூடும். அக்கூட்டத்திலேயே

நாட்டிற்கு உட்பட்ட கிராமப் பொதுவழக்குகள் எல்லாம் கொண்டு வரப்பட்டு முடிவு செய்யப்பெறும். ஏரி, குளம், வாய்க்கால், எல்லைப்புறம் போன்ற பலவகையான வழக்குகளும் இரண்டு கிராமத்திற்கு இடையே உள்ள சச்சரவுகளும் அங்கு விவாதிக்கப்பட்டு முடிவு செய்யப்பெறும். இக்கூட்டத்திற்குப் பெருந் திரளாக மக்கள் கூடுவதும் உண்டு. எனினும் வேடிக்கை பார்ப்பதைத் தவிர இடையே யாரும் பேசுதல் செய்யார். அம்பலக்காரர் மட்டுமே பேசி முடிவு செய்தல் வேண்டும். மிகுதியான வழக்குகள் இருப்பின் கூட்டம் தொடர்ச்சியாகப் பல நாட்கள் நடைபெறுவதும் உண்டு. வழக்குகள் அனைத்தும் தீர்ந்த பின்னரே திருவிழா உறுதி செய்யப்படும். நாட்டுக்கூட்டத்தின் தீர்ப்புகள் அனைத்தும் வாய்மொழியாகவே அமையும். அத்தீர்ப்பிற்கு அனைவரும் கட்டுப் பட்டு நடப்பர். இவ்வாறு ஊர்வழக்குகளெல்லாம் அவ்வூர்த் தலைவர்களாலும் நாட்டு வழக்குகளெல்லாம் நாட்டுக் கூட்டங்களாலும் தீர்க்கப்பட்டு வந்தன. எந்தவிதப் பொருட் செலவும் இன்றிப் பல வழக்குகள் தீர்க்கப்பட்ட செய்தி மிகவும் வியப்பைத் தருவனவாக அமைந்துள்ளது.[31]

<u>தொகுப்புரை</u>

1. இவ்வியலில் கள்ளர் என்னும் சொல் பற்றிய ஆய்வுச் செய்திகள் கூறப்பட்டுள்ளன.
2. கள்ளர்களைப் பற்றிய வெளிநாட்டு, உள்நாட்டு அறிஞர்களின் பல்வேறு கருத்துக்கள் தரப்பட்டுள்ளன.
3. சோழநாட்டு கள்ளர்களுக்கும் பாண்டிய நாட்டுக் கள்ளர்களுக்கும் உள்ள வேறுபாடு சுட்டப்பட்டுள்ளது.
4. கள்ளர் நாடுகளின் பிரிவுகள் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.
5. நாட்டுக் கூட்டம் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கக் குறிப்புகள்



1. Census of India, 1931, Book 17, Madras Part-II, Tables, p.307.
2. அகம். பாடல் 7.
3. மேற்படி., பாடல் 61, 342.
4. புறம். 90.
5. புறம். 147.
6. புறம். 238.
7. புறம். 258.
8. புறம். 298.
9. புறம். 123.
10. சிறுபாணாற்றுப்படை வரி. 67.
11. புறம். 80.
12. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், பக். 40-42.
13. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், ப.72.
14. மேற்படி, ப.81.
15. மேற்படி.,
16. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், பக். 42-43.
17. மேற்படி., பக். 43-44.
18. V. Kanakasabai, The Tamil Eighteen Hundres Years Ago, p.43
19. K.A.Nilakanda Sastri, A History of South India, p.59.
20. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், பக். 13-15, 33.
21. மு.சுவாமிநாத மாதவராயர், சூரியகுல கள்ளர் சரித்திரம், பக்.1-2, 6, 42.

22. S. Krishnaswami Aiyangar, Ancient India and South Indian History, pp.482-483.

23. வ.வேணுகோபால், சோழப் பேரரசு வழியில் சுதந்திரத் தமிழரசு நிறுவிய புதுக்கோட்டைப் பேரரசர் தொண்டைமான் வேந்தர்வழி ஆராய்ச்சி, ப.41.

24. தி.வை.சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, ப.33.

25. நடன.காசிநாதன், களப்பிரர், ப.30.

26. தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், ப.81.

27. மேற்படி., ப.82.

28. "The Kallars A Tamil Criminals Tribe Reconsidered." Stuart Blackburn, A Journal Published from Australia, July 8th, 1980.

29. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், ப.47.

30. மு. இராகவையங்கார், கள்ளர் சரித்திரம், ப.76.

31. மேற்படி., பக்.77-78.

மன்னர்கள், தமக்குக்கீழ் அமைச்சராகவோ படைத்தலைவராகவோ பணியாற்றுவோருக்கு அவர்தம் பணிகளைப் பாராட்டிப் பரிசுகளும் பட்டங்களும் வழங்குவது தமிழகத்தில் பண்டைக்காலம் முதல் வழக்கில் இருந்து வந்துள்ளது. தமிழில் தோன்றிய தொன்மையான இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் இவ்வழக்கம் பற்றிய குறிப்பு, 'மாராயம் பெற்ற நெடுமொழியானும்'[1] என்னும் நூற்பாவால் உணர்த்தப்படுகிறது. இதற்கு, 'வேந்தனால் சிறப்பெய்திய அதனால் தானேயாயினும் பிறரேயாயினும் சொல்லும் மீக்கூற்றுச் சொல்' என்று விளக்கம் அளிக்கின்றார் இடைக்காலத்து உரையாசிரியர் சேனாவரையர். இதனால் மாராயம் என்பது அரசனால் அளிக்கப்படும் ஒருவகைச் சிறப்புப் பெயர் என்றும் அதனைப் பற்றிய உலகோரின் பாராட்டுரை நெடுமொழி எனப்பட்டது என்றும் அறியப்படுகின்றது. தானேயாயினும் பிறரேயாயினும் என்னும் குறிப்பால் வேந்தனால் சிறப்பெய்தியோர் வேண்டும் இடங்களில் தம் சிறப்பைத் தாமே எடுத்துக் கூறுதல் அனுமதிக்கப்பட்டதென்று தெரிகின்றது.

தொல்காப்பியத்தில் மாராயம் என்ற தொடர் இருப்பினும் எத்தகைய பட்டங்களை இப்பெயர் உள்ளடக்கியது என்பது விளங்கவில்லை. எனினும் உரையாசிரியர்கள் ஏனாதி, எட்டி, காவிதி என்னும் பட்டங்களைக் குறிப்பிடுகின்றனர். சங்கப் பாடல்களில் எட்டி என்னும் பெயர் காணப்படவில்லை. 'தொன்மை சான்ற காவிதி மாக்களும்'[2] என்பது மதுரைக்காஞ்சியில் இடம்பெறும் குறிப்பாகும். இவர்கள் அரசனிடம் பெருஞ்செல்வாக்குப் பெற்றோர் என்றும் நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து அவர்களை அடக்கும் தகுதிபெற்றோர் என்றும் அறிய முடிகின்றது. இதனால் இவர்கள் உடல்வலிமையாலன்றி அறிவு வலிமையால் சிறப்பெய்தியோர்

என்று கருதலாம். ஏனாதி என்னும் பட்டம் சங்க இலக்கியங்களில் கலித்தொகையில் மட்டுமே காணக்கிடக்கின்றது. அதில் இடம்பெறும் ஏனாதிப்பாடி என்னும் குறிப்பினால் ஏனாதிப் பட்டம் பெற்றவன் பெயரால் ஒரு குடியிருப்புக்குப் பெயரிடப்பட்டிருந்தது என்று தெரிகிறது. புறநானூற்றில் சோழிய ஏனாதித் திருக்கண்ணன் என்ற ஒரு தலைவன் பாராட்டப்பெறுகின்றான். திருக்கண்ணன் என்பது அவனது இயற்பெயர் என்றும் சோழிய ஏனாதி என்பது அவன் பெற்ற சிறப்புப் பெயர் என்றும் இதனால் உணரமுடிகின்றது.

சங்க இலக்கியத்தில் மன்னர்கள் வீரர்களுக்குச் செய்த சிறப்புக்களைப் பற்றிய பல குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவற்றுள் ஒன்று பெருஞ்செயல் ஆடவர்க்கு வளமான நிலத்தை அளித்தல் ஆகும்.[3] அரசன் பலருக்கு முன்னால் பாராட்டுக்குரிய வீரனுக்குத் தான் அணிந்திருந்த மாலையைப் பரிசாக அளிப்பதும் தனக்கு முகந்து ஏந்திய கள்ளை வீரனுக்கு அளித்தலும் மன்னன் செய்த சிறப்புக்களில் அடங்கும்.[4] இச்சிறப்புக்களிலும் வேந்தனால் பெற்ற பட்டமே அவர்களுக்கு நிலைத்த புகழைத் தந்தது என்று கொள்ளலாம். இப்பட்டங்களை அவர்கள் தம்பெயரோடு சேர்த்துக் கூறிக்கொள்ள உரிமையளிக்கப்பட்டது என்று தெரிகிறது. இப்பட்டம் பெற்றோரைக் குறிப்பிடும்போது எத்தகைய மரபைப் பின்பற்றவேண்டும் என்பதைத் தொல்காப்பியர் ஒரு விதியின் மூலம் அறிவிக்கின்றார். இயற்பெயரையும் சிறப்புப் பெயரையும் ஒருங்கே சுட்ட வேண்டுமேயெனில் சிறப்புப் பெயர் முன்னும் இயற்பெயர் பின்னும் அமையவேண்டும் என்னும் விதி அமைக்கின்றார். உரையாசிரியர் சேனாவரையர், ஏனாதி நல்லுதடன், காவிதி கண்ணந்தை என எடுத்துக்காட்டுக்கள் தருகின்றார். தொல்காப்பியர் காலத்தில் அரசியலில் பட்டம் வழங்குவதும் அப்பட்டங்களை இயற்பெயருக்கு முன்னால் இட்டு வழங்குதலும் பெருவழக்காக இருந்தன என்பதனையே தொல்காப்பியம் உணர்த்துகின்றது.

தொல்காப்பியர் உணர்த்தும் 'சிறப்பினாகிய பெயர் நிலைக்கிளவி' என்பதற்கு மேலும் சில விளக்கங்களை உரையாசிரியர் சேனாவரையர் தருகின்றார்.

ஏனாதி, காவிதி, எட்டி முதலிய பட்டங்களேயன்றி வேறுவகையாகப் பெறும் சிறப்புக்களும் உண்டு என்று அவர் விளக்குகின்றார். தவம், கல்வி, குடி, உறுப்பு முதலியவற்றால் ஆகிய பெயரும் சிறப்புப் பெயராகவே கொள்ளப்படும் என்று விளக்கும் உரையாசிரியர் முனிவன் அகத்தியன், தெய்வப் புலவன் திருவள்ளுவன் சேரமான் சேரலாதன், குருடன் கொற்றன் என எடுத்துக்காட்டுக்கள் தருகின்றார். இதனால், யாதானும் ஒருவகையால் ஏனையோரிடத்திலிருந்து வேறுபட்டுச் சிறப்புக்குரியோராய் விளங்கியோர் இச்சிறப்புப் பெயரால் அடையாளங் காணப் பட்டார் என்பது விளங்கும். அறிவு, தனிப்பட்ட திறன்கள் ஆகியவற்றால் மட்டுமேயன்றி பிறந்த குடியினாலும் மாந்தர் வேறுபடுத்தி அறியப்பட்டனர் என்று தெரிகிறது.

இனி, எட்டி, காவிதி, ஏனாதி என்னும் பட்டங்கள் எத்தகையோருக்கு வழங்கப்பட்டன என்பன பற்றியும் சிந்திக்கவேண்டும். முற்கூறியாங்கு எட்டி என்னும் பெயரைச் சங்க இலக்கியத்தில் காணமுடியவில்லை. எனினும் மணிமேகலையில் எட்டி சாயலன் என்பவன் பேசப்படுகின்றான். இப்பட்டம் சிறந்த வணிகர்களுக்கு அளிக்கப்பட்டது என உரையாசிரியர் நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் குறிப்பிடுகின்றார். 'எட்டிப் பூப்பெற்று இருமுப்பதிற்றி யாண்டு ஒட்டிய செல்வத்து உயர்ந்தோ னாயினன்'[5] என வரும் குறிப்பால் இப்பட்டம் அளிக்கப் பெற்றோர் பொன்னாற் செய்யப்பட்ட ஒரு பூவினையும் பெற்றனர் எனத் தெரிகிறது. 'எட்டி, காவிதி பட்டம் தாங்கி'[6], எனப் பெருங்கதையும் கூறுகின்றது. உரையாசிரியர் நச்சினார்க்கினியரும், 'எட்டி, காவிதி என்பன தேய வழக்காகிய சிறப்புப் பெயர்'[7] என்று குறிப்பிடுகின்றார்.

காவிதி என்னும் சொல்லின் பொருளைச் சரியாக விளங்கிக்கொள்ள முடியவில்லை. கா விதி எனப் பிரித்து மன்னனைத் தீமையிலிருந்து காப்பதற்குரிய விதிகளை வகுத்துத் தருபவர் என இதற்கு விளக்கம் தருவது பொருத்தமாகலாம்.

இதற்கு ஒப்ப மதுரைக் காஞ்சியில் காவிதிப் பட்டமுடையார் நன்றும் தீதும் கண்டு ஆய்ந்து மன்னனை அடக்கியதாகச் சுட்டப்படுதல் காணலாம். காவிதிப் பட்டமுடையார், அமைச்சர் போன்ற தகுதியுடையராய் இருந்து படைத் தொடர்பில்லாத பல கடமைகளை ஆற்றியிருக்க இடமுண்டு. சிலம்பின் உரையாசிரியர் இவர்களை வரியோடு தொடர்புடைய அதிகாரிகளாகக் கருதுகின்றார். பத்துப்பாட்டு உரையாசிரியர் நச்சினார்க்கினியர், காவிதி மாக்களைக் காவிதிப் பட்டம் கட்டிய அமைச்சர் என்று விளக்குகின்றார். மேலும் தொல்காப்பியத்தின் அகத்திணையியல் 30 ஆம் நூற்பாவிற்கு உரையெழுதுகையில், "பாண்டி நாட்டுக் காவிதிப் பட்டம் பெற்றோரும்.... போரும் முடியுடை வேந்தர்கள் மகட் கொடைக்குரிய வேளாளராம்" என்று குறிப்பிடுகின்றார். இதனால் வேந்தனோடு தொடர்புடைய பெருங்குடி வேளாளருக்கு இப்பட்டம் வழங்கப்பட்டது என ஒருவாறு உணரலாம். எட்டிப் பூப்போல காவிதிப் பூப்பற்றிய குறிப்பும் காணப்படுகின்றது.[8] பெருங்கதையில் காணப்படும் 'எட்டி காவிதி பட்டம் தாங்கிய மயிலியல் மாதர்'[9] என்னும் குறிப்பால் இப்பட்டங்கள் பெண்களுக்கும் அளிக்கப்பட்டன என உய்த்துணர முடிகின்றது. எனினும் வேறு நூல்களில் இதற்குச் சான்று கிடைக்கவில்லை. ஒருவேளை இப்பட்டம் பெற்ற ஆடவர்களின் மனைவிமார்க்கும் இச்சிறப்பு உரியதாயிருந்ததோ என ஐயுறவேண்டியுள்ளது. இடைக்காலச் சோழர் காலத்தில் மாராயம் பெற்றவர்களின் மனைவிமார்களும் இச்சிறப்புக்குரியராயினர். மாராயனின் மனைவி மாராசி என்றும் அதிகாரியின் மனைவி அதிகாரிச்சி என்றும் பாராட்டப் பெற்றமையை இதற்கு ஒப்புநோக்கலாம்.[10]

சங்க இலக்கியத்தில் சேனை, சேனாதிபதி என்னும் வடசொற்கள் ஆளப்பெறவில்லை. எனினும் புறநானூற்றுப் பாடல்களுக்குத் துறைக்குறிப்பும் பாடியோர், பாடப்பெற்றோர் குறிப்பும் வரைந்த சான்றோர், சோழிய ஏனாதி திருக்குட்டுவன்[11] என்னும் தலைவனைக் குறிப்பிடுகின்றனர். திருக்குட்டுவன் என்பவன் சோழப் பெருவேந்தனுக்குப் படைத்தலைவனாக விளங்கினான் என அறியமுடிகின்றது. சேனை அதிபதி வடமொழிப் புணர்ச்சி விதிப்படி சேனாதிபதி

என்றாகும். சேனைக்குத் தலைவன் என்பது இதன் பொருளாகும். சேனைத் தலைவனுக்கு உரிய பட்டமாகவே ஏனாதி என்பது பொதுவாகக் கொள்ளப் படுகிறது. ஏனாதி நாதனார் என்னும் ஈழக்குலச் சான்றோர் சோழ மன்னருக்குப் படைத் தலைவராய் விளங்கியமையைப் பெரியபுராணம் அறிவிக்கின்றது. எனவே, ஏனாதி என்பது சேனாதிபதி அல்லது சேனை ஆதி -- அதாவது சேனைக்கு முதல்வன் என்னும் பொருளைக் குறிக்கும் என்று கொள்ளலாம். இச் சொல்லே -- சேனாதி என்பதே சகரம் விடுபட்டு ஏனாதி என்று ஆகியிருக்க இடமுண்டு.

படைத்தலைவனுக்குத்தான் இப்பட்டம் உரியது என்பது சாசனங்களாலும் உறுதிப்படுத்தப்படுகிறது. வேள்விக்குடிச் செப்பேட்டில், சேனாதிபதி ஏனாதி ஆயின சாத்தன் என்பானைக் குறிப்பிடுகின்றது. பெரும் பேராசிரியர் உ.வே.சாமிநாதய்யர், அமைச்சர்களும் ஏனாதி மாராயம் பெற்றதுண்டு எனக் கூறுகின்றார்.[12] அமைச்சரைவிட, சேனாதிபதி மதிப்பில் உயர்ந்தவன் என்று அவர் கருதுகின்றார். இத்தகுதி பெற்றோருக்கு ஒரு சிறப்பான மெய்ப்பை அணியும் உரிமையளிக்கப்பட்டது எனத் தெரிகிறது. மன்னன் பெயரைத் தன் பெயரோடு சேர்த்து வழங்கும் உரிமையும் வழங்கப்பட்டது எனத் தெரிகிறது. சோழிய ஏனாதி திருக்குட்டுவன் என்பது இதற்குச் சான்றாகக் காணப்படுகிறது.

குடிப்பெயரை இயற்பெயரோடு சேர்த்து வழங்கும் மரபு தமிழகத்தில் தொன்மையான காலம் முதல் பின்பற்றப்பட்டு வருகிறது. இவ்வாறே தொழிற் பெயரையும் இயற்பெயரோடு சேர்த்து வழங்கும் மரபு சங்ககாலம் முதல் காணப்படுகிறது. பாண்டியன் நெடுஞ்செழியன், சேரமான் கணைக்கால் இரும் பொறை, சோழன் நலங்கிள்ளி என்பன குடிப்பெயரோடு சேர்ந்த இயற் பெயர்களுக்குச் சான்றுகளாய்க் கூறப்பட்டன. அரசர்கள் மட்டுமின்றிப் பிறரும்

இங்ஙனம் சுட்டப்பட்டதன்று. கௌடில்ய கோத்திரத்து ஓர் அந்தணன் கௌணியன் விண்ணந்தாயன் எனப்பட்டான். இவ்வாறே பொன்வணிகன் என்றும் கூலவாணிகன் என்றும் மருத்துவன் என்றும் பிறவாறும் சிறப்பினாலாகிய பெயரை இயற் பெயரோடு சேர்த்து அறியப்பட்டாரையும் காணலாம்.

மனிதர்களுக்கு அவரவர் செய்த அருஞ்செயல்களால் வரும் சிறப்பே பெருமைக்குரியதாகும். சங்க காலத்தில் மன்னர் முதல் பல தரப்பினரும் இத்தகைய சிறப்புப் பெயர்களைக் கொண்டிருந்தமையைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகின்றது. 'போரின்றி மன்னர் சீர் வாடிவிடும்' என்பதற்கு ஒப்ப போர் வெற்றிகள் மன்னர்களின் பெருமைகளை உயர்த்தின. இதனால் இன்னபோரில் வெற்றிவாகை சூடியவன் என்றும் வகையில் மன்னர்களைக் குறிப்பிடுவது அக்கால மரபாக இருந்துள்ளது. ஆரியப் படைகடந்த பாண்டியன் நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி என்னும் பெயர்கள் போர் வெற்றியின் அடிப்படையில் அமைந்தனவாகும். சங்க காலத்தில் வடபுலத்திலின்று புகுந்த ஆரிய இருடிகளுக்குப் பெருஞ்சிறப்பு வழங்கப்பட்டது. அரசர்கள் வைதீக அந்தணப் பெரியவர்களுக்குப் பொன்னையும் பொருளையும் வாரி வழங்குவதும் அவர்களின் அறிவுரைப்படி வேள்விகள் இயற்றுவதும் பெருவழக்கினவாக இருந்தன. இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி முதலான பெயர்கள் வேள்விகள் இயற்றியமையால் சிறப்புப் பெற்றோராவர். இங்ஙனமே புலவர் பெருமக்களில் பலர் தாம் தாம் செய்த நூல்கள் அல்லது செய்யுள்களின் அடிப் படையிலோ கையாண்ட உவமைகளாலோ கற்பனை செறிந்த தொடர்களாலோ பெயர் பெற்றமையை அறியமுடிகின்றது. வெறிபாடிய காமக்கண்ணியார், மருதம் பாடிய மாதங்கீரனார், பாலை பாடிய பெருங்கடுங்கோ, செம்புலப் பெயல் நீரார், முதலிய பெயர்கள் இத்தகையனவாகும். சங்ககாலச் சிறப்புப் பெயர்கள் என்னும் நூலாசிரியர் அக்காலத்தில் பல்வேறு அடிப்படைகளில் வழங்கிய சிறப்புப் பெயர்களை ஆய்ந்து கூறுகின்றார்.

சங்க காலத்திற்குப் பிறகும் இச்சிறப்புப் பெயர் மரபு தொடர்ந்தது என அறியமுடிகின்றது. திருத்தொண்டத் தொகை பாடிய சுந்தரமூர்த்தி நாயனார், நெடுமாறனைக் குறிக்கும்போது 'நெல்வேலி வென்ற' என்னும் சிறப்பு அடைமொழியினைச் சேர்த்துக் குறிப்பிடுகின்றார். இவ்வாறே பல்லவ மன்னர்களும் வாதாபி கொண்ட நரசிம்ம பல்லவன் என்றும் தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் என்றும் அழைக்கப்பெற்றனர். பல்லவ மன்னர்கள் தத்தம் தகுதிக்கேற்ப விருதுப் பெயர்களைப் பூணும் மரபையும் காணமுடிகின்றது. ஒரு மன்னனுக்கு ஒன்றுக்கும் மேற்பட்ட விருதுப் பெயர்களைக் கல்வெட்டுக்களில் காண முடிகின்றது. அவ்விருதுப் பெயர்கள் மன்னர்களின் பல்வேறு சிறப்புக்களையொட்டியனவாக அமைந்துள்ளன. முதலாம் மகேந்திரவர்மனுக்கு, சத்ரு மல்லன், ஸ்ரீபரன், குணபரன், சேதகாரி, சித்திரகாரப்புலி, மத்தவிலாசன், முதலான பல விருதுப் பெயர்கள் வழங்கின. இராச சிம்ம பல்லவனுக்கு வீணாநாரதன், என்னும் விருதுப் பெயர் உண்டு. மன்னர்கள் பூண்ட விருதுப் பெயருக்கு மேலாக அமைச்சர், படைத்தலைவர், வணிகர் முதலானோர்க்குப் பட்டம் வழங்குகின்ற பழைய மரபும் நீடித்ததாகத் தெரிகிறது. அரசியல் தலைவர்களுக்கு அளிக்கப்பட்ட பிற பட்டங்களைப் பற்றி ஒன்றும் அறியப்படவில்லை. தமக்குக் கீழ்ப் பணியாற்றிய குறுநில மன்னர்களுக்குப் பல்லவ மன்னர்கள் சிறப்புப் பட்டங்கள் அளித்தமைக்கு எத்தகைய சான்றும் கிடைக்கவில்லை.

அரசியல் துறையிலும் பிறதுறைகளிலும் பணியாற்றியோர்க்கு விருதுப் பெயர்களை அளித்துச் சிறப்புச் செய்யும் வழக்கம் பரவலாக்கப்பட்ட காலம் பிற்காலச் சோழர்காலமே எனத் தெரிகின்றது. சேரமான் கோத்தாணுரவியும் ஆதித்த சோழனும் விக்கியண்ணன் என்பவனுக்குச் 'செம்பியன் தமிழவேள்' என்னும் பட்டம் அளித்துச் சிறப்பித்ததாக ஒரு கல்வெட்டினால் அறியமுடிகின்றது.[13]

பிற்காலச் சோழர்களின் அரசு முற்காலச் சோழர்களின் அரசோடு ஒப்பிடுகையில் பெரிதும் வேறுபட்டதாகத் தோன்றுகின்றது. விசயாலயச்சோழன் மரபினர் தம் பெருவீரத்தினால் சோழநாட்டுக்கு மட்டுமன்றி வடக்கே துங்க பத்திரை முதல் தெற்கே குமரிமுனை வரை அமைந்த பெருநிலப்பரப்புக்குத் தலைவர்களாய் விளங்கினர். ஈழத்திலும் கடாரத்திலும் முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரம் முதலிய தீவகங்களிலும் தம் செல்வாக்கைச் செலுத்தினர். வடபுலத்தின்மீதும் படையெடுத்துச் சென்று தம் வீரத்தைப் பறைசாற்றினர். ஒரு காலத்தில் தத்தம் நாடுகளில் புகழோடு வீற்றிருந்த பல்வேறு அரசமரபினரும் இவர்களுக்குக் கீழ் அடங்கியிருந்து பணிபுரியும் நிலை ஏற்பட்டது. விரிந்து பரந்த தம் நாட்டைச் செம்மையாக ஆட்சிபுரிவதற்கு ஏற்பப்பல மண்டலப் பிரிவுகளை ஏற்படுத்தினர். மண்டலங்கள் வளநாடுகளாகவும் வளநாடு கூற்றங்களாகவும் நாடுகளாகவும் பிரிக்கப்பட்டன. நாடுகளின் அல்லது கூற்றங்களின் உறுப்புக்களாகச் சிற்றூர்களும் பேரூர்களும் இருந்தன. தலைநகரத்திலிருந்து நெடுந்தொலைவுகளி லிருந்த நாட்டுப்பகுதிகளைப் பேரரசனின் ஆணைக்கு அடங்கி ஆட்சி புரிய மண்டலத் தலைமை ஒரு தேவையாயிற்று. தம் குடும்பத்தைச் சேர்ந்த உறுப்பினர்களை மண்டலத் தலைவர்களாக அமர்த்துகின்ற மரபு இவர்களால் பின்பற்றப்பட்டது. தமக்கு அடங்கிய சிற்றரசர் மரபினையும் தம்முடைய அரசின் அதிகாரிகளாக அமர்த்திப் பயன்கொள்ளுகின்ற வழக்கத்தையும் பின்பற்றினர். இங்ஙனமே அரசனுக்கு உதவியாகப் பணிபுரிந்த பல்வேறு அதிகாரக் குழுவினரையும், இக் காலத்தில் அறியமுடிகின்றது. இவர்களில் பெருந்தரம், சிறுதரம், கன்மிகள் முதலான தரவேறுபாடுகள் இருந்தன. திருமந்திர ஓலை, திருமந்திர ஓலை நாயகம், முகவெட்டி, வரியிலீடு, வரிப்பொத்தகக் கணக்கு முதலான அதிகாரிகளின் பெயர்கள் அறியப்படுகின்றன.

அரசியலில் மட்டுமன்றி, சமயம், கலை முதலான பிற துறைகளிலும் இடைக்காலச் சோழர் காலம் பெரும் சிறப்பெய்தியிருந்தது. இதனால், சிற்பம், இசை, கூத்து, சமயம், இலக்கியம் முதலிய பல்வேறு துறைகளிலும் வல்லுநர்கள் உருவாகியிருந்தனர்.

பட்டமும் பாராட்டும் பரிசளிப்பும் மாந்தரின் உளவியலோடு நெருங்கிய தொடர்புடையன. திறமையுடையோரைக் கண்டறிந்து அவர்களைப் பாராட்டுவது அவர்களின் துறையில் அவரவரும் மேலும் மேலும் ஊக்கம் செலுத்துவதற்கு உறுதுணை புரியும் என்பதில் ஐயமில்லை. இந்த உளவியலை நன்கு உணர்ந்திருந்தமையால் பண்டைக்காலம் முதல் மன்னர்கள் இம்மரபினைப் பின்பற்றினர் எனத் தெரிகின்றது. அரசனால் சிறப்புப் பெற்றோர் தம் உயிரைப் பணயம் வைத்து உழைக்க முந்தினர். இத்தகைய வீரர் வாழ்க்கையினைப் புறநானூறு படம்பிடித்துக் காட்டுகின்றது. இளைய வீரர்கள் பலரும் இருக்க, தன்னுடைய மன்னன் தன் மகனுக்குத் தன் கையால் கள் வழங்கிச் சிறப்பித்ததைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்த மறக்குடித் தாய் ஒருத்தி, தன் மகன் போர்க்களத்திலிருந்து உயிருடன் திரும்பி வந்ததைக் கண்டு மனம் வெறுத்த, "பலர்மீது நீட்டிய மண்டை என் சிறுவனை கால்கழீஇ கட்டிற் கிடத்திஇ வெள்ளறுவைப் போர்ப்பித்திலதே" என வருந்துகின்றாள். "புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு இரந்துகோள் தக்கதுடைத்து" என்னும் திருக்குறளும் வேந்தன் பொருட்டு உயிர்துறக்கும் வீரர்களின் பண்பையே சுட்டுகின்றது. "ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கு உறுதியம்மா" என்னும் கம்பர் வாக்கும் இதனையே வற்புறுத்துகின்றது. மன்னர்கள் தமக்குக் கீழ்ப் பணியாற்றிய பல்வேறு அதிகாரிகளுக்கும் மண்டலத் தலைவர்களுக்கும் செயற்கரிய செய்த வீரர்களுக்கும் பட்டமளித்துச் சிறப்பித்ததனால் சோழமன்னர்கள் தம் பரந்த நாட்டினை நன்கு ஆட்சி புரிய முடிந்தது என்றும் தமக்கும் தம் அதிகாரி களுக்கும் இடையே நல்லுறவை நிலை நிறுத்த முடிந்தது என்றும் உணரலாம்.

சோழப் பெருவேந்தர்கள் விருதுப் பெயர்களைப் பூணுவதிலும் தம்மைச் சேர்ந்தோர்க்கு விருதுப் பெயர்களை அளிப்பதிலும் பெரு விருப்பம் காட்டியதைக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் உணர்த்துகின்றன. இவ்விருதுப் பெயர்களை அரசவையிலிருந்த சான்றோர்கள் அமைத்துக் கொடுத்தனர் எனத் தெரிகின்றது. அக்காலத்து எழுந்த மெய்க்கீர்த்திகளின் அமைப்பையும் நடையையும் சிறப்பையும்

காணும்போது இவற்றை இயற்றுவதற்குரிய புலமை வாய்ந்த அரசவைப் புலவர்கள் இருந்தனர் என்பதை உய்த்துணர முடிகின்றது. சோழர் கல்வெட்டுக்களில் காணப்படும் பட்டப்பெயர்களை நான்கு வகையினவாகக் கருத இடமுண்டு.

1. பேரரசர்கள் தத்தம் சிறப்புக்களுக்கேற்பத் தாங்கியிருந்த விருதுப் பெயர்கள்.

2. பேரரசர்கள் அரசப் பிரதிநிதிகளாக விளங்கிய தம் உறவினர்களுக்களித்த விருதுப் பெயர்கள்.

3. தமக்கு அடங்கிய குறுநிலத் தலைவர்களாயும் அரசியல் அதிகாரிகளாகவும் விளங்கியோர்க்கு அளிக்கப்பட்ட விருதுப் பெயர்கள்.

4. அரசியல் சார்பில்லாத பல்வேறு கலைஞர்களுக்கும் அளிக்கப்பட்ட விருதுப் பெயர்கள்.

அருமொழித்தேவன் என்னும் இயற்பெயர் பூண்ட சோழப் பெருவேந்தன் தான் முடிசூட்டிக் கொண்டபோது முதலாம் இராசராசன் என்னும் அபிடேகப் பெயர் பூண்டான். அவன் ஆட்சிக்காலத்தில் வெற்றிகள் பல குவிந்தபோது பல விருதுப் பெயர்களைச் சூட்டிக் கொண்டான். பாண்டிய குலாசனி, கேரளாந்தகன், சிங்களாந்தகன், உய்யக்கொண்டான், இராசகண்டியன், இரவிகுலமாணிக்கம், இராசமார்த்தாண்டன், இராசாசிரியன், இராசேந்திரசிங்கன், கீர்த்தி பராக்கிரமன், சத்திரிய சிகாமணி செயங்கொண்டசோழன், சனநாதன், சிவபாத சேகரன் சோழ நாராயணன், சோழ மார்த்தாண்டன், சோழேந்திர சிங்கன், தெலிங்க குல காலன், நிகரிலிச் சோழன், நித்த விநோதன், மும்முடிச்சோழன், முதலிய பட்டங்கள் இராசராசனுக்கு வழங்கி வந்தன.[14]

இராசராசன் தன்னுடைய தானைத் தலைவனாக விளங்கிய தன் மகன் இராசேந்திரசோழனுக்குப் பஞ்சவன் மாராயன் என்னும் பட்டமளித்தான். மேலும் இராசேந்திரசோழன் இளமையில் தன் தந்தையால் இடப்பட்ட மதுராந்தகன் என்னும் பெயரும் முடிசூட்டுவிழாவில் பெற்ற இராசேந்திரன் என்னும் அபிடேகப் பெயரும் உடையவனாய் இருந்தான். இத்துடன் மேலும் பல விருதுப் பெயர்களையும் பெற்றிருந்தான் அவை உத்தம சோழன், சோழேந்திர சிம்மன், விக்கிரம சோழன், முடிகொண்டசோழன், பண்டிதசோழன், கடாரம் கொண்டான், கங்கை கொண்டசோழன் என்பனவாகும்.[15]

இவ்வாறே இரண்டாம் இராசேந்திர சோழன் தன்னுடைய உறவினர்களைத் தான் வென்ற பகுதிகளுக்குத் தலைவர்களாக ஆக்கிப் பல விருதுப் பெயர்களை அளித்துச் சிறப்பித்துள்ளான். அப்பெயர்களாவன, இருமுடிச்சோழன், சோழ பாண்டியன், சோழகேரளன், விசயாலயச்சோழன், சோழகங்கன், சோழ அயோத்திராசன், உத்தம சோழன், சோழசனகராசன், சுந்தரசோழன் சோழக்கன்னக் குச்சிராயன், சோழவளவன், நிருபேந்திரசோழன் முதலியனவாம்.[16]

சோழ மன்னர்களால் வெல்லப்பட்ட குறுநில மன்னர்கள் உயரதிகாரிகளாகப் பணியாற்றிச் சோழப் பேரரசுக்கு உறுதுணை புரிந்துள்ளனர். அத்தகையோருக்குச் சோழமன்னர்கள் அளித்த பட்டப்பெயர்கள் பற்றிய பல செய்திகள் கல்வெட்டுக் களால் அறியப்படுகின்றன. கல்லாலை என்னும் இயற்பெயருடைய ஒருவன் தஞ்சை இராசராசேச்சுரத்தில் கார் நெல்லை அளக்கும் பொறுப்புடையவனாக இருந்தான். அவன் தந்தையான புதவுடையான் அரையன் இறந்த பிறகு அப்பதவியைப் பெற்றான் எனத் தெரிகிறது. இப்பதவியைச் சந்திரசூரியர் உள்ளவரையில் அவன் மரபினர் தொடர்ந்து வகிக்கவும் ஆணைபிறப்பிக்கப்பட்டது. அவனுக்கு இராசராசப் பல்லவரையன் என்னும் பட்டம் அளிக்கப்பட்டது என்பது குறிப்பிடத் தக்கது.[17] மரபுப்பெயருக்கு முன்னால் அரசனுடைய பெயரை இட்டு வழங்கும்

மரபையும் இது காட்டுகிறது. சோழமன்னர்கள் தம் அதிகாரிகளுக்கு அளித்த பட்டப்பெயர்களில் சில வருமாறு: மாராயன், பேரரையன், அரையன் மூவேந்தவேளான், தொண்டைமான், பல்லவராயன், காலிங்கராயன், காடவ ராயன், கச்சிராயன், சேதிராயன், வாணகோவரையன், மாவலி வாணவராயன், கேரளராயன், விழுப்பரையன், மழவராயன், நாடாள்வான், பிரமாதிராயன், பிரம்மராயன், சோழகோன் முதலியனவாகும்.[18]

இப்பட்டங்கள் மன்னர் தம் இயற்பெயர் அல்லது சிறப்புப் பெயர்களோடு இணைத்து வழங்கப்பட்டன. இதனால் பட்டங்களை வழங்கிய மன்னரை அடையாளங் காண முடிகின்றது. இராசராச மாராயன், விக்கிரமசோழ மாராயன், இராசேந்திர சோழ மூவேந்த வேளான், வீரசோழப் பல்லவரையன், விருதராச பயங்கர வாணகோவரையன், சனநாத கச்சிராயன், வீரராசேந்திர மழவராயன், குலோத்துங்கச்சோழ கேரளராயன், இராசராசக் காடவராயன், வீரராசேந்திர பிரமாதிராசன் என்பவை அவற்றுள் சிலவாகும்.

இப்பட்டப்பெயர்களோடு அவர்களுக்குரிய நாட்டுப் பெயர்களும் இணைந்தே கல்வெட்டுக்களில் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக முதலாம் இராசராசசோழன் ஆட்சிக்காலத்தில் விளங்கிய ஓர் அதிகாரியின் பெயரைக் குறிப்பிடலாம். பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் என்னும் பெயரில் அவனுடைய நாட்டுப் பெயரும் இடம் பெற்றிருப்பது அறியத்தக்கது.

சோழர் கல்வெட்டுக்களில் கையொப்பமிட்டுள்ள அதிகாரிகளின் பெயர்களைக் காணும்போது இயற்பெயரின்றிப் பட்டப்பெயரை மட்டுமே குறிப்பிடும் வழக்கமும் இருந்தது என்பது தெளிவாகிறது. எடுத்துக்காட்டாக, "சிங்கள ராயரும், விழிஞத்தரையரும், அனகராயரும், கனகராயரும், மழவராயரும்

நுளம்பராயரும், பாண்டியராயரும், வில்லவராயரும் எழுத்திட்டு" என வரும் பகுதியைக் குறிப்பிடலாம். இவ்வாறே வில்லவராயரும், காலிங்கராயரும், பொன்னடையானாரும், வடமுனைராயரும், மூவேந்தராயரும், வீரகங்கரையரும் எழுத்திட்டு என்ற பகுதியையும் காணலாம். இவ்வதிகாரிகள் இன்னின்னார் என்பது அவ்வக்காலத்து மக்களுக்கு நன்கு விளங்கியிருக்கும் என்பதில் ஐயமில்லை. இவற்றிற்கு மாறாக மிக நீண்ட பெயர்களும் கல்வெட்டுக்களில் பரவலாகக் காணப்படுகின்றன. நன்னிலம் வட்டம் திருப்புகலூ ரில் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் பொறிக்கப் பட்ட கல்வெட்டொன்றில், பாண்டி குலாசனி வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்து இறையூர் உடையான் அரையன் கங்கைகொண்டானான சோழ விச்சாதிரப் பல்லவரையன் என்று ஒரு தலைவன் சுட்டப்படுகின்றான். இதில்கூட வளநாடும் கூற்றமும் ஊரும் அரையன் என்னும் தகுதியும் கங்கைகொண்டான் என்ற மன்னன் பெயரும் குறிப்பிட்ட தலைவனுடைய மரபுப்பெயரும் இருந்தாலும் அவனுடைய இயற்பெயரை அறியமுடியவில்லை.

சோழர் காலத்தில் கோயில்கள் பெருஞ்சிறப்புப் பெற்றன. இதனால் சிற்பிகளும் திருப்பதிகம் பாடுவோரும் கோயில் திருப்பணிகளில் ஈடுபடுவோருமென பலருக்கும் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கும் நிலை ஏற்பட்டது. நாட்டிய ஆசிரியனுக்கு நிருத்தப் பேரரையன் என்றும் இசைக் கருவிகளை இயக்குவதில் நன்கு தேர்ச்சிபெற்ற கலைஞர்களுக்கு வாச்சியமாராயன் என்றும் சிற்பிகளுக்கு கற்றளிப்பிச்சன் என்றும் நாடக ஆசிரியனுக்கு நாடகப் பேரரையன் என்றும் கூத்தக் கலைஞர்களுக்குப் பூங்கோயில் நாடகத் தலைக்கோலி, என்றும் பட்டங்கள் வழங்கப்பட்டன. இப்பட்டங்களுக்கு முன்னால் பட்டம் வழங்கிய மன்னனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்று இணைந்திருந்தது.

சோழர்களைப் போலவே இடைக்கால பாண்டிய மன்னர்களும் பட்டங்கள் வழங்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அரையன், பேரரையன்,

விசயரையன், தென்னவன், பிரம்மராயன், தென்னவன் பிரம்மராயன், தென்னவன் தமிழவேள், பஞ்சவன் மாராயன், பாண்டிய மூவேந்த வேளான் செழியதரையன், பாண்டிய விழுப்பரையன், தென்னவதரையன், பாண்டிய பல்லவதரையன், தொண்டைமான், பாண்டிய கொங்கராயன், மாதவராயன், வத்தராயன், குருகுலராயன், காலிங்கராயன் ஆகிய பட்டங்கள் பாண்டியர் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.

சோழர்களும் பாண்டியர்களும் செல்வாக்கு இழந்து இசுலாமியரும் அவர்களைத் தொடர்ந்து தெலுங்கர்களாகிய விசயநகரத்தாரும் அவர்களின் சார்பாளர்களாகிய நாயக்கர்களும் ஆட்சி புரிந்த காலங்களில் தமிழ்மன்னர்களின் ஆட்சிமுறைக்கு மாறான ஆட்சி முறையைப் பின்பற்றிய காரணத்தினால் இங்ஙனம் பட்டம் வழங்குகின்ற மரபு நின்றுவிட்டது என்று கருதவேண்டியுள்ளது. இவ்வயல் மன்னர்களின் ஆட்சிக்காலத்திலும் தமிழ் மன்னர்களின் வழித்தோன்றல்கள் தங்களுடைய பழைய மரபைப் போற்றிச் சிறுசிறு பகுதிகளுக்குத் தலைவர்களாக இருந்தனர் என்பதை மறப்பதற்கில்லை. தம் முன்னோர்களுக்கு மன்னர்கள் அளித்த பட்டப்பெயர்களைத் தம்முடைய குடும்பப் பெயராக வைத்துக்கொண்டு தம்முடைய பழம்பெருமையை நிலைநாட்டி வந்திருப்பர் என்பதில் ஐயமில்லை.

ஆய்வுக்குரிய கள்ளர் இனத்தவர்கள் தம் குடும்பப் பெயர்களாக இன்றளவும் போற்றி வருகின்ற பலநூறு பட்டப்பெயர்களுள் பல கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் காணப்படும் பட்டப்பெயர்களாகவோ அவற்றின் திரிந்த வடிவங்களாகவோ காணப்படுகின்றன. தொண்டைமான், பல்லவராயன், மழவராயன், காலிங்கராயன், முனையரையன் முதலான பட்டப்பெயர்கள் இத்தகையனவாகும். கல்வெட்டுக்களில் இடம்பெறாத பட்டப்பெயர்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. அவை எந்த மன்னனால் எந்தக் காலத்தில்

அளிக்கப்பட்டன என்று கூற எத்தகைய ஆவணமும் இன்று கிடைக்கவில்லை. ஆயினும் இவை பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் வழங்கத் தலைப்பட்டுப் பல தலைமுறைகளாக இவ்வின மக்களால் தரிக்கப்பட்டு வருகின்றன என்பதில் ஐயமில்லை. பண்டைக்கால மன்னர்கள் தமக்குத் தாமே பட்டங்களைச் சூட்டிக் கொண்டதுபோலத் தாம் செய்த அருஞ்செயல்களைக் குறிக்கும் வகையில் பட்டங்களைத் தரித்துக் கொள்ளும் உணர்வுமிக்கவர்களாக விளங்கியிருக்கக்கூடும் என்று தெரிகிறது.

சங்க காலத்தில் குடிப்பெயரை முன்னும் இயற்பெயரைப் பின்னும் வைத்துச் சோழன் நலங்கிள்ளி, சேரமான் கணைக்கால் இரும்பொறை என்றவாறு வழங்குவது மரபாக இருந்தது. எனினும் சோழர், பாண்டியர் கல்வெட்டுக்களில் குலோத்துங்கச் சோழதேவர், இராசராச சோழதேவர், பராக்கிரம பாண்டிய தேவர் என மன்னர்களின் பெயருக்குப் பின்னால் மரபுப்பெயரை இட்டு வழங்கும் மரபு காணப்படுகிறது. இம்முறைக்கும் ஆய்வுக்குரிய கள்ளர் இனத்தவரின் பட்டப்பெயர் முறைக்கும் நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது. இயற்பெயரை முற்கூறிப் பட்டப்பெயரைப் பிற்கூறுவது இவ்வினத்தவரின் தொன்றுதொட்டு வரும் மரபாகக் காணப்படுகின்றது. வீராசாமி மழவராயர், வீரையா வாண்டையார், கோபாலசாமி தென்கொண்டார் முதலிய பெயர்களில் இயற்பெயர் முன்னும் பட்டப்பெயர் பின்னும் வருவதனைக் காணலாம்.

இப்பட்டப்பெயர்களின் அமைப்பை உற்றுநோக்குகையில் அவற்றின் இரு கூறுகள் அமைந்துள்ளதைக் காணலாம். சிறப்புக் கூறுமுன்னும் பொதுக்கூறு பின்னுமாக அமைந்திருப்பது இப்பட்டப்பெயர்களின் பொதுவான அமைப்பாகும். தென்கொண்டார், மண்கொண்டார், முடிகொண்டார், உய்யக்கொண்டார், பல்லவராயர், புள்ளவராயர், உறந்தைராயர், சேதிராயர் முதலியவற்றை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். கொண்டார், இராயர் என்பவை

பொதுக்கூறுகளாக அமைந்துள்ளன. கள்ளர் பட்டப்பெயர்களில் அமைந்துள்ள இவ்விருவகைக் கூறுகளையும் பகுத்தறிவது இந்த ஆய்வுக்கு இன்றியமையாததாகும். இப்பகுப்பாய்வில் வெளிப்படும் பொதுக்கூறுகளையும் சிறப்புக்கூறுகளையும் பிரித்தறிவதின் வாயிலாக இப்பட்டப்பெயர்களின் உண்மையான பொருளையும் அரசியல் சிறப்பையும் உணரமுடியும்.

பொதுக்கூறுகள்

கள்ளர் இனத்தவரின் பட்டப்பெயர்கள் பல நூறாக இருப்பினும் பொதுக்கூறுகள் எண்ணிக்கையில் குறைந்தனவாகவே காணப்படுகின்றன. அவை, அரையர், இராயர், ஆண்டார், ஆள்வார், ஆக்கியார், உடையார், முண்டார் உழைத்தார், காத்தார், கிளையார், குடியார், கொண்டார், சுற்றியார், தலையர், தாங்கியார், தேவர், நாட்டார், நாடர், பிடுங்கியார், பிரியர் பூண்டார், பொறுக்கியார், வென்றார் என அப்பொதுக் கூறுகள் அமைகின்றன.

சிறப்புக்கூறு, பொதுக்கூறு எனப்பிரித்தறிய முடியாத பட்டப் பெயர்களும் காணப்படுகின்றன. புறம்பயத்தார், ஆதியபுரத்தார், மௌக்கடார், கும்மாயர், சாதகர், தோப்பை, கருடியார், சவுளி, வழியார், வன்னியர், நாய்க்கர், நெடுத்தார் முதலானவை அவற்றுள் சிலவாகும். இவை தனி ஆய்வுக்குரியனவாகக் கொள்ளத்தக்கனவாகும்.

ஒவ்வொரு பொதுக்கூறும் பல சிறப்புக் கூறுகளை உள்ளடக்கியதாகக் கொண்டுள்ளது. பொதுக்கூறுகளைத் தெளிவாக அடையாளங்காணுவதுபோல சிறப்புக்கூறுகளை அவ்வளவு எளிதாக அடையாளங் காண முடியவில்லை. பட்டப் பெயர்களில் காலப்போக்கில் ஏற்பட்ட திரிபுகள் அவற்றின் பொருள்களை உள்ளபடி உணர்வதற்கும் பெரும் தடையாக உள்ளன. ஈண்டுப்பொதுக் கூறுகளின் அடிப்படையில் கள்ளர் பட்டப்பெயர்களை வகுத்துக் காணலாம்.

அரையர்

கல்வெட்டுக்களில் பரவலாகக் காணத்தக்க பொதுக்கூறு அரையர் என்பதாகும். அரையர் என முடியும் இன்றியமையாத பின்வரும் பட்டப்பெயர்கள் வருமாறு

1. ஈழத்தரையர்
2. ஓமாந்தரையர்
3. கொங்கரையர்
4. கொல்லத்தரையர்
5. சோதிரையர்
6. தென்னதரையர்
7. பேதரையர்
8. போத்தரையர்
9. மாந்தரையர்
10. முத்தரையர்
11. முனையரையர்
12. மூவரையர்
13. மேனாட்டரையர்
14. வேனாட்டரையர்

இவற்றைக் காண்கையில் இவற்றுள் பெரும்பாலானவற்றின் முன்னொட்டுக்கள் யாதானும் ஒரு நாட்டுப் பகுதியைச் சுட்டுவனவாக அமையக் காணலாம். இன்ன பகுதியின் அரையர் என்று விளக்குவனவாக இப்பட்டப்பெயர்கள் காணப்படுகின்றன. அரையர் என்னும் சொல் அரைசர் அல்லது அரசர் என்பதன் மாற்று வடிவமாகக் கொள்ளத்தக்கது.

இராயர்

அரையர் என முடியும் பட்டப்பெயர்களைக் காட்டிலும் இராயர் என்று முடியும் பட்டப்பெயர்கள் எண்ணிக்கையில் சற்றுக் கூடுதலானவை எனத் தெரிகின்றன. அவை வருமாறு

1. அங்கராயர்
2. அன்னவாசல் ராயர்
3. ஆச்சராயர்
4. கச்சிராயர்
5. கடம்பராயர்
6. கனகராயர்
7. காடவராயர்
8. காலிங்கராயர்
9. கூரராயர்
10. கைபராயர்
11. கொழுந்தராயர்
12. சக்கராயர்
13. சிந்துராயர்
14. சிறுநாட்டுராயர்
15. செனவராயர்
16. சேதிராயர்
17. தஞ்சிராயர்
18. துண்டிராயர்
19. நந்திராயர்
20. பதும்கராயர்
21. பரங்கியார்

22. பாண்டியராயர்

23. பல்லவராயர்

24. பிலிராயர்

25. புள்ளவராயர்

26. மன்றாயர்

27. மழவராயர்

28. மாத்தராயர்

29. விசயராயர்

30. வில்லவராயர்

31. வடுகராயர்

32. வேங்கிராயர்

33. வையராயர்

34. மாந்தராயர்

35. வைதும்பராயர்

இவற்றுள் அன்னவாசல், கச்சி, சேதி, தஞ்சை, துண்டீரம், விசயம், வேங்கி என்னும் முன்னொட்டுக்கள் நாட்டோடு தொடர்புடையனவாகக் காணப்படுகின்றன. பல்லவ, காடவ, மழவ, கடம்ப முதலிய முன்னொட்டுக்கள் அவரவர்க்குரிய குடிப்பெயராகக் காணத்தக்கனவாகும். பிறவற்றைப் பற்றித் தெளிவாக அறிவதில் சிக்கல் உள்ளது.

இராயர் என்னும் சொல் இராசர் என்னும் சொல்லின் மாற்று வடிவமாகக் கருதத்தக்கது. கிருட்டிணதேவராயர், அச்சுததேவராயர் முதலான விசயநகர வேந்தர்களின் பெயர்களில் இராயர் என்னும் பின்னொட்டு இடம்பெறுவதைக் காணலாம்.

## ஆண்டார்

ஆண்டார் என முடியும் பட்டப்பெயர்கள் சிலவே காணப்படுகின்றன.

1. அரசாண்டார்
2. ஆச்சாண்டார்
3. உழுவாண்டார்
4. குமரையாண்டார்
5. கோட்டையாண்டார்
6. நெடுவாண்டார்
7. பாலாண்டார்
8. மயிலாண்டார்
9. துறவாண்டார்
10. பொய்கையாண்டார்
11. மின்னாண்டார்

ஆளுதல் என்பதற்கு ஆட்சிபுரிதல், யாதாலும் ஒன்றைக் கையாளுதல் என்னும் இருபொருள்கள் உண்டு. இப்பொருள்களின் அடிப்படையில் இப்பட்டப் பெயர்களைப் பகுத்து ஆய வேண்டியுள்ளது.

## ஆள்வார்

ஆண்டார் என்பதனோடு தொடர்புடையதாக ஆள்வார் என்று முடியும் பட்டப்பெயரைக் கொள்ள வேண்டும்.

1. நாடாள்வார்
2. சக்கரையப்ப நாடாள்வார்
3. அல்லி நாடாள்வார்

என்னும் மூன்று பட்டப்பெயர்களே இவ்வகையில் கிடைத்துள்ளன.

## உடையார்

ஒன்றை உரிமையாகப் பெற்றவர் எனப் பொருள்படும் உடையார் என்னும் சொல்லை இறுதியாகவுடைய பட்டங்களாகப் பின்வருபவை அமைகின்றன.

1. அண்டமுடையார்
2. அரசக்குடையார்
3. உலகுடையார்
4. காருடையார்
5. கீருடையார்
6. கீவுடையார்
7. குறுக்குடையார்
8. கிளாக்குடையார்
9. நாடுடையார்
10. நெல்லியூர் உடையார்
11. தேவுடையார்
12. பாப்புடையார்
13. புறம்பயமுடையார்
14. களமுடையார்
15. மாவுடையார்
16. வேணுடையார்
17. வேளுடையார்

## கொண்டார்

கொள்ளுதல் என்ற சொல்லுக்கு ஒன்றை ஏற்றுக்கொள்ளுதல், உரிமையாகக் கொள்ளுதல், கைக்கொள்ளுதல் எனப் பல பொருள்களுண்டு. கொண்டார் என்று முடியும் பட்டப்பெயர்கள்

1. அண்டங்கொண்டார்
2. அம்பர்கொண்டார்
3. இராயங்கொண்டார்
4. உய்யக்கொண்டார்
5. செயங்கொண்டார்
6. சேனைகொண்டார்
7. பணிகொண்டார்
8. பன்றிகொண்டார்
9. வல்லங்கொண்டார்
10. மண்கொண்டார்
11. தென்கொண்டார்
12. கொல்லங்கொண்டார்
13. பழங்கொண்டார்

## பூண்டார்

பூணுதல் என்னும் சொல் அணிதல் என்னும் பொருளுடையது. இதனைப் பின்னொட்டாகக் கொண்ட பட்டங்கள் மிகச் சிலவாகவே காணப்படுகின்றன. அவை,

1. ஆரம்பூண்டார்
2. கருப்பூண்டார்
3. பணிபூண்டார்
4. பொன்னாப்பூண்டார்
5. முடிபூண்டார்

என்பன.

பிரியர்

பிரியம் என்னும் சொல்லுக்கு அன்பு அல்லது விருப்பம் என்பது பொருளாகும். பிரியர் என முடியும் பட்டப்பெயர்கள் வருமாறு

1. அலங்காரப் பிரியர்
2. ஆயிரப்பிரியர்
3. ஆட்சிப்பிரியர்
4. ஆளப்பிரியர்
5. ஆலம்பிரியர்
6. எயில்நாட்டுப்பிரியர்
7. யதிப்பிரியர்
8. கோதண்டப்பிரியர்
9. கொற்றப்பிரியர்
10. செண்டுப்பிரியர்
11. தென்னப்பிரியர்
12. சோழப்பிரியர்
13. நல்லிப்பிரியர்
14. பாப்பிரியர்
15. யுத்தப்பிரியர்
16. இராசப்பிரியர்

சற்றியார்

இச்சொல்லில் முடியும் பட்டப்பெயர்கள்

1. ஆர்சுற்றியார்
2. போர்சுற்றியார்
3. மாளிகைச் சுற்றியார்

என மூன்றேயாகும். சுற்றுதல் என்பதற்கு அணிதல் என்னும் பொருளும் சூழ வருதல் என்னும் பொருளும் உண்டு. இவ்வடிப்படையில் இவற்றின் பொருளை நோக்கவேண்டும்.

பொறுக்கியார்

பொறுக்கியார் என முடியும் பட்டப்பெயர் போர்பொறுக்கியார் என்ற ஒன்றேயாகும். இப்பட்டம் பொறுத்தார் என்றும் வழங்குகிறது. பொறுத்தலாவது தாங்குதலாகும்.

நாடர், நாட்டார்

நாடு என்னும் சொல்லடியாகப் பிறந்த நாடர் அல்லது நாட்டார் என்னும் பட்டங்களும் உள. அவை,

1. அருமைநாட்டார்
2. அருவாநாட்டார்
3. நாட்டார்
4. சோழங்கநாட்டார்
5. கங்கநாட்டார்
6. சேனைநாட்டார்
7. பல்லவ நாட்டார்
8. காசிநாடர்

முதலியனவாகும்.

தலைவர்

தலைவர் என்று முடியும் பட்டப் பெயர்கள்

1. அருவாத்தலைவர்

2. படைத்தலைவர் என்னும் இரண்டேயாகும்.

வென்றார்

வெற்றி என்னும் பொருளைத் தாங்கிய வென்றார் என முடியும் பட்டப் பெயர் களத்தில் வென்றார் என்பது மட்டுமேயாகும்.

தேவர்

பல்லவர் காலம் முதல் வழங்கிவரும் பட்டப்பெயர்களுள் ஒன்று தேவர் என்பதாகும். திருநாவுக்கரசுதேவர், கபிலதேவர், பரணதேவர், நக்கீரதேவர், கல்லாடதேவர் எனப்புலவர் பெருமக்கள் இப்பட்டப்பெயரோடு அழைக்கப்பட்டனர். திருத்தக்கதேவர், தோலாமொழித்தேவர் என இப் பெயரால் அழைக்கப்பட்டனர். திருவள்ளுவதேவர் என்னும் வழக்கும் உண்டு. இனி சோழமன்னர்களும் பாண்டிய மன்னர்களும் விக்கிரமசோழதேவன், குலோத்துங்க சோழதேவன், குலசேகரபாண்டியதேவன், சுந்தரபாண்டியதேவன் என அழைக்கப் பட்டனர். இப்பழைய மரபைப் பின்பற்றிக் கள்ளர் பெருமக்களில் ஒரு சாரர் தேவர் என முடியும் பட்டப்பெயர்களைக் கொண்டனர். அவை வருமாறு

1. அஞ்சாத்தேவர்

2. அம்மாலைத்தேவர்

3. சங்கரத்தேவர்

4. தேவர்

5. மொட்டத்தேவர்
6. மங்காத்தேவர்
7. வல்லாளதேவர்
8. விசயதேவர்
9. விசாத்தேவர்

என்பனவாகும்.

கிளையார்

கிளை என்னும் சொல் உறவு என்னும் பொருளுடையது. பிரிவு என்னும் பொருளும் உண்டு. கிளையார் என்று முடியும் பட்டப்பெயர்கள் மிகச் சிலவே. அவை,

1. சோழன்கிளையார்
2. தொண்டைமான் கிளையார்
3. பிச்சையன் கிளையார்

என்பனவாகும்.

உண்டார்

உண்டார் என்னும் சொல்லுக்கு உணவாகக் கொள்ளுதல் என்னும் பொருளேயன்றி அனுபவித்தல் அல்லது ஆண்டவர் என்னும் பொருளுமுண்டு. சங்க இலக்கியத்தில் பிறர் மண் உண்ணும் செம்மல் என்று ஒரு மன்னனைப் புலவர் ஒருவர் பாராட்டுகின்றார். அவரே, 'பகைவர் உண்ணா அருமண்ணினையே' என்றும் பாராட்டுகின்றார். இங்கு ஒரு நாட்டைக் கைப்பற்றி அதனை அனுபவித்தல், ஆளுகைக்கு உட்படுத்தல் என்னும் பொருள் இருத்தல் காணலாம். கள்ளர்பட்டப் பெயர்களில் இவ்வகையில்,

1. ஈழமுண்டார்
2. கொல்லமுண்டார்
3. நெறியுண்டார்
4. வீரமுண்டார்
5. ஏத்துண்டார்

என்பவை காணப்படுகின்றன.

வீரம், கொல்லம், ஈழம் முதலிய மகர ஈற்றுச் சொற்களோடு கொண்டார் என்னும் சொல் புணரும்போது பேச்சு வழக்கில் கொண்டார் என்பது முண்டார் எனத் திரிவதும் உண்டு. இருநிலைகளிலும் இது ஒரு பொருளைத் தருகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

சிறப்புக்கூறு, பொதுக்கூறு, எனப் பிரிக்க முடியாமல் ஒரு சொல்லாய் 'ஆர்' விகுதி கொண்டு உள்ள பட்டப்பெயர்கள் பல உள்ளன. எடுத்துக்காட்டாக.

1. கண்டுவார்
2. சேப்பிழார்
3. கோப்பனார்
4. தாந்தாவியார்
5. மெனக்கடார்
6. பகட்டுவார்
7. கோழையர்

முதலானவையாகும்.

இவ்வியலில் பட்டப்பெயர்கள் சங்க காலம் முதற்கொண்டு வழங்கப் பெற்ற பட்டப்பெயர்களும் அவை வழங்கப்பெற்ற சூழ்நிலையும் அவற்றின் பொதுவான அமைப்பும் மட்டுமே ஆராயப்பட்டன. இவற்றிற்குரிய உண்மையான பொருள்களைப் பற்றிய ஆய்வு பின்னர் மேற்கொள்ளப்படும்.

தொகுப்புரை

இவ்வியலில் ஆய்ந்து கண்ட முடிவுகள் வருமாறு

1. தொன்மையான இலக்கணமாகிய தொல்காப்பியத்தில் அரசன் தன்கீழ்ப் பணியாற்றுவாருக்கு அளித்த மாராயம் என்னும் சிறப்புப் பேசப்படுகின்றது.
2. சங்க காலத்தில் வீரர்களுக்கும் அமைச்சர், படைத்தலைவர், வணிகர் முதலானோர்க்கும் பட்டம் அளிக்கும் மரபு தொடர்ந்தது. எட்டி, காவிதி, ஏனாதி என்பவை அக்காலத்துப் பட்டங்களாகும்.
3. அரசர்கள் தம்முடைய பெயரையும் விருதுப் பெயரோடு வழங்கினர்.
4. குடிப்பெயரையும் அவரவர் செய்த அருஞ்செயல்களைக் குறிக்கும் சிறப்புப் பெயரையும் இயற்பெயரோடு சேர்த்து வழங்கும் மரபு தொன்மையானது.
5. இம்மரபு பல்லவர் காலத்திலும் தொடர்ந்தது.
6. இடைக்காலச் சோழர் காலத்து நிலவிய முன்னேற்றமான அரசியல் சூழ்நிலைகள் பல்வேறு அதிகாரிகளையும் மண்டலத் தலைவர்களையும் தோற்றுவித்தது. சோழமன்னர்கள் தம் முன்னோர்களைப் பின்பற்றிப் பலருக்கும் பட்டம் அளித்துச் சிறப்பித்தலைப் பரவலாக்கினர்.
7. சோழமன்னர்கள் தத்தம் தகுதிக்கேற்ப பல விருதுப் பெயர்களை ஏற்றனர்.
8. மன்னர்கள் பிறருக்குப் பட்டம் வழங்குகையில் தம்முடைய சிறப்புப்பெயர் ஒன்றையும் உடன்சேர்த்து வழங்கினர்.
9. சோழர்காலக்கல்வெட்டுக்களில் இயற்பெயர் இன்றிப் பட்டப்பெயர்களை மட்டும் குறிக்கின்ற மரபு காணப்படுகின்றது.

10. அரசில் தொடர்பில்லாத இசை, நாட்டியம், நாடகம் முதலிய கலைத்துறையினருக்கும் பட்டம் வழங்கிச் சிறப்பித்தனர்.

11. சோழர்களைப் போன்றே பாண்டியர்களும் அரசியல் தலைவர்களுக்குப் பட்டம் அளித்தலை மேற்கொண்டிருந்தனர்.

12. தமிழ் அரசுகள் நிலைகுலைந்த பின்னர் வேற்றினத்தவரின் ஆட்சிக்காலத்தில் இம்மரபு கைவிடப்பட்டது. எனினும் பழைய அரசமரபினர் தம் முன்னோர்களைப் பின்பற்றிப் புதியபுதிய பட்டங்களை அவ்வப்போது புனைந்து கொண்டதாக அறியமுடிகின்றது.

13. கள்ளர் இனத்தவர் தம் இயற்பெயர்களுக்குப்பின்னால் தம் மரபுப் பெயரை இட்டு வழங்கும் வழக்கத்தையும் பின்பற்றி வருகின்றனர்.

14. கள்ளர் பட்டப்பெயர்களில் பல சோழர், பாண்டியர் ஆகியோரின் கல்வெட்டுக்களில் இடம்பெற்றாலும் அவற்றில் இடம்பெறாத பட்டங்களே மிகுதியாக உள்ளன.

15. இப்பட்டப்பெயர்களில் பொதுக்கூறு பின்னும் சிறப்புக் கூறு முன்னும் அமைந்துள்ளன. பொதுக்கூறுகள் சிறப்புக்கூறுகளை நோக்க எண்ணிக்கையில் குறைவாகவே காணப்படுகின்றன. பொதுக்கூறுகளில் இராயர் என முடியும் கூறே பெரும்பான்மையானதாகக் காணப்படுகின்றது. அரையர், ஆண்டார், ஆள்வார், உடையார், கொண்டார், பூண்டார், பிரியர், சுற்றியார், பொறுக்கியார், நாட்டார், தலைவர், வென்றார், தேவர், கிளையார், உண்டார் ஆகிய பொதுக்கூறுகள் ஒவ்வொன்றும் பல சிறப்புக் கூறுகளைக் கொண்டு அமைந்துள்ளன.

16. கள்ளர் பட்டப்பெயர்களில் பொதுக்கூறு என்றும் சிறப்புக்கூறு என்றும் பகுக்கமுடியாத ஒரு சொல்லோடு 'ஆர்' என்னும் விகுதி சேர்ந்த பட்டங்களும் அமைந்துள்ளன.

## சான்றெண் விளக்கக் குறிப்புகள்

1. தொல்காப்பியம், புறத்திணையியல் நூற்பா, 63.
2. மதுரைக்காஞ்சி, வரி 499.
3. புறம்., 285, 287.
4. புறம்., 289, 290, 291.
   மதுரைக்காஞ்சிக் குறிப்பு.
5. மணிமேகலை, 22:113-114.
6. பெருங்கதை, 9: 1-14.
7. தொல். தொகைமரபு, நூ.12.
8. தொல். தொகைமரபு, நூ.12. நச். மேற்கோள்.
9. பெருங்கதை, 3: 114-145.
10. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச்சோழர் வரலாறு, ப.485.
11. புறம்., 394.
12. மணிமேகலை 22-ஆம் காதை வரி 105, உ.வே.சாமிநாதையர் குறிப்பு.
13. திருநெய்த்தானக் கல்வெட்டு.
14. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச்சோழர் வரலாறு, பக்.122-123.
15. மேற்படி., ப.181.
16. மேற்படி., பக்.226-227.
17. வை.சுந்தரேச வாண்டையார், முப்பது கல்வெட்டுக்கள், ப.236.
18. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, ப.485.

தமிழகத்தைச் சங்க காலத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும் அதனையடுத்துக் களப்பிரர் என்ற அரச மரபினரும் ஆண்டனர். அவர்களுக்குப் பின்னால் கி.பி.9 ஆம் நூற்றாண்டு வரையில் பல்லவ மரபினர் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர்.

பல்லவரைப் பற்றி அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர். இரா.இராகவையங்கார் பெரும்பாணாற்றுப்படையைச் சான்றாகக்கொண்டு தொண்டை மண்டலத்தை ஆண்ட இளந்திரையன் சோழ மரபினன் எனக் கூறி, சோழர்-நாகர் மணவுறவினால் தோன்றிய இளந்திரையன் கரிகாலனுக்குப் பிறகு கிள்ளிவளவன் காலத்தில் காஞ்சியை ஆண்டவன் என்றார்.[1] எஸ்.கிருட்டிணசாமி ஐயங்கார் பல்லவர் தொண்டை மண்டலத்தை ஆண்டவர் என்று கருதுவதோடு 'பல்லவர்', 'தொண்டையார்' என்பன ஒருவரையே குறிக்கும் என்பார்.[2] இராசநாயகம் என்பவர் பல்லவர் சிங்களம் அல்லது தென்னிந்தியாவில் தோன்றியவர் என்றும் அவர்களுக்கும் சோழர், நாகர் என்போருக்கும் தொடர்புண்டு என்றும் கூறுகின்றார். மேலும், இலங்கையை அடுத்துள்ள மணிபல்லவம் பல்லவரின் பிறப்பிடமாகும் என்றும் கூறுகின்றார். மணிமேகலையில் கூறப்பட்டுள்ள சோழனை மணந்த பீலிவளை என்பவள் நாகர் மகளாவாள் என்றும் அவள் பெற்ற மைந்தனே திரையால் கடத்தப்பட்டுக் கரைசேர்ந்த முதல் பல்லவன் என்றும், அவன் தொண்டைக் கொடியால் சுற்றப்பட்டு இருந்தமையின் தொண்டைமான் என்றும் திரைகளால் உந்தப்பட்டு வந்தமையின் திரையன் என்று வழங்கப்பெற்றான் என்றும், அவன் மரபினரே பல்லவர் எனப்பட்டனர் என்றும் கூறுகின்றார்.[3]

ஆராய்ச்சியாளர் எலியட் செவேல் முதலியோர் தொண்டை மண்டலத்துப் பழங்குடியினரான குறும்பர் மரபினரே பிற்காலப் பல்லவர் என்று முடிவு செய்தனர்.[4]

வின்செண்ட் ஸ்மித் என்னும் அறிஞர், முதற்கண் பல்லவர் என்பவர் பஹ்லவர் என்ற பாரசீக மரபினர் என்றும் பின்னர் அவர்கள் தென்னிந்தியரே என்றும் முடிவு கூறுகின்றார்.[5]

பல்லவரைத் தமிழர் என்று கொள்வதே சரியாகும் என்பார் வரலாற்றாசிரியர் ந.சுப்பிரமணியம்.[6]

பல்லவர்க்கும் வேங்கடத்தின் அருகில் வாழ்ந்த திரையர்க்கும் காஞ்சியில் ஆண்ட தொண்டையர்க்கும் தொடர்பிருந்தமை உண்மையில் அம்மூவரும் ஒருவரே என்பதும் எளிதில் காணப்படும். வேங்கடத்துத் திரையரைப் பற்றி அகநானூற்றில் பேசப்படுகின்றது. திரையர், தொண்டையோர் என்போர் கடலையும் அதன் அலைகளையும் தமது தோற்றங்களாகக் கொண்டு வழி பட்டவராதல் வேண்டும். கரிகாலன் தொண்டை மண்டலத்தில் காடு கொன்று நாடாக்கிய செய்தி பட்டினப்பாலையால் அறியமுடிகிறது. அக்காலத்தில்தான் தொண்டையர் காஞ்சியைச் சூழ்ந்த பிரதேசங்களில் குடியேறி இருத்தல்வேண்டும். இளந்திரையர் ஒருவர் காஞ்சியை ஆண்டமை பத்துப்பாட்டு மூலம் அறிய முடிகிறது. கி.பி. 2 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புகார் அழிந்தபின் சோழர்கள் சிறிது காலம் காஞ்சியில் தங்கிவிட்டு உறையூருக்குச் சென்றனர். சோழர்கள் காஞ்சியைத் தம் ஆட்சியோடு இணைத்து ஆண்டபோது திரையர் வேங்கடத்துக்கப்பால் சென்று பல்லவர் என்னும் பெயரில் ஆட்சி அமைத்துக் கொண்டு சாதவாகனர்க்கு உட்பட்ட சிற்றரசர்களாக விளங்கினர். சாதவாகனப் பேரரசு சிதைந்த பின்னர் பல்லவர் தம் சிற்றரசைத் தனியரசாக ஆக்கிக்கொண்டனர். பின்னர் தம் ஆட்சியைக் காஞ்சிவரை விரிவுபடுத்தி காஞ்சிப் பல்லவர் ஆயினர்.

கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முடியத் தமிழ் மண்ணை ஆண்டு பல்வேறு தொண்டுகளைச் செய்த பல்லவருக்கும், கன்னடியத்தவர்க்கும் இடையே தொடர்புண்டு எனக் கொள்வதற்குப் பல சான்றுகள் உள்ளன. அவை ஈண்டு விளக்கப்படுகின்றன.

காடவராயன்

பல்லவ மன்னர்க்குரிய பல பட்டப்பெயர்களுள் காடவர் என்பதும் ஒன்றாகும். தொண்டைமண்டலத்தில் இருந்த காடுகளை அழித்து நாடு நகரங்களை உருவாக்கியமையின் இப்பெயர் பெற்றனர் எனலாம். இலக்கியச் சான்றுகளால் அறியப்படும் முதற்காடவன் ஐயடிகள் என்னும் சைவ அடியாராவார். இவரைச் சுந்தரமூர்த்தி நாயனார்,

'ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்'[7]

என்று திருத்தொண்டத் தொகையில் குறிப்பிடுகின்றார். நம்பியாண்டார் நம்பிகள் இவ்வடியாரைப் பாராட்டுவதோடு அவரைப் பல்லவன் என அடையாளம் காட்டுகின்றார்.

முதல் இராசராசன் காலத்தவரான நம்பியாண்டார் நம்பிகள் இவரைப் பல்லவன் என அடையாளம் காட்டுகின்றார்.

'பக்திக்கடல் ஐயடிகளாகிய நம்பல்லவனே'

இவர்களை அடியொற்றிச் சைவ அடியார்களின் வரலாறு கூறும் சேக்கிழார் சுவாமிகள் இவரை

'பல்லவர்தம் குலமரபின் வழித்தோன்றல்'[8]

என்று பாராட்டுவதோடு,

'கன்மதில் சூழ்க்காஞ்சிக்காடவர் ஐயடிகளார்'[9]

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

சுந்தரரால் போற்றப்படும் இன்னோரடியவர் கழற்சிங்க நாயனாராவார். இவரைக்

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்[10]

எனத் திருத்தொண்டத்தொகை நிகழ்காலத்தில் குறிப்பதால் இவர் சுந்தரர் காலத்தில் பல்லவ நாட்டை ஆண்டவர் என்பது தெளிவு.

பல்லவ குலத்து வந்தார்

என்று இவரைச் சேக்கிழாரும் கூறுகின்றார்.

பிற்காலச் சோழர் அரசியலில் காடவச் சிற்றரசர்களின் பங்கு மிகப் பெரிதாக இருந்துள்ளது. இவர்கள் தம்மைப் பழமையான பல்லவர்களின் வழித் தோன்றல்கள் என்று கூறிக்கொண்டு மென்மேலும் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தனர்.

ஏழிசை மோகன் ஆட்கொள்ளியான குலோத்துங்கச் சோழக் காடவராயன், கூடலூர் ஆளப்பிறந்தான் மோகனாகிய இராசராசக் காடவராயன், செஞ்சியர்கோன் காடவன் என்ற மூன்று அரசியல் தலைவர்கள் பற்றிய செய்திகள் அறியப்படுகின்றன.

செஞ்சியர்கோன் காடவன்

இவன் செஞ்சியில் வாழ்ந்த ஒரு குறுநில மன்னன்; பல்லவர் குலத்தைச் சேர்ந்தவன்; விக்கிரமச்சோழனின் பதினொன்றாம் ஆட்சியாண்டாகிய கி.பி. 1129இல்

தஞ்சை மாவட்டத்திலுள்ள ஆலங்குடியில் வரையப்பெற்றுள்ள கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் செஞ்சி நாங்கொற்றன் ஆடவல்லான் கடம்பன் என்பவன் ஒட்டக்கூத்தபாரல் விக்கிரம சோழன் உலாவில் குறிப்பிடப்பெற்ற செஞ்சியர்கோன் காடவன் என்பது ஒருதலை.

ஏழிசைமோகன் ஆட்கொள்ளியான குலோத்துங்க சோழக் காடவராயன்

இவன் கி.பி.1136 ஆம் ஆண்டில் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள திருமாணிக் குழியைச் சார்ந்த நிலப்பரப்பில் நாடு காவல் அதிகாரியாக இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் அவன் ஆட்சிக்குட்பட்டு விளங்கினான். அரசனால் அளிக்கப்பெற்ற சோழக் காடவராயன், கச்சிராயன் என்னும் பட்டங்களைப் பெற்றவன். இவன் திருநாவலூர், திருவதிகை, திருமுதுகுன்றம் ஆகிய ஊர்களிலுள்ள சிவாலயங்களுக்கு நிவந்தங்களும் அணிகலன்களும் திருப்பணிகளும் செய்துள்ளான். இவன் அரசியலில் படிப்படியாக உயர்ந்து பல பட்டங்களையும் பதவிகளையும் பெற்றுத் திருமுனைப்பாடி நாட்டில் ஒரு சிற்றரசனாக விளங்கினான். இவன் ஆளப்பிறந்தான், அரசநாராயணன் எனத் தன்னைக் கூறிக்கொண்டான்.[11]

கூடலூர் ஆளப்பிறந்தான் மோகனாகிய இராசராசக் காடவராயன் என்பவன் மலைய விச்சாதி நல்லூரிலிருந்து பல வரிகளால் கிடைக்கக்கூடிய பொருள் முழுவதும் கி.பி.1152இல் எலவானாசூர்க் கோயிலுக்கு நிவந்தமாக அளித்துள்ளான்.[12]

இங்ஙனம் பல நூற்றாண்டுகளாகத் தமிழக அரசியலோடு தொடர்புடைய பல்லவர்களின் வழித்தோன்றல்களாக இன்றைய கள்ளர் இனத்தவரின் ஒருபகுதியினர்

கருதத்தக்கோராவர். காடவராயர் என்னும் பட்டம் எத்தகு திரிபுமின்றி இன்றும் வழங்கி வருகிறது. இப்பட்டத்தோடு தொடர்புடைய ஊர் காடவராயன் பட்டியாகும். இது இன்றைய புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது. இம்மாவட்டம் கள்ளர்களை மிகுதியாகக் கொண்டது என்பது குறிப்பிடத்தக்கது. இம்மாவட்டத்தில் உள்ள நமல்பட்டியிலும் கந்தருவக்கோட்டையிலும் இவர்கள் நெருங்கி வாழ்கின்றனர். மேலும், தஞ்சை மாவட்டத்தில் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள பஞ்சநதிக்கோட்டை, கருக்காக்கோட்டை, ஈச்சங்கோட்டை, ஆழிவாய்க்கால், சாமிப்பட்டி முதலிய ஊர்களிலும் தஞ்சை மாவட்டத்தில் மருங்குளம், புதலூர் முதலிய ஊர்களிலும் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். புதுக்கோட்டை மாவட்டத்தில் காடவராயன்பட்டி என்னும் பெயர்கொண்ட ஊர் உள்ளமையால் அதனை இவர்களின் ஒரு தலைமையிடமாகக் கொள்ள இடமுண்டு. இங்கிருந்தே இவர்கள் தஞ்சைப்பகுதிக்குப் பரவியிருக்கக்கூடும்.

காடுவெட்டி

காடவராயன் என்பதோடு தொடர்புடைய இன்னொரு பட்டம் காடுவெட்டி என்பதாகும். காடுவெட்டி என்பது பல்லவரது பெயராகச் சாசனங்களில் வருகின்றது. கங்க வேந்தர்களின் செப்பேடுகள் காஞ்சியைக் காடுவெட்டிகள் ஆண்டனர் என்று கூறுகின்றன.[13] சத்தியவேடு கல்வெட்டுக்கள் பல்லவர் கீழிருந்த தலைவர்களுள் இருவரைக் காடுவெட்டிப் பேரரையன், காடுவெட்டித் தமிழ்ப் பேரரையன் என்று கூறுகின்றன.[14] நிருபதுங்கப் பல்லவனின் பாகூர்ச் செப்பேடுகள் ஒரு தலைவனை விடேல் விடுகு காடுபட்டித் தமிழ்ப் பேரரையன் என்று கூறுகின்றன.[15] கிரகுண்டா கல்வெட்டொன்றில் காடுவெட்டி என வரும் மிகப்பழமையான குறிப்புக்காணப்படுகிறது.[16]

பழைய திருவிளையாடல் புராணத்தில் காடுவெட்டி என்பவனின் பெருமையும் அவனது பக்திச் சிறப்பும் கூறப்பட்டுள்ளது.

காடுவெட்டியார் என்பது கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றாகும். இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டையிலும், அம்மாவட்டத்தில் காடுவெட்டி விடுதி என்ற ஊரிலும் பாலக்குடிப்பட்டி, உஞ்சைவிடுதி, அரிமளம் முதலிய ஊர்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். இவர்கள் பல்லவர்களாகிய காடுவெட்டிகளின் வழித்தோன்றல்கள் எனக் கொள்வதில் தவறில்லை.

## கச்சிராயன்

பல்லவர்குலத் தலைவர்கள், தாம் காஞ்சியை ஆண்டோர் என்பதனைக் குறிக்கத் தம்மைக் கச்சிராயன் என அழைத்துக் கொண்டனர் எனத் தெரிகின்றது.

இன்று கச்சிராயர் என்ற பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் வாழ்கின்றனர்.

கச்சி என்பது காஞ்சியின் மாற்றுப் பெயராகும். 'காமரூபுங் கச்சி மணிவண்ணா' என்றும் 'கச்சியொருகால் மிதியா' என்றும் 'கச்சி ஏகம்பனே' என்றும் சான்றோர் கூறுவது கொண்டு இதனையறியலாம்.

சோழர்காலக் கல்வெட்டுக்களில் கச்சிராயன் என்ற பட்டமுடைய சில தலைவர்கள் இடம்பெறுகின்றனர். அரசன் ஏழிசை மோகனாகிய சநநாதக் கச்சிராயன் என்பவன் பல்லவர் குலத்தில் பிறந்தவன். திருமுனைப்பாடி நாட்டில் திருவதிகை, திருநாவலூர் முதலான ஊர்களைச் சார்ந்த நிலப்பகுதிகளில் நாடுகாவல் அதிகாரியாக விளங்கியவன். கி.பி.1171 ஆம் ஆண்டில் திருவதிகை வீரட்டானேசுவரர்க்குத் திருவிளக்கிற்கு நிவந்தம் அளித்துள்ளான் என்று ஒரு கல்வெட்டு உணர்த்துகின்றது.[17]

## பல்லவராயன்

பல்லவராயன் என்ற பட்டமுடைய குறுநில மன்னர்களும் அரசியல் அதிகாரிகளும் பிற்காலச் சோழப் பேரரசில் பெரும் புகழோடு விளங்கியுளர். அவர்களில் ஈராயிரவன் பல்லவரையன் ஆகிய மும்முடிச்சோழ போசன், தண்டநாயகன் வெண்காடன் சங்கரனாகிய இராசாதிராசப் பல்லவராயன், வேளாந் மாதவனாகிய இராசராச வல்லபப் பல்லவராயன், கருணாகர சுந்தரத் தோளுடையான் ஆகிய வளவன் பல்லவரையன், இராசேந்திர சோழப் பல்லவராதித்தன், வேதவனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயன், திருச்சிற்றம்பலமுடையானான பெருமானம்பிப் பல்லவராயன் ஆகியோர் பற்றிய செய்திகளை அறியமுடிகிறது.

## ஈராயிரவன் பல்லவரையன் ஆகிய மும்முடிச்சோழபோசன்

இவன் பாம்புணிக் கூற்றத்து அரசூரில் வாழ்ந்த ஒரு தலைவன். இராசராசசோழனின் பெருந்தரத்து அதிகாரிகளுள் ஒருவன். தஞ்சைப் பெரிய கோயிலில் சண்டேசுவரப் பெருமானை எழுந்தருளச் செய்து வழிபாட்டிற்கு நிவந்தங்கள் வழங்கியுள்ளான்.[18] வடஆர்க்காடு மாவட்டத்திலுள்ள திருவல்லம், மேற்பாடி என்னும் ஊர்களிலுள்ள கோயில்களுக்கும், நிவந்தங்கள் அளித்துள்ளான்.[19] இவன் இராசராசசோழனுக்குத் திருமந்திர ஓலை நாயகமாகவும் இருந்துள்ளான். இவன் இராசராசசோழன், இராசேந்திர சோழன் ஆகிய இருவர் ஆட்சியிலும் உயர்நிலையில் இருந்துள்ளான்.[20] பல்லவ மரபினைச் சேர்ந்தவனாகிய இத்தலைவன் மும்முடிச்சோழ போசன் என்ற பட்டம் பெற்ற பெருமையுடையவனாவான்.

தண்டநாயகன் வெண்காடன் சங்கரனாகிய இராசாதிராசப் பல்லவராயன்

இவன் உத்தம சோழ நல்லூரைச் சேர்ந்தவன். இராசாதிராச சோழனின் படைத்தலைவன்; அரசாங்க அதிகாரிகளுள் பெருந்தரம் என்ற உயர்நிலையில் விளங்கியவன்; அரசனால் இராசாதிராசப் பல்லவரையன் என்னும் பட்டம் பெற்றுள்ளான். இவன் அந்தணர்களுக்கும் சிவயோகிகளுக்கும் நாள்தோறும் உண்பதற்குத் திருப்பைஞ்ஞீலி கோயிலைச் சேர்ந்த செந்தாமரைக் கண்ணன் மடத்திற்கு நிலங்கள் அளித்துள்ளான்.[21]

வேளான் மாதவனாகிய இராசராச வல்லபப் பல்லவராயன்

இவன் சோழமண்டலம் விருதராச பயங்கர வளநாட்டுப் பாம்புணிக் கூற்றத்துக் கடம்பங்குடி என்னும் ஊரைச் சேர்ந்தவன். கோதாவரி மாவட்டம் பீமாவரத்திலுள்ள திருமால் கோயிலுக்கு நந்தா விளக்கெரிக்க நிவந்தம் அளித்துள்ளான். முதலாம் குலோத்துங்கச் சோழனால் 'வேள்', 'இராச வல்லபப் பல்லவரையன்' என்னும் பட்டங்களைப் பெற்றுள்ளான். கி.பி.1090 ஆம் ஆண்டில் லெய்டன் சிறு செப்பேடுகளில் இவன் பெயர் காணப்படுகின்றது.[22]

கருணாகர சுந்தரத் தோளுடையான் ஆகிய வளவன் பல்லவதரையன்

விக்கிரம சோழனால் வளவன் பல்லவரையன் என்ற பட்டம் பெற்றவன். இவன் நடுநாட்டில் பெண்ணாடகத்திலிருந்த ஓர் அரசியல் அதிகாரி. இவன் அவ்வூர்க்கோயிலில் பணிகட்கு உணவளிக்கும் பொருட்டுப் பொருள் அளித்துள்ளான்[23]

இராசேந்திர சோழப் பல்லவராதித்தன்

கி.பி.1153இல் இவன் கோலார் மாவட்டத்திலுள்ள குரூர் மலையில் ஒரு கோயில் எடுப்பித்து அதற்குத் தேவையான இறையிலி நிலம் அளித்துள்ளான்.

இவன் இரண்டாம் இராசராசசோழனின் பிரதிநிதியாகக் கங்க நாட்டில் இருந்திருத்தல் வேண்டும். இவன் காடுவெட்டி என்றும் காஞ்சிபுரப் பரமேசுவரன் எனவும் அக்கோயில் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளான்.[24]

வேதவனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயன்

இவன் தொண்டை மண்டலத்தில் பழையனூர் நாட்டிலுள்ள பழையனூர் திருவாலங்காட்டில் பிறந்தவன். இரண்டாம் இராசாதிராசனின் தலைமை யமைச்சனாக விளங்கியுள்ளான். அரசனின் ஆணையை ஏற்றுப் பாண்டி நாட்டின்மீது படையெடுத்து நன்றி மறந்த குலசேகர பாண்டியனை அரியணையிலிருந்து நீக்கி அதனை வீரபாண்டியனுக்கு வழங்கிய பெருவீரனாவான். சிங்கள வேந்தன் பராக்கிரம பாகுவின் எண்ணம் நிறைவேறாத வண்ணம் அவனைச் சூழ்ச்சித் திறத்தாலே வென்றவன். இவன் சோழநாட்டிற்கு அளவுகடந்த தொண்டுகள் செய்துள்ளான். இவனுக்கு அரசன் இராசராசன் பழையனூரில் பத்துவேலி நிலக்கொடை அளித்துள்ளான்.[25] இவன் திருவாரூர்க்கோயிலுக்கு இறையிலி நிலமும்[26] வடதிருவாலங்காட்டுக் கோயிலுக்கு மூன்று நந்தா விளக்கிற்கு நிலமும் அளித்துள்ளான்.[27]

திருச்சிற்றம்பலமுடையானான பெருமானம்பிப் பல்லவராயன்

இவன் இரண்டாம் இராசராசசோழன் ஆட்சியின் பிற்பகுதியில் முதல் அமைச்சனாக விளங்கினான். அரசன் இறந்தபோது அவனுடைய இளங்குழந்தைகளையும் அந்தப்புர மகளிரையும் இராசராசபுரத்திற்கு அழைத்து வந்து பாதுகாத்துள்ளான். அவன் விரும்பியவாறு சோழநாட்டில் இராசாதிராச சோழனுக்கு முடிசூட்டி ஆட்சி நன்கு நடைபெற உதவியுள்ளான். மன்னனின் ஆணைப்படி பாண்டி நாட்டிற்குப் படையெடுத்துச் சென்று சிங்களப் படையை வென்று குலசேகர பாண்டியனுக்கு மதுரையில் அரசு வழங்கியுள்ளான். இவன் கி.பி. 1171இல் இறந்தபோது இவன் மனைவி மக்களுக்கு இராசராசன்

குளத்தூரில் இராசாதிராச சோழன் நாற்பது வேலி நிலம் அளித்துச் சிறப்பித்தன்ன செய்தி பல்லவராயன்பேட்டை கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது.[28]

இங்ஙனம் சோழர் நாளில் செல்வாக்குடன் விளங்கிய பல்லவராயருள் ஒரு பிரிவினர் 14 ஆம் நூற்றாண்டில் புதுக்கோட்டைப் பகுதியில் செல்வாக்குடன் வாழ்ந்துள்ளனர். அவர்கள் அரையர் என்னும் பட்டத்துடன் விளங்கினர்.

கி.பி.1387 ஆம் ஆண்டில் வழுத்தூர்ப் பல்லவராயர்கள் திருக்கோகர்ணம் என்ற இடத்தில் அறப்பணி செய்துள்ளனர். கல்வெட்டில் 'இராஜ்யம் பண்ணியருளுகையில்' என்று வருவதால் இவர்கள் அரசர் என்றே சொல்லப்பட்டனர் என்பது விளங்கும். கி.பி.1312 ஆம் ஆண்டில் ஒரு பல்லவராயன் ஆரணிப் பட்டியிலுள்ள கடவுளுக்கு நிலங்கள் விட்டமை புலனாகிறது. வழுத்தூர்ப் பல்லவராயர்கள் தங்கள் அடையாளமாக 'பல்லவன் குளம்' என்ற வாவியும் 'பல்லவன்படி' என்ற அளவுக் கருவியும் ஏற்படுத்தியுள்ளனர். வழுத்தூரில் அழிந்துபோன கோட்டைகள் உள்ளன.[29]

பல்லவராயர்களில், கோனேரிப் பல்லவராயர், மாஞ்சோலைப் பல்லவராயர், அச்சுதப்பப் பல்லவராயர், இளையபெருமாள் பல்லவராயர், ஆவுடைய பல்லவராயர், கந்தப்பப் பல்லவராயர், மல்லப்பப் பல்லவராயர், சிவந்தெழுந்த பல்லவராயர் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. பல்லவராயன் பேட்டை என்ற ஊர்கள் பல்லவராயர்களை நினைவுபடுத்துகின்றன.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை, பிலாவிடுதி மருதன்கோவில் விடுதி (புது) காயாம்பட்டி (திருமயம்), தஞ்சாவூர் மாவட்டத்தில் சின்ன பொன்னாப்பூர், கண்ணுகுடி (ஒரத்), தென்னமநாடு

(ஒரத்), மூவாநல்லூர் (மன்) செயங்கொண்ட சோழபுரம், ரெங்கநாதபுரம் முதலிய ஊர்களில் மிகுந்த எண்ணிக்கையில் வாழுகின்றனர். பட்டப்பெயரின் ஒற்றுமை கொண்டு இவர்கள் பல்லவர்களின் கால்வழியினர் எனக் கொள்ள முடிகிறது.

பல்லவாண்டான் என்னும் பட்டமுடைய தலைவர்கள் இடைக்காலச் சோழர் கல்வெட்டுகளில் இடம்பெறுகின்றனர். இப்பட்டம் கொண்ட கள்ளர் இனத்தோர் புதுக்கோட்டைப்பகுதியில் இன்றும் வாழ்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

தொண்டைமான்

சங்க நூலான அகநானூற்றில் தொண்டையர் என்ற தொடர் காணப்படுகின்றது.

விளைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்டு
ஓங்கு வெள்ளருவி வேங்கடத் தும்பர்

என வேங்கடமலையானது தொண்டையருடையதாகக் கூறப்படுகின்றது. பண்டைக் காலத்தில் வேங்கடமும் அதனைச் சார்ந்த நாடும் அவர்களுடையது என்று அறியமுடிகின்றது.

பெரும்பாணாற்றுப்படையில் பாட்டுடைத் தலைவனாகத் தொண்டைமான் இளந்திரையன் பேசப்படுகின்றான். இவன் தொண்டையர் மருகன் என்று அழைக்கப்படுகின்றான். இதனால் இவனுக்கு முன்பே தொண்டையர்என்ற

மரபினர் இருந்தனர் என்பது தெளிவு. இளந்திரையன், சோழன் தொண்டையர் மகளை மணந்து பெற்ற புதல்வன் என்றும், அவனே தாய்வழி உரிமையால் தொண்டை நாட்டுக்கு அரசனானான் என்றும் கொள்ளலாம்.

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கையாழ்வார் தமது அட்டபுயங்கத்தில், தொண்டை மன்னன் ஒருவனைக் குறிப்பிடுகின்றார்.

மன்னன் தொண்டையர்கோன் வணங்கு
நீண்முடி மாலை வைரமேகன்

மேலும் அவர் திருவரங்கப் பதிகத்திலும் தொண்டையர் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

துளங்கு நீண்முடி யரசர்தங் குரிசில்
தொண்டை மன்னவன்

இவ்வாறு தொண்டையர் பற்றிய குறிப்புக்களாகத் திருமங்கையாழ்வார் குறிப்பிடுகின்றார்.

இப்பழைமையான தொண்டையர்குடித் தோன்றல்கள் சோழர்காலத்திலும் அரசியலில் சிறப்புற்று விளங்கியுள்ளனர். அவர்களுள் பெரும்புகழுக்குரியவன் கலிங்கம் வென்ற கருணாகரத் தொண்டைமானாவான். முதற்குலோத்துங்கனின் படைத்தலைவனாக விளங்கிச் சோழனுக்குப் பெரு வெற்றி தேடித்தந்த சிறப்பு இவனுக்குண்டு.

## கருணாகரத் தொண்டைமான்

கலிங்கத்துப் பரணியிலும் விக்கிரம சோழன் உலாவிலும் சிறப்பாகப் போற்றப்பட்டவன். இவன் குலோத்துங்கச் சோழவளநாட்டு திருநறையூர்

நாட்டு வண்டாழஞ்சேரியின் தலைவன் என்று குறிக்கப்படுகின்றான். வண்டாழஞ்சேரி என்பது வண்டைநகர், வண்டுவாஞ்சேரி என்றும் வழங்கப்பெற்றது. குலோத்துங்கச் சோழனுடைய பிறகு விக்கிரம சோழனுடைய படைத்தலைவனாக இவன் விளங்கியுள்ளான்.[30]

காஞ்சிபுரம் முதலிய இடங்களில் வாழ்ந்து வந்த தொண்டைமான் மரபினர் 10, 11 ஆம் நூற்றாண்டுகளில் தெற்கு நோக்கிச் சென்று பல இடங்களில் குடியேறினர். அவ்வாறு குடியேறிய பகுதிகளில் ஒன்று திருச்சிராப் பள்ளிக்கு அருகிலுள்ள அம்புகோயில் என்ற பகுதியாகும். பின்னர் அங்கிருந்து புதுக்கோட்டைப் பகுதிகளான அறந்தாங்கி, குளத்தூர், பிலான்விடுதி, வடக்களூர், கல்லாக்கோட்டை, கரம்பக்குடி, நெய்வேலி, நரங்கியன்பட்டி, அம்மனிப்பட்டு, பந்துவாக்கோட்டை முதலிய பகுதிகளில் பரவினர்.

புதுக்கோட்டை தொண்டைமான்கள்

'தோட்டி முதல் தொண்டைமான் வரை' என்ற பழமொழி, மூவேந்தருக்குப்பின் தொண்டைமானே தமிழ்நாட்டு மக்களில் தலைமையானவர் என்பதைப் புலப்படுத்துகின்றது. அம்புகோயிலில் தங்கியிருந்த தொண்டைமான் வழியினர் கி.பி.17 ஆம் நூற்றாண்டிலிருந்து புதுக்கோட்டை அரசராயினர்.[31]

புதுக்கோட்டையிலிருந்து ஆட்சிபுரிந்த மன்னர்களாக

1. இரகுநாதராய தொண்டைமான் (1686 - 1730)
2. விசயரகுநாதராய தொண்டைமான் (1730 - 1769)
3. இராயரகுநாத தொண்டைமான் (1769 - 1789)
4. இராசாவிசயரகுநாத தொண்டைமான் பகதூர் (1789 - 1807)
5. இராசாவிசயரகுநாதராய தொண்டைமான் பகதூர் (1807 - 1825)

6. இராசா ரகுநாத தொண்டைமான் பகதூர் (1825 - 1839)

7. ஸ்ரீ பிரகதாம்பாதாஸ் இராசா ராமச்சந்திர தொண்டைமான் பகதூர் (1839 - 1886)

8. ஸ்ரீ பிரகதாம்பாதாஸ் இராச மார்த்தாண்ட பைரவ தொண்டைமான் பகதூர் (1886 - 1922)

9. விசயரகுநாத துரைராச தொண்டைமான் பகதூர் (1922)

ஆகியோர் விளங்கினர்.

புதுக்கோட்டைப் பகுதி சிறிய இராச்சியமாக விளங்கினாலும் தமிழ்நாடு முடியுடை வேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர் ஆட்சிக்குப் பின்பு இதுவே தமிழ்நாட்டு அரசாக விளங்கி வந்தது.

அறந்தாங்கியில் அரசு செலுத்திய தொண்டைமான்களுக்கும் புதுக்கோட்டைத் தொண்டைமான்களுக்கும் உள்ள உறவு எத்தகையது என்று கூற இயலவில்லை. அவர்களைப் பற்றி 1426 ஆம் ஆண்டு முதல் தெரிகிறது. இவர்களில் பொன்னம்பலநாத தொண்டைமான் (கி.பி.1514 - 1567) என்பவர் வலிவும் ஆற்றலும் உடையவர் என அறியமுடிகின்றது. இவர் ஏழு நாளில் இலங்கையை வென்றதாகக் கூறப்படுகின்றது.[31]

கி.பி.1116 ஆம் ஆண்டு இராசேந்திர சோழனின் 5 ஆம் ஆட்சியாண்டில் நார்த்தாமலையில் குறித்துள்ள கல்வெட்டு ஒன்றில் தொண்டைமான் என்ற பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

இன்று தொண்டைமான் பெயரால் தொண்டைமான்பட்டி, தொண்டராயன்பற்று முதலிய ஊர்கள் அமைந்துள்ளன. அவ்வூர்களில் தொண்டைமான் என்ற பட்டப் பெயருடைய கள்ளர் இன மக்கள் பெருமளவில் வாழுகின்றனர். மேலும் புதுக்கோட்டை மாவட்டத்தில் மிரட்டுநிலை, கத்தக்குறிச்சி, பள்ளத்து விடுதி,

ஆலங்காடு, கல்லாலங்குடி, கீழாத்தூர், மேலாத்தூர் முதலிய ஊர்களிலும் தஞ்சாவூர் மாவட்டத்தில் மருங்குளம், பனையக்கோட்டை, உப்பாங்கரை குலமங்கலம், ஆர்சுற்றிப்பட்டு, சக்கரக்கோட்டை, திருமங்கலக்கோட்டை, கக்கரை, பிள்ளையூர், களப்பாள் முதலியஊர்களிலும், திருச்சி மாவட்டத்தில் கூத்தப்பார் முதலிய ஊர்களிலும் பெரும் எண்ணிக்கையில் இவர்கள் வாழுகின்றனர்.

தொண்டைமான் என்னும் பட்டம் தொண்டமான், தொண்டார் என்றும் வழங்குகின்றது. தொண்டாம்பிரியர் என்னும் பட்டமும் கள்ளர் பட்டப் பெயர்களில் ஒன்றாக விளங்குகின்றது. தொண்டார் என்ற பட்டப் பெயருடையார் மன்னார்குடி வட்டத்திலுள்ள நெடுவாக்கோட்டையிலும் தொண்டாம்பிரியர் என்னும் பட்டப்பெயர் தொண்டராம்பட்டு (ஒரத்.), கண்ணுகுடி (ஒரத்.) முதலிய தஞ்சை மாவட்ட ஊர்களிலும் சம்பட்டி விடுதி என்ற புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள ஊரிலும் காணப்படுகின்றது.

தொண்டைமான் கிளையார் என்னும் பட்டப்பெயருடையார் கோட்டைச் சிறு பிடாகை என்ற ஊரில் வாழுகின்றனர்.

'கிளை' என்னும் சொல் உறவினர் என்று பொருள்படுவது. தொண்டைமான் வழியினர் என்னும் பொருள்பட இப்பட்டம் வழங்கிற்று எனத் தெரிகின்றது. இவ்வாறே சோழன் கிளையார் என்ற பட்டமும் உண்டு. அது பின்னர் விளக்கப் பெறும்.

வாண்டையார்

இப்பட்டம் வண்டையர் என்பதன் திரிபாகக் கொள்ளப்படுகிறது. முதலாம் குலோத்துங்கச் சோழனின் படைத்தலைவனும் கலிங்க வெற்றியின் தலைவனாகவும் விளங்கிய கருணாகரத் தொண்டைமான், குலோத்துங்கச் சோழ

வளநாட்டுத் திருநாறையூர் நாட்டு வண்டாழஞ்சேரியின் தலைவன் என்று அழைக்கப்படுகின்றான். வண்டாழஞ்சேரி, வண்டைநகர் என்றும் வழங்கப் பெறுவதால் வண்டையர்கோன் என்றும் அழைக்கப்பெறுகின்றான். இவனைக் கலிங்கத்துப்பரணி பின்வருமாறு புகழ்கின்றது.

கடற்கலிங்கம் எறிந்துசயத் தம்பம் நாட்டிக்
கடகரியும் குவிநிதியும் கவர்ந்து தெய்வச்
சுடர்ப்படைவாள் அபயனடி அருளி னோடுஞ்
சூடினான் வண்டையர்கோன் தொண்டைமானே

வண்டையார் என்பதே முதல் நீண்டு வாண்டையார் என்று வழங்கி வருகின்றது.

வாண்டையார் குடியிருப்பு என்ற ஓர் ஊர் புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி வட்டத்தில் அமைந்துள்ளது. இவ்வாறே தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஒரத்தநாடு வட்டத்தில் வாண்டையாரிருப்பு என்னும் ஓருரும் அமைந்துள்ளது. இவ்வூர்களில் வாண்டையார் என்ற பட்டமுடைய கள்ளர் குடியினர் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். மேலும் புதுக்கோட்டை மாவட்டத்தில் கீரனூர் மேலக்கரும்பிரான்கோட்டை, ஆற்றங்கரைப்பட்டி முதலிய ஊர்களிலும் தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரத்தநாடு வட்டத்தில் கண்ணுகுடி, மேலஉளூர், புதுப்பட்டி முதலிய ஊர்களிலும் பட்டுக்கோட்டை வட்டத்தில் பட்டுக்கோட்டை, மேடைக் கொல்லை, கறம்பயம் முதலிய ஊர்களிலும், மன்னார்குடி வட்டத்தில் பஞ்சவாடி, குன்னூர், இடையூர், அரிச்சயபுரம், மறவாக்காடு, செம்பியன் மாதேவி, சாந்தமாணிக்கம், சோலைக்குளம், பைங்காநாடு, காரக்கோட்டை, பேரையூர், பெருகவாழ்ந்தான், திருக்களர், திருமங்கலக்கோட்டை முதலிய ஊர்களிலும் பாபநாசம் வட்டத்தில் புண்டி, கோனூர், திருபுவனம் வலங்கைமான் வட்டத்தில் சின்னகரம், சாத்தனூர், முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

போத்தரையர்

போத, போத்த, பல்லவம் என்பன முளை, மொட்டு, தளிர் என்ற ஒரு பொருளைக் குறிக்கும் சொற்களாகும். எனவே பல்லவர் என்ற பொருளுடைய போத்தரையர் என்பதும் பல்லவரையே குறிக்கும்.

முதலாம் மகேந்திரவர்மன் பட்டப்பெயர்களுள் ஒன்று போத்தரையன் என்பதாகும்.[32] இரண்டாம் நந்திவர்மனுக்கு நந்திப் போத்தரையர் என்ற பெயரும் உண்டு.[33]

போத்தரையர் என்ற பட்டப் பெயருடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் வெண்ணாவல் குடி, சேந்தாகுடி மாயனூர், மண்டையூர் முதலிய ஊர்களில் மிகுதியாக வாழுகின்றனர். இப்பட்டம் போந்தரையர் எனவும் மருவி வழங்குகிறது. மேலும் பொத்தையன் என்று மருவியதாகவும் தெரிகின்றது.

நந்தியர்

பல்லவரின் இலச்சினை நந்தியாகும். நந்தி இலச்சினை பொதுவாகப் பல்லவர் சைவ சமய உணர்ச்சிமிக்கவர் என்பதை விளக்குகின்றது. பல்லவர் கொடிகளில் இவ்விலச்சினை காணப்படும். பல்லவர் காசுகளிலும் நந்தி இருத்தலைக் காணலாம். அரசர்களுக்கு முதலாம் நந்திவர்மன், இரண்டாம் நந்திவர்மன், மூன்றாம் நந்திவர்மன் என்ற பெயர்கள் இருப்பதையும் காண முடிகின்றது.

பல்லவர்களோடு தொடர்புடையதாக நந்தியர் என்ற பட்டப்பெயரைக் கொள்ளலாம். இப்பட்டப்பெயருடைய கள்ளர்கள் இன்று தஞ்சாவூர் மாவட்டம்

ஒரத்தநாடு வட்டத்திலுள்ள பொன்னாப்பூர், தம்பத்திக்கோட்டை, தென்னமநாடு, காட்டுக்குறிச்சி, மன்னார்குடி வட்டத்திலுள்ள தலையாமங்கலம், பட்டவெளி கண்டியூரம், நல்லிச்சேரி முதலிய ஊர்களில் மிகுதியாக வாழுகின்றனர்.

## கூரராயர்

கூரம் என்பது பல்லவர் ஆண்ட தொண்டைமண்டலத்தில் காஞ்சிபுரத்திற்கு அருகே உள்ள ஓர் ஊராகும். பரமேசுவரவர்மன் என்ற பல்லவ மன்னன் கட்டிய கற்கோயில் இங்கு உள்ளது. இதுவே முதற் கற்கோயிலும் ஆகும். பல்லவர் காலப் பட்டயங்கள் பல இவ்வூரில் வெளியிடப்பட்டுள்ளன. அவை கூரம் பட்டயங்கள் என்று பெயர் பெறுகின்றன.[34]

ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றான கூரராயர் என்பது இக்கூரத்தோடு தொடர்புடையதாகத் தோன்றுகிறது. கூரம் ராயர் என்பது மகரம் கெட்டுக் கூரராயர் என்றாயிற்று எனக்கோடல் பொருந்துவதாகும்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் கூனம்பட்டி முதலிய ஊர்களில் வாழுகின்றனர். ஊரையார் என்று ஒரு பட்டப்பெயர் கள்ளர்களிடையே காணப்படுகின்றது. அதனைக் கூரராயர் என்பதன் திரிபாகவும் கொள்ளலாம். ஊரையார் என்ற பட்டப்பெயர் வலங்கைமான் வட்டத்திலுள்ள செம்மங்குடியில் வாழும் கள்ளர்களிடையே காணப்படுகின்றது.

## படையாட்சிகள்

படையாட்சிகள் அல்லது வன்னியர்கள் என்று அழைக்கப்படும் குடியினர் தஞ்சாவூர், தென்னாற்காடு, வடவார்க்காடு முதலிய மாவட்டங்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். இவர்கள்வன்னியகுலச் சத்திரியர் எனத் தம்மை

அழைத்துக் கொள்கின்றனர். இவர்கள் தம்மைப் பல்லவரின் வழித்தோன்றல்கள் என்று கூறிக் கொள்கின்றனர். மேலும் பல்லவரின் ஒரு கிளையினரான சம்புவராயர்களின் கால்வழியினர் என்றும் கூறிக்கொள்கின்றனர்.

வன்னியர் என்ற சொல்லுக்கு வீரர் என்று பொருளாகும். வீரத்தோடு தொடர்புடையனவாக மழவர், மறவர், கண்டர், கவுண்டர், காமிண்டர், மிண்டர் முதலிய சொற்கள் தமிழில் வழங்குகின்றன. படையை ஆட்சி செய்பவர் என்ற பொருளில் வீரத்தோடு தொடர்புடைய சொல்லாகப் படையாட்சி என்ற சொல் விளங்குகின்றது.

படையாட்சிகளும் கள்ளர்களுக்கு உரிய பட்டப்பெயர்களைப் போலப் பல பட்டப்பெயர்களைத் தாங்கியுள்ளனர். சில பட்டப்பெயர்கள் இருசாரார்க்கும் பொதுவானவை. சில பட்டப்பெயர்கள் சிறிது மாற்றத்தோடு காணப்படுகின்றன. கள்ளர்களிடத்தில் காணப்படாத வேறுசில பட்டப்பெயர்களும் இவர்களிடத்தில் வழங்கி வருகின்றன.

படையாட்சிகளுக்கு வழங்கும் பட்டப்பெயர்கள்[35]

1. அஞ்சாத சிங்கம்
2. அண்ணலங்கார்
3. இரட்டியர்
4. இராயர்
5. இராவுத்த மிண்டர்
6. இராஜா
7. இராஜாளியார்
8. இராஜு
9. உடையார்
10. கங்கை உடையார்
11. கச்சிராயர்
12. கடந்தையார்
13. கடாரம் காத்தார்
14. கண்டர்
15. கண்டியர்
16. கவுண்டர்
17. கவுண்டகர்
18. காவுண்டர்
19. காங்குடையார்
20. கரிசிராயர்

21. காலிங்கராயர்
22. குலவென்றுடையார்
23. சமட்டியார்
24. சம்புவராயர்
25. சாமந்தர்
26. சமர்த்தியார்
27. சாமி
28. செட்டியார்
29. சேதுராயர்
30. சேரனார்
31. சோழனார்
32. தந்திரியார்
33. துரை
34. தென்னவராயர்
35. தேவர்
36. தொண்டனார்
37. நயினார்
38. நாட்டார்
39. நாயகர்
40. மேஸ்திரி
41. நீலகங்கரையர்
42. படையாட்சியார்
43. பட்டவர்த்தி
44. பண்டாரத்தார்
45. பரமேசுவரனார்
46. பல்லவர்
47. பல்லவராயர்
48. பாண்டியனார்
49. புலிக்குத்தியார்
50. பூபதி
51. பொறையர்
52. மரும்கிற்பிரியர்
53. மழவர்
54. மழவராயர்
55. முதன்மையார்
56. முனையதரையர்
57. மூப்பனார்
58. வணங்காமுடியார்
59. வர்மர்
60. வர்மராயர்
61. வன்னியனார்
62. வாணதிரையர்
63. வாண்டையார்
64. தொண்டைமான்
65. வீரமிண்டர்
66. பிள்ளை
67. சேத்தியார்
68. சேர்வை
69. ஞானியார்

இவற்றுள் இராசாளியார், கச்சிராயர், கண்டர், காலிங்கராயர் சாமந்தர், தேவர், நாட்டார், பண்டாரம், பல்லவராயர், புலிக்குத்தியார், பொறையர், மழவராயர், முனையதரையர், வாணாதிராயர், தொண்டைமான், சேர்வை, வாண்டையார், நாயக்கர் முதலிய பட்டப்பெயர்கள் எந்தவித மாற்றமும் இன்றி இருபிரிவினர்க்கும் வழங்கி வருகின்றன.

கடாரம் தாங்கியார் என்ற பட்டப்பெயர் கள்ளர்க்கு வழங்கி வருகின்றது. கடாரம் காத்தார் என்ற பட்டப்பெயர் படையாட்சிகளிடம் காணப்படுகின்றது. கள்ளர்களிடத்தில் வீரமுண்டார் என்ற ஒரு பட்டப்பெயரும் அப்பட்டப்பெயருடைய ஒரு ஊருக்கு வீரமுண்டான்குடிகாடு என்னும் பெயர் காணப்படுகின்றது. அது வீரமிண்டார் என்றோ வீரங்கொண்டார் என்றோ இருந்திருத்தல் வேண்டும். சேதிராயன்குடிகாடு என்ற ஊரில் மிகுந்த எண்ணிக்கையில் சேதிராயர் என்ற பட்டப்பெயருடைய கள்ளர்கள் காணப்படுகின்றனர். படையாட்சிகளின் பட்டப் பெயர்களில் ஒன்றாக வன்னியர் என்ற பட்டம் விளங்குகின்றது. தஞ்சைக்கு அருகில் வன்னியக்குடிகாடு என்ற ஊரும் அவ்வூர் முழுவதும் வன்னியர் என்ற பட்டப் பெயருடையாரும் இருப்பதைக் காணமுடிகின்றது.

இவ்வாறு பல பட்டப்பெயர்கள் கள்ளர்களுக்கு வழங்குவன போலவே படையாட்சிகளுக்கும் வழங்குகின்றன. மேலும் இவர்கள் தம்மைப் பல்லவர்களின் வழித்தோன்றல்கள் என்றும் கூறிக் கொள்கின்றனர். கள்ளர்களில் குறிப்பிட்ட சில பட்டப்பெயருடையார், பல்லவர் மரபினர் என்று அறியமுடிகின்றது.

இவ்விரு குடியாரும் பல நிலைகளில் ஒத்து படை, போர், அரசு என்ற நிலைகளில் ஒரே தன்மையுடையவர்களாகக் காணப்படுகின்றனர். நிலப் பிரிவு, அமைவிடம், காலநிலை முதலியவற்றால் ஒரே மரபினர் தம்மைக் கள்ளர்

என்றும் வன்னியர் அல்லது படையாட்சி என்றும் தனித்தனியாக அழைத்துக் கொண்டனரோ என ஐயுற இடமிருக்கிறது. கள்ளர்-படையாட்சி உறவு தனியே ஆய்வதற்குரிய பொருளாகும்.

தொகுப்புரை

கி.பி. 6 ஆம் நூற்றாண்டு முதல் 9 ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தை ஆண்ட பல்லவ மரபினருக்கும் கள்ளர்களுக்கும் இடையே அமைந்த உறவினை இற்றை நாட் கள்ளர் பூண்டுள்ள சில பட்டப்பெயர்கள் காட்டுகின்றன.

இப்பட்டப்பெயர்களைக் கொண்ட பல தலைவர்கள் சோழர் கல்வெட்டுக்களில் இடம்பெறுகின்றனர். இப்பட்டங்கள் இவர்கள் செய்த அரும் பணிகளைப் பாராட்டி மன்னர்கள் அளித்தன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கள்ளர்க்கு வழங்கும் நந்தியர் என்னும் பட்டப்பெயர் பல்லவர்க்குரிய நந்தி இலச்சினையோடு தொடர்புடையதாகத் தெரிகிறது. பல்லவ மன்னருள் சிலர் நந்திவர்மன் என்றும் நந்தி என்றும் பாராட்டப்பட்டுள்ளமை இக்கருத்துக்கு வலிவு சேர்க்கும்.

கூராயர் என்னும் பட்டம் பல்லவர் வரலாற்றுக்கு வலிமையான சான்றாக அமையும். கூரம் பட்டயத்தோடு கூரம் என்னும் ஊரோடும் தொடர்புடையதாகத் தெரிகிறது.

பல்லவ மன்னர்கள் காடுவெட்டிகள் என்றும் காடுபட்டிகள் என்றும் காடவர்கோன் என்றும் இலக்கியங்களிலும் கல்வெட்டுக்களிலும் சுட்டப்படுகின்றனர். இப்பட்டப்பெயர்களே இன்றளவும் கள்ளர்கள் பூண்டுள்ளனர்.

இவ்வாறே நந்திப் போத்தரையன் போன்ற மன்னர்கள் பெயர்களுக்கும் கள்ளர்களின் போந்தராயர் என்னும் பட்டத்திற்கும் தொடர்பிருப்பதாகக் கருதலாம்.

வண்டாழஞ்சேரியுடையான் கருணாகரத் தொண்டைமானான 'வண்டையர் கோன் தொண்டைமான்' என்று பரணிக்கோர் செயங்கொண்டார் பாராட்டி யுரைக்கின்றார். வண்டையன் எப்பதே முதல் நீண்டு வாண்டையான் என வழங்கிற்று எனத் தெரிகிறது.

வேங்கடமலைப் பகுதியை ஆண்ட தமிழ் மன்னர்கள் தொண்டையர் என அழைக்கப்பட்டனர். காஞ்சியை ஆண்ட பல்லவரும் இத்தொண்டையரும் ஒரே குடியினராகக் கருதப்படுகின்றனர். தொண்டைமான், தொண்டார், தொண்டை மான் கிளையார் முதலிய பட்டங்கள் இப்பழைய தொடர்பினைக் கூறும் சான்றுகளாக உள்ளன.

சோழர் கல்வெட்டுக்களில் பல்லவராயர் என்ற பட்டமுடைய பல அதிகாரிகள் குறிக்கப்படுகின்றனர். பல்லவராயர் பட்டமுடைய இன்றைய கள்ளர்களுக்கும் முற்காலப் பல்லவர்களுக்கும் தொடர்புண்டு என்று நம்புவதற்குத் தடையில்லை.

கள்ளர்களுக்கும் படையாட்சிகளுக்கும் பொதுவான சில பட்டப் பெயர்கள் காணப்படுகின்றன. இதனால் படையாட்சிகளும் கள்ளர்களும் ஒரு காலத்தில் ஒரினத்தவராக இருந்து பிற்காலத்தில் தனித்தனிப் பிரிவினராக ஆகியிருக்கின்றனர் எனக் கருதத் தோன்றுகின்றது.

## சான்றெண் விளக்கக் குறிப்புகள்


1. ந.சுப்பிரமணியன், தமிழக வரலாறு, ப.67.
2. மேற்படி., ப.67.
3. மா.இராசமாணிக்கம், பல்லவர் வரலாறு, ப.27.
4. மேற்படி., ப.28.
5. மேற்படி., ப.25.
6. ந. சுப்பிரமணியன், தமிழக வரலாறு, பக்.67-68.
7. திருத்தொண்டத்தொகை, பாடல் எண்.7.
8. பெரியபுராணம் - ஐயடிகள் காடவர்கோன் நாயனார் புராணம்.
9. மேற்படி.,
10. திருத்தொண்டத் தொகை, பாடல் எண்.9.
11. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, பக்.354-355.
12. Ins. 166 of 1906.
13. Mysore Arch. Reports 52 of 1923    3 of 1907.
14. A.R.No.31, 32 of 1912.
15. Ep. Ind. Vol.XVIII, p.11.
16. S.I.I. Vol.VIII, No.322.
17. S.I.I. Vol.II, No.55.
18. S.I.I. Vol.III, No.19, 54.
19. Ep.Ind. Vol.XXII, No.34.
20. S.I.I. Vol.IV, No.537.
21. Ep. Ind. Vol.XXII, No.35.
22. Ins. 262 of 1929.
23. Ep. Car. Vol.X Kl, 75.
24. Ep. Ind. Vol.XXII, No.14.
25. Ins. 538 of 1904.

26. Ins. 474 of 1905.

27. Ep. Ind. Vol.XXI, No.31.

28. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், ப.32.

29. தி.வை.சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, பக்.314, 333.

30. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், ப.51.

31. மேற்படி., ப.31.

32. மா.இராசமாணிக்கம், பல்லவர் வரலாறு, ப.107.

33. மேற்படி., ப.187.

34. மேற்படி., ப.

35. வ. செயசந்திரன், ஆண்ட பரம்பரை, ப.

கி.பி. 3 ஆம் நூற்றாண்டு தொடங்கி 9 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதிவரை சோழ மரபினர் களப்பிரருக்கும் பல்லவர்க்கும் அடங்கிய சிற்றரசர்களாக நிலைகுன்றியிருந்தனர். கி.பி. 846 ஆம் ஆண்டு நடைபெற்ற திருப்புறம்பியப்போர் சோழர்கள் எழுச்சி பெற்றுப் பேரரசர்கள் ஆவதற்கு வித்திட்டது. இப்போரில் ஈடுபட்டுச் சோழப் பேரரசை நிறுவியோர் விசயாலயச் சோழனும் அவன் மகன் ஆதித்த சோழனும் ஆவர்.

புத்துயிர் பெற்ற அரசு மெல்ல வளர்ந்து முதலாம் இராசராசசோழன் அவன் மகன் முதலாம் இராசேந்திரசோழன் ஆகியோர் ஆட்சிக்காலத்தில் விரிவுற்றுத் தென்னகம் முழுவதனையும் தன்னுள் அடக்கிச் சிறந்தது; வடநாட்டில் தன் புகழை நிறுவிற்று; கடல் கடந்த நாடுகளிலும் பரவிற்று. கி.பி. 846 ஆம் ஆண்டு தொடங்கி கி.பி. 1279 ஆம் ஆண்டுவரை ஏறத்தாழ 433 ஆண்டுகள் சோழ அரசர்கள் சக்கரவர்த்திகளாக இருந்து தமிழகத்தை ஆண்டனர்.

இவர்தம் ஆட்சிக்காலம் தமிழக வரலாற்றிற் பொற்காலமாகக் கருதப்படுகிறது. இக்காலத்தில் வானளாவிய திருக்கோயில்கள் எழுப்பப்பட்டன. கம்பர், சேக்கிழார், ஒட்டக்கூத்தர், செயங்கொண்டார் முதலிய பெரும் புலவர்கள் பேரிலக்கியங்களை இயற்றினர். கடல்கடந்த நாடுகளோடு வாணிபம் மேற்கொள்ளப்பட்டது. ஈடற்ற சிறப்புக்குரிய உள்ளாட்சி மன்றங்களும் இக்காலத்திற்குரிய சிறப்புக்களுள் ஒன்றாகும்.

இங்ஙனம் பல நிலைகளிலும் சிறப்புப்பெற்ற பேரரசை நிறுவிப் புகழ் குவித்த சோழர்கட்கும் கள்ளர் இனத்தவர்க்கும் மிக நெருக்கமான உறவுண்டென்ற உண்மையை கள்ளர்கள் பூண்டுள்ள பல பட்டப்பெயர்கள் உணர்த்துகின்றன.

கள்ளர் பட்டப் பெயர்களுக்கும் சோழ மன்னர்களின் பட்டப் பெயர்களுக்கும் இடையேயுள்ள ஒற்றுமையை அடிப்படையாகக் கொண்டு ந.மு.வேங்கடசாமி நாட்டார் கள்ளர்களைச் சோழர்களோடு உறவுபடுத்துகின்றார். இவர் 1923 ஆம் ஆண்டு வெளியிட்ட 'கள்ளர் சரித்திரம்' என்ற தம் நூலில் இத்தொடர்பினைத் தக்க சான்றுகளோடு விளக்கியுள்ளார்.

சோழமன்னர்கள் சிலருக்கு வழங்கிய கோனேரிமேல்கொண்டான் என்னும் பட்டப்பெயர் இன்றைய கள்ளர்களுக்கு வழங்குவதனை ஒரு சான்றாகக் குறிப்பிடுகின்றார். மேலும் சோழகோன் என்னும் பட்டப்பெயர் திரிந்து சோழகன் என்றாகி, இன்று சோழகர் என்று பன்மை வடிவத்தில் வழங்குவதையும் எடுத்துக் காட்டுகின்றார். செங்கிப்பட்டி முதலிய ஊர்களில் வசித்து வரும் மேற்கொண்டார் பட்டம் உடையோர் வழிவழியாக மேன்மையுற்றுள்ளமையையும் எடுத்துக்காட்டுகின்றார்.[1]

சோழர்கள் சிற்சில காலங்களில் தாம் வென்று கைக்கொண்ட நாடுகளைத் தம் கிளையினரைக் கொண்டே ஆண்டு வந்துள்ளனர். அவ்வாறு ஆட்சியுரிமை கொடுத்த அவர்களுக்குப் பல பட்டங்களையும் அளித்துள்ளனர். சோழபாண்டியர், சோழகேரளர், சோழபல்லவர் முதலிய பட்டங்களை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். சோழமன்னன் ஒருவன் தன் தம்பிக்குச் சோழகங்கன் என்று பட்டம் சூட்டிய செய்தியைத் தென்னிந்திய சாசனத் தொகுதி மூலம் எடுத்துக்காட்டுகின்றார். மேலும் சோழகங்கர் என்ற பட்டமே பின்னாளில் சோழங்கர் என்று மருவியது என்றும் இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தண்டிராயன்பாடி, அந்தலை முதலிய ஊர்களில் இருக்கின்றனர் என்றும் குறிப்பிடுகின்றார்.[2]

கள்ளர்களில் நாடாள்வார் என்னும் பட்டம் உடையோர் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். அவர்கள் ஆண்ட செய்தியும் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. அகளங்க நாடாள்வான் என்னும் பட்டமுடையவன் சீரங்கத்தில் குறுநில மன்னனாய் ஆண்டுள்ளான் என்பதைத் தக்க ஏதுக்களுடன் விளக்குகின்றார். மேலும், முடியுடை வேந்தராகிய சோழர்க்கு வழங்கிய நாடாள்வார் என்ற பட்டப்பெயர் அவர்கள் வலிகுன்றிச் சிற்றரசர்களாய் இருந்தபோதிலும் வழங்கி வந்திருப்பது அறியப்படும். இவ்வாறே சோழர்க்கு உரியனவாகிய பல பட்டப்பெயர்களும் கள்ளர்களுக்கு வழங்குகின்றன என்றும் கூறியுள்ளார்.[3]

ந.மு.வேங்கடசாமி நாட்டாரை அடுத்து 1926 ஆம் ஆண்டு கள்ளர் வரலாற்றினை எழுதி வெளியிட்ட மு.சாமிநாத மாதவராயர் என்பவரும் கள்ளர்களைச் சோழர்களோடு உறவுபடுத்துகின்றார். இவருடைய நூலுக்குச் 'சூரிய குலக் கள்ளர் சரித்திரம்' என்றே பெயர் சூட்டுகின்றார்.

அவருக்குப்பின் கள்ளர் பட்டப்பெயர்களை ஆராய்ந்து கூறிய மதுரை செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் பேராசிரியர் அ. தட்சிணாமூர்த்தி, கல்வெட்டுக்களில் 1) காணப்படும் பல பட்டப்பெயர்களையும் இன்று கள்ளர்களுக்கு வழங்கும் பல பட்டப்பெயர்களையும் ஒப்புநோக்கிக் கள்ளர் பட்டப்பெயர்களில் காணப்படும் பல பட்டப்பெயர்கள் சோழர்களோடு தொடர்புடையனவாகவுள்ளன என்று தமது, 'கள்ளர் பட்டப்பெயர்களும் அரசமரபினரும்' என்ற கட்டுரையில் கூறியுள்ளார். இக்கருத்தை அவர்தம் 'தமிழ் நாடும் கள்ளரும்' என்ற கட்டுரையிலும் 'The Tittle of the Kallas A Historical Study' என்ற ஆய்வுக் கட்டுரையிலும் கூறுகின்றார்.

பிற்காலச் சோழர்களில் சிறந்த ஆற்றல் படைத்த பேரரசனாக விளங்கிய முதலாம் இராசராசன் தன் வெற்றியின் அடையாளமாகப் பல பட்டங்களைப் புனைந்துகொண்டான். தான் வென்ற பகுதிகளில் தன்னால் நியமிக்கப்பட்ட தன் உறவினர்க்கும் அவ்வெற்றியில் பெரும் பங்கு வகித்த படைத்தலைவர், குறுநில மன்னர் முதலியோருக்கும் பல பட்டங்களை வழங்கினான். அப்பட்டப் பெயர்கள் இன்று கள்ளர்கள் தம் பெயரோடு இணைத்து வழங்கும் பட்டப்பெயர்களோடு தொடர்புடையனவாக உள்ளன.

## கொல்லத்தரையர்

கொல்லம் என்பது கேரள நாட்டின் ஒரு பகுதி. இராசராசன் இப்பகுதியை வென்றான். கள்ளரில் ஒரு பிரிவினர்க்கு வழங்கும் கொல்லத்தரையர் என்னும் பட்டம் இவ்வெற்றியோடு தொடர்புடைய பட்டப்பெயராகத் தோன்றுகின்றது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் திருவையாறு வட்டம் திருச்சென்னம்பூண்டி, தஞ்சை வட்டம் உஜ்ஜினி, உடுமலைப்பேட்டை வட்டம் காரத்தொழுவு முதலிய இடங்களில் வசித்து வருகின்றனர்.

## பாண்டியர், பாண்டியராயர்

சோழர்களுக்கும் பாண்டியர்களுக்கும் சோழப் பேரரசின் தொடக்கம் முதல் இறுதிவரை பகை இருந்துகொண்டே இருந்தது. பாண்டியர்களோடு போரிடாத சோழமன்னரே இல்லை என்ற அளவிற்கு அடிக்கடி போர் நடந்து கொண்டே இருந்தது. இராசராசசோழன் பாண்டி நாட்டின்மீது படையெடுத்துப் பாண்டியன் அமரபுயங்களை வென்றான். வென்றபின் அந்நாட்டைக் கைப்பற்றி தன் ஆட்சிக்கு உட்படுத்தினான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றன.[4] இவ்வெற்றியின் நிமித்தமாகப் பாண்டிய என்ற பட்டப்பெயரைச் சூட்டிக்கொண்டான்.

கள்ளர் பட்டப்பெயர்களில் காணப்படும் பாண்டியர், பாண்டிராயர் முதலிய பட்டப்பெயர்கள் சோழர்களின் பாண்டி நாட்டு வெற்றியோடு தொடர்புடையனவாகத் தோன்றுகின்றன.

பாண்டியர் என்ற பட்டப்பெயர் தஞ்சை முதலிய ஊர்களிலும் பாண்டிராயர் என்ற பட்டப்பெயர் புதுக்கோட்டை மாவட்டத்தில் வடவாளம், இராயப்பட்டி, இராப்பூசல், கும்பகுடி, அவ்வையார் பட்டி, தஞ்சை மாவட்டம் நீடா வட்டத்திலுள்ள சித்தமல்லி, திருச்சி மாவட்டத்திலுள்ள அல்லூர் முதலிய ஊர்களிலும் மக்களிடையே காணப்படுகின்றன.

<u>கொங்காள்வார், கொங்கரையர்</u>

இராசராசன் வென்ற பகுதிகளில் ஒன்று குடமலை நாடாகும். கொங்கு மரபில் வந்த ஒருவன் அப்பகுதியை ஆண்டுவந்தான். இப்போரில் சோழர் படைத்தளபதி மனிஜா என்பவன் பெருவீரத்தோடு போரிட்டான். அப்போர் வெற்றிக்குப்பின்னர் அந்நாட்டை மனிஜா என்ற அப்படைத் தளபதிக்கே அளித்துச் சத்திரிய சிகாமணிக் கொங்காள்வான் என்ற பட்டத்தையும் இராசராசன் வழங்கினான். அதுமுதல் அப்பகுதியை அவன் மரபினர் நூறாண்டுக்காலம் ஆண்டனர்.[5]

கள்ளர் பட்டப்பெயர்களில் காணப்படும் கொங்காள்வார், கொங்கரையர் முதலிய பட்டப்பெயர்கள் சோழர்கள் வென்ற கொங்குப் பகுதியோடு தொடர்புடையனவாகத் தோன்றுகின்றன.

கொங்கரையர் என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்கள் இன்று புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள திருக்களம்பூர், செட்டிப்பட்டி, கண்டலூர் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

கங்கநாட்டார், சோழகங்கநாட்டார், சோழகங்க தேவன், சோழங்கர்

இராசராசனின் அடுத்த வெற்றியாகக் கங்கபாடி, நுளம்பபாடி, தடிகைபாடி, முதலிய நாடுகளைக் கைப்பற்றியது அமைகின்றது.[6] கங்கபாடி என்பது மைசூர் நாட்டின் தென்பகுதியும் சேலம் மாவட்டத்தின் வடபகுதியும் இணைந்த பரப்பாகும். அதனை ஆண்டவர்கள் குவலாளபுர பரமேசுவரர்களான மேலைக் கங்கர்களாவர்.[7]

கங்கநாட்டார், சோழகங்கநாட்டார், சோழகங்கதேவர், சோழகங்கர் முதலிய கள்ளர் பட்டப்பெயர்கள் கள்ளர்களைச் சோழர்களோடு உறவுபடுத்துவனவாகத் தோன்றுகின்றன.

கங்க நாட்டார் என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டம் அம்மாப்பேட்டைப் புத்தூரிலும் சோழகங்க நாட்டார் என்ற பட்டப் பெயருடைய கள்ளர் இனமக்கள் ஒரத்தநாடு வட்டம் கண்ணுகுடியிலும் மன்னார்குடி வட்டம் நெடுவாக்கோட்டையிலும் புதுக்கோட்டை மாவட்டம் இராப்பூசலிலும் வாழுகின்றனர். சோழகங்கத்தேவர் என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டம் சோழகன்பட்டி, முத்தாண்டிப்பட்டி, தண்டிராயன்பாடி, திண்ணமங்கலம், திண்ணகுளம், தொண்டராம்படுகை, தொண்டைமான்பட்டி, நாகத்தி முதலிய ஊர்களிலும் புதுக்கோட்டை மாவட்டத்தில் திருவப்பூர், திருச்சி மாவட்டத்தில் கல்விக்குடி முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

தென்னிந்திய சாசன புத்தகம் மூன்றாவது தொகுதி முதற்பகுதி 59 ஆம் சாசனத்தில் வந்துள்ள சோழகங்கன் என்ற பட்டம் 'தன்திரு தம்பியர் தம்முள் மதுராந்தகனைச் சோழகங்கனென்று முடிசூட்டி' என்று வருகின்றது. சோழகங்கன் சோழங்கன் என மருவி, பன்மை வடிவத்தோடு சோழங்கர் என வழங்கி வருகின்றது.[8]

ஈழங்கொண்டார், ஈழத்தரசு, ஈழத்தரையர், சிங்களர், சிங்களராயர்,
சிங்களாந்தகர், சிங்களேந்திரியார், கண்டியர்

ஈழ நாட்டோடு பெரும்பாலான சோழ மன்னர்கள் தொடர்பு கொண்டிருந்தனர். கி.பி. 981 ஆம் ஆண்டு ஈழ அரசன் ஐந்தாம் மகிந்தனை இராசராசசோழன் வென்றான். வெற்றியின் நினைவாகப் பொலனறுவா என்ற நகரத்தைத் தன்பெயரால் சனநாத மங்கலம் என்று பெயரிட்டுத் தலைநகரமாக ஆக்கினான். ஈழமண்டலத்தைத் தன் ஆட்சியோடு இணைத்து மும்முடிச் சோழ மண்டலம் என்று பெயர்சூட்டினான்.[9] இராசராசசோழனுக்கு முன்பே பராந்தகச் சோழனும் ஈழத்தை வென்ற செய்தி அறியப்படுகிறது.[10] "மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி" என்ற பட்டப்பெயர் அவனுக்கு இருந்தது.[10-அ]

இன்று கள்ளர் பட்டப்பெயர்களில் காணப்படும் ஈழங்கொண்டார், ஈழத்தரசு, ஈழத்தரையர், சிங்களராயர், சிங்களாந்தகர், சிங்களேந்திரியார், சிங்களர், கண்டியர் முதலிய பட்டப்பெயர்கள் சோழரின் ஈழவெற்றியோடு தொடர்புடையனவாகத் தெரிகின்றன.

ஈழங்கொண்டார் என்ற பட்டம் ஈழத்தை வென்று கைக்கொண்டவர் என்ற பொருளும், ஈழத்தரசு என்பது ஈழத்துக்கு அரசர் என்ற பொருளும் ஈழத்தரையர் என்பது ஈழத்திற்கு அரையர் என்ற பொருளும், சிங்களராயர் என்பது சிங்களர்க்கு அரசர் என்ற பொருளும் தருவனவாகும். சிங்களம் என்பது ஈழத்தின் மற்றொரு பெயராகும். சிங்களாந்தகன் என்பது சிங்களர்க்குக் கூற்றுவன் போன்றவன் என்று பொருள்படும். கண்டி என்பது சிங்களத்திலுள்ள ஓர் ஊரினைக் குறித்த பெயராகும். இராசராசனுக்குச் சிங்களாந்தகன், இராச கண்டியன் முதலிய பட்டப்பெயர்கள் இருந்தன.[11]

அம்பியர் என்ற பட்டமுடைய கள்ளர் இன மக்கள் தஞ்சை மாவட்டத்தில் முத்துவீரக்கண்டியன் பட்டி, நந்தவனம் பட்டி, மனையேறிப்பட்டி, ஆவாரம்பட்டி, புங்களூர் முதலிய தஞ்சை வட்டப்பகுதியிலும், கக்கரை, பின்னையூர், மண்டலக்கோட்டை, நெல்லுப்பட்டு, ஆர்சுற்றிப்பட்டு முதலிய ஒரத்தநாடு வட்டப்பகுதியிலும் பைங்காநாடு, தலையாமங்கலம், எடமேலையூர், வடுவூர், திருக்களர், பெருகவாழ்ந்தான், கருவாக்குறிச்சி, சொக்கனாவூர், கீராலத்தூர், சோழபாண்டி முதலிய மன்னை வட்டப் பகுதியிலும், ஆவிக்கோட்டை, பெரியகோட்டை, அதிராம்பட்டினம் முதலிய பட்டுக்கோட்டைப் பகுதியிலும் திருச்சின்னம்பூண்டி, மகாராசபுரம் முதலிய திருவையாறு வட்டப் பகுதியிலும், புதுக்கோட்டை மாவட்டத்தில் கீழக்கரை மீண்டார்கோட்டை, புதுக்கோட்டை விடுதி, பாச்சுக்கோட்டை, கீழாத்தூர் முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

சிங்களர் என்ற பட்டம் சிங்களார் எனத் திரிந்ததாகத் தோன்றுகின்றது. இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் புதுக்கோட்டை மாவட்டத்தில் காட்டுப்பட்டி முதலிய ஊர்களிலும் தஞ்சை மாவட்டம் மன்னார்குடி வட்டத்தில் பைங்காநாடு என்ற ஊரிலும் வாழுகின்றனர்.

ஈழத்தரையர், ஈழத்தரசு என்ற பட்டமுடையார் திருச்சி முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

வேங்கிராயர்

முதலாம் இராசராசசோழன் வென்ற நாடுகளில் ஒன்று வேங்கி நாடாகும். இது கிருட்டிணை, கோதாவரி ஆறுகளுக்கிடையே அமைந்த நிலப் பரப்பாகும். அதனைக் கீழைச்சாளுக்கியர் என்ற மரபினர் ஆண்டுவந்தனர். முதலாம் பராந்தகச் சோழன் கைப்பற்றிய அப்பகுதியைப் பின்னர் இராட்டிர கூடர்கள் கைப்பற்றினர். இழந்த அப்பகுதியை மீட்கவே இராசராசன் மீண்டும் அப்போரை நிகழ்த்தினான். போரில் இராட்டிரகூட மன்னன்

சடாவர்மனைக்கொன்று சத்தியவர்மன் என்பவனை அந்நாட்டு மன்னனாக முடிசூட்டினான். அவன் இறந்ததும் அவன் சகோதரன் மகன் விமலாதித்தனுக்குத் தன் மகள் குந்தவையை மணம்முடித்து வேங்கி நாட்டையும் அளித்து மகிழ்ந்தான். இவ்வுறவு சோழர்களுக்கும் வேங்கி மன்னர்களுக்கும் பல தலைமுறைகளாக நல்ல உறவை ஏற்படுத்தியது.[12]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று வேங்கிராயர் என்பதாகும். இப்பட்டப் பெயரால் அமைந்த வேங்கிராயன்குடிகாடு என்ற ஊர் தஞ்சாவூருக்குத் தெற்கே 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரில் வேங்கிராயர் பட்டம் உடைய கள்ளர் இனமக்கள் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். இவ்வூரிலிருந்து நெல்லுப்பட்டு, புதுப்பட்டி முதலிய ஊர்களில் இப்பட்டமுடையர் குடியேறியுள்ளனர். சோழர்கட்கும் வேங்கிநாட்டுக்கும் இடையே நிலவிய உறவை இப்பட்டம் நினைவூட்டுவது குறிப்பிடத்தக்கதாகும்.

சீட்புலியார்

இராசராசசோழன் வென்ற பகுதிகளில் சீட்புலி, பாகி முதலிய நாடுகளும் அடங்கும். சீட்புலி என்பது நெல்லூர் மாவட்டத்தின் வடபகுதியில் அமைந்த நாடாகும். கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று சிலிப்பியார் என்பதாகும். சீட்புலியார் என்பதே சிலிப்பியார் என்று மருவி வழங்குகின்றது என்று கருத இடமுண்டு. இப்பட்டப்பெயர் சீட்புலியை வென்ற சோழர்களோடு தொடர்புடையதாகத் தோன்றுகின்றது.

இப்பட்டப்பெயருடைய கள்ளர் இனமக்கள் மன்னார்குடி வட்டத்திலுள்ள வடுவூரிலும் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள அம்மையம்பட்டியிலும் வாழுகின்றனர். புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள கருக்காக்குறிச்சி என்ற ஊரில் சிலுக்கியார்

என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்கள் வாழுகின்றனர். இப்பட்டப்பெயர் சீட்புலியார் என்பதன் திரிபாக இருத்தல் கூடும்.

காலிங்கராயர்

கலிங்கநாடு என்பது கோதாவரி ஆற்றுக்கும் மகாநதி ஆற்றுக்கும் இடைப்பட்ட பகுதியாகும். அஃது இன்று வடசர்க்கார் என்னும் பகுதியில் அமைந்துள்ளது. சோழர்கள் இந்நாட்டின்மீது பலமுறை படையெடுத்துள்ளனர். முதலாம் இராசராசனுக்குப்பிறகு முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் நிகழ்த்திய கலிங்கப்போர் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. இப்போரில் குலோத்துங்கனின் படைத்தளபதியாக இருந்த கருணாகரத் தொண்டைமான் சோழர் படைக்குத் தலைமையேற்று அழியாப் புகழைச் சோழர்களுக்குப் பெற்றுத்தந்தான். இப்போர்ச் சிறப்பைப் பாராட்டு முகமாகக் கலிங்கத்துப்பரணி என்ற ஒரு காப்பியம் செயங்கொண்டாரால் பாடப்பட்டது. இப்போர் வெற்றி சோழர்களின் வலிமையை மேலும் உறுதிப் படுத்தியது.[13]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று காலிங்கராயர் என்பதாகும். சோழர்களின் கலிங்க வெற்றியோடு தொடர்புடைய இப்பட்டப்பெயர் கள்ளர்களுக்குச் சோழர்களோடு உள்ள உறவை வெளிப்படுத்துவதாகத் தோன்றுகின்றது.

இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சை மாவட்டத்தில் ஆழிவாய்க்கால், ஈச்சங்கோட்டை, செல்லம்பட்டி, வடக்கூர், கோ.தெக்கூர், கக்கரக்கோட்டை, பின்னையூர், சோழபுரம், பாச்சூர், கண்ணந்தங்குடி, பொய்யண்டார் கோட்டை முதலிய ஒரத்தநாடு வட்டத்திலுள்ள ஊர்களிலும் பெருகவாழ்ந்தான், நடுவக்களப்பான்

குன்னையூர் முதலிய மன்னார்குடி வட்டத்திலுள்ள ஊர்களிலும் புதுக்கோட்டை மாவட்டத்தில் சூரன்விடுதி, பள்ளத்துவிடுதி, மேலநத்தம், சுரோத்திரியம், கவளூர், வெழுவத்தூர், பொங்கநாதபுரம் முதலிய ஊர்களிலும் நாகப்பட்டினத்திலும் வாழுகின்றனர்.

உய்யக்கொண்டார்

இராசராசசோழனின் விருதுப்பெயர்களுள் ஒன்று உய்யக்கொண்டான் என்பதாகும். இப்பெயரிலுள்ள ஒரு வளநாடு சோழர் காலத்தில் இருந்தது. "அரிசிலுக்கும் காவிரிக்கும் நடுவான உய்யக்கொண்டார் வளநாட்டு திரைமூர் நாட்டுப் பள்ளிச் சந்தம் இறக்கின நெற்குப்பை அளந்தபடி நிலம்" என்ற தஞ்சைப் பெரியகோயில் கல்வெட்டு ஒன்று இவ்வளநாட்டைப் பற்றிய குறிப்பை வெளிப்படுத்துகின்றது. மேலும் உய்யக்கொண்டார் என்ற பெயரில் ஊர்கள், ஏரிகள், ஆறு முதலியன இருந்து வருகின்றன. சோழநாட்டுப் பாடல் பெற்ற சிவத் தலங்களுள் ஒன்று உய்யக்கொண்டான் திருமலை என்று அழைக்கப்படும் கற்குடி, என்ற ஊரும் திருச்சிராப்பள்ளிக்கு அருகில் காவிரியிலிருந்து பிரிந்து செல்லும் ஒரு ஆற்றுக்கு உய்யக்கொண்டான் வாய்க்கால் என்றும் வழங்குகிறது. வடவார்க்காடு மாவட்டத்தில் உய்யக்கொண்டான் சோழபுரமும் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருப்புத்தூர் வட்டத்தில் உய்யக்கொண்டான் என்ற ஊரும் தென்னார்க்காடு மாவட்டத்தில் விருத்தாசலவட்டத்தில் உய்யக்கொண்டராவி என்ற ஊரும் இப்பட்டப்பெயரில் அமைந்தனவாகும்.[14]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று உய்யக்கொண்டான் என்பதாகும். இராசராசசோழனின் பட்டப்பெயரோடு தொடர்புடைய இப்பட்டப்பெயர் கள்ளர்களுக்கும் சோழர்களுக்கும் உள்ள நெருங்கிய உறவை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

தெலிங்கராயர்

இராசராசனின் தெலுங்க வெற்றியைச் சிறப்பிக்கும் வகையில் அவனுக்குத் தெலுங்க குலகாலன் என்ற பட்டப்பெயர் வழங்கி வந்தது. தெலுங்கர் குலத்திற்குக் கூற்றுவன் போன்றவன் என்ற பொருளில் இப்பெயர் அமைந்துள்ளது.

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று தெலுங்கராயர் என்பதாகும். இப்பட்டப்பெயரில் தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் தெலுங்கன்குடிகாடு என்ற ஊர் அமைந்திருப்பதும் அவ்வூரில் இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் பெரும் எண்ணிக்கையில் வாழ்ந்து வருவதும் குறிப்பிடத்தக்கது. இப்பட்டப்பெயர் இராசராசசோழனோடு தொடர்புடையதாகத் தோன்றுகின்றது.

பஞ்சரமார்

இராசராச சோழனுக்குப் பிறகு சோழப் பேரரசை மேலும் விரிவடையச் செய்தவன் அவன் மகன் முதலாம் இராசேந்திர சோழன் ஆவான். இவன் இளவரசனாக இருந்தபொழுதே களம் பல கண்டு பல நாடுகளுக்கு மாதண்ட நாயகனாகவும் விளங்கியவன் 'பஞ்சவன் மாராயன்' என்ற பட்டம் தந்தையிடமிருந்து பெற்றவன் ஆவான்.

கள்ளர் பட்டப்பெயர்களுள் காணப்படும் பஞ்சரமார் என்ற பட்டப்பெயர் இராசேந்திர சோழனின் சிறப்புப் பெயரான பஞ்சவன் மாராயர் என்பதன் திரிந்த வடிவாகக் கொள்ளத் தோன்றுகின்றது.

துறையாண்டார்

முதலாம் இராசேந்திர சோழனின் மூன்றாம் ஆட்சியாண்டில் இவன் இடைத்துறை நாடு, வனவாசி, கொள்ளிப்பாக்கை முதலிய நாடுகளை வென்ற

செய்தி அறியப்படுகின்றது. இடைத்துறை நாடு என்பது கிருட்டிணா, துங்கபத்திரா ஆறுகளுக்கிடையே அமைந்த பகுதியாகும். இக்காலத்தில் அது பம்பாய் மாகாணத்திலுள்ள றெய்ச்சூர் மாவட்டமாகும்.[15]

கள்ளர் பட்டப்பெயர்களில் துறையாண்டார் என்பதும் ஒன்றாகும். இப்பட்டப்பெயர் துறையமர்ந்தார், துறையுண்டார் என்று சிறிது மாறியும் வழங்கி வருகின்றது. இது சோழர்கள் வென்ற இடைத்துறையோடு தொடர்புடைய தாகக் கொள்ளலாம். இன்று இப்பட்டப் பெயரைத் தாங்கி நிற்கும் ஓர் ஊர் ஒரத்தநாடு வட்டத்தில் துறையாண்டார்கோட்டை என்ற பெயரில் அமைந் திருப்பதும் இவ்வூரில் துறையாண்டார் என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்கள் பெரும் எண்ணிக்கையில் வாழ்ந்து வருவதும் குறிப்பிடத்தக்கனவாகும்.

மண்ணையார்

இராசேந்திர சோழன் வென்ற மற்றொரு நாடு மண்ணைக் கடக்கம் என்பதாகும். இஃது இப்பொழுது 'மால்கெட்' என்று வழங்குகின்றது. இது மானியகேடம் என்றும் அழைக்கப்படுகின்றது.[16]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று மண்ணையார் என்பதாகும். இது மண்ணைக் கடக்கத்தை வென்ற இராசேந்திர சோழனோடு தொடர்புடைய பட்டமாகத் தோன்றுகின்றது. இன்று இப்பட்டமுடைய கள்ளர் இன மக்கள் தஞ்சாவூர் வட்டத்தில் நாஞ்சிக்கோட்டை, அதினாம்பட்டு, விளார் முதலிய ஊர்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர்.

முடிகொண்டார்

முதலாம் இராசேந்திரசோழன்கி.பி. 1017 ஆம் ஆண்டு ஈழத்தின்மீது போர் தொடுத்து இலங்கை அரசனின் முடியையும் அங்கு அடைக்கலமாக

வைக்கப்பட்டிருந்த பாண்டியரின் முடியையும் இந்திர ஆரத்தையும் கைப்பற்றினான். இதன் காரணமாக இவனுக்கு 'முடிகொண்டான்' என்ற பட்டமும் வழங்கிவந்தது.

கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்று முடிகொண்டான் என்பதாகும். இப்பட்டப்பெயர் இராசேந்திர சோழனின் பட்டப்பெயரோடு ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் பட்டுக்கோட்டை, கூவனூர் முதலிய ஊர்களில் வாழுகின்றனர். முடிகொண்டார் என்ற இப்பட்டப்பெயர் முடியுண்டார் என்றும் வழங்கி வருகின்றது.

சக்கரர், சக்கரை, சக்கரநாட்டார், சக்கரப்ப நாடாள்வார்

முதலாம் இராசேந்திர சோழன் வெங்கி நாட்டின் வடபாலுள்ள சக்கரக்கோட்டம் என்ற நாட்டையும் வென்றான். சக்கரக்கோட்டம் என்பது விசாகப்பட்டினத்திற்கு வடமேற்கே இருந்த வத்ச நாட்டின் ஒரு பகுதியாகும். இக்காலத்தில் அது சித்திரக்கோட்டம் என்று அழைக்கப்படுகின்றது.[17]

கள்ளர் பட்டப் பெயர்களில் காணப்படும் சக்கரர், சக்கரை, சக்கரநாட்டார், சக்கரப்ப நாடாள்வார் போன்ற பட்டப்பெயர்கள் சோழர்களின் சக்கரக்கோட்ட வெற்றியோடு தொடர்புடைய பட்டப்பெயர்களாகத் தோன்றுகின்றன.

ஒட்டம் பிடிக்கியார்

இராசேந்திர சோழன் ஒட்டரதேயத்தை வென்று ஆதி நகரில் இந்திரரதன் என்பவனை வீழ்த்தி அப்பகுதியைக் கைப்பற்றினான். ஒட்டரதேயம் என்பது ஒட்டரவிடயம் என்று அழைக்கப்படும் இன்றைய ஒரிசா தேசமாகும்.[18]

கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்று ஒட்டம் பிடிக்கியார் என்பதாகும். இ:து ஒட்டரம் பிடிக்கியார் என்பதன் திரிந்த வடிவமாகலாம். இ:து இராசேந்திர சோழனின் ஒட்டர தேய வெற்றியோடு தொடர்புடைய பட்டப் பெயராகக் கொள்ள இடமிருக்கின்றது.

இலாடராயர்

இராசேந்திர சோழன் ஒட்டரதேய வெற்றிக்குப் பிறகு தண்டபுத்தி, தக்கணலாடம், உத்தரலாடம் என்ற நாடுகளை வென்றான். தக்கணலாடம் என்பது வங்காளத்திலுள்ள ஊக்ளி, ஔரா மாவட்டங்களை உள்ளடக்கிய நாடாகும்.[19] உத்தரலாடம் என்பது பீர்பூம், முர்சிதாபாத் மாவட்டங்களைக்கொண்ட பகுதியாகும். இதனை மகிபாலன் என்பவன் ஆண்டு வந்தான்.[20]

கள்ளர் பட்டப் பெயர்களில் காணப்படும் இலாடராயர் என்னும் பட்டப்பெயர் இராசேந்திர சோழனின் தக்கணலாட, உத்திரலாட வெற்றியோடு தொடர்புடைய பட்டப்பெயராகத் தோன்றுகின்றது.

கடாரம்கொண்டார், கடாரம்தாங்கியார், கடாரத்தரையர், கடாரத்தலைவர்

கடாரம் என்பது மலேயாவின் மேற்கரையில் தென்பகுதியில் இன்று 'கெடா' என்ற பெயருடன் அமைந்துள்ள பகுதியாகும். பரக்குமோதக்கடாகம், குளிறு தெண்டிரைக் குரைக்கடாகம், எனக் கலிங்கத்துப் பரணியாலும், காழகம் எனப் பட்டினப்பாலையாலும், கடாரம் எனச் செப்பேடுகளாலும் இது குறிப்பிடப்படுகின்றது.[21] இராசேந்திர சோழன் வென்ற பகுதிகளுள் இதுவும் ஒன்று.

கடாரம் கொண்டான், கடாரம் தாங்கியார், கடாரத் தலைவர் முதலிய கள்ளர் பட்டப்பெயர்கள் இராசேந்திர சோழனின் கடார வெற்றியோடு தொடர்புடையனவாகத் தோன்றுகின்றன.

கடாரத் தலைவர் என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டம் மன்னார்குடி வட்டத்திலும், கடாரத்தரையர் என்ற பட்டமுடைய கள்ளர் இன மக்கள் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள சம்பட்டி விடுதி, வெட்டன் விடுதி முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

விசயதேவர், விசயராயர்

ஸ்ரீ விசயம் என்பது இன்றைய சுமத்திர என்று வழங்கும் சுவர்ண தீவத்திலுள்ள பாலம்பாங் என்னும் இராச்சியமாகும்.[22] இராசேந்திர சோழன் வென்ற கடல்கடந்த பகுதிகளுள் இதுவும் ஒன்றாகும்.

கள்ளர் பட்டப் பெயர்களில் காணப்படும் விசயதேவர், விசயராயர் முதலிய பட்டப்பெயர்கள் இராசேந்திரசோழன் வென்ற ஸ்ரீ விசயவெற்றியோடு தொடர்புடையனவாகக் கொள்ளலாம்.

இன்று விசயராயர் என்ற பட்டமுடைய கள்ளர் இன மக்கள் தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு, வட்டத்திலுள்ள பஞ்சநதிக்கோட்டை, நெல்லுப்பட்டு, ஈச்சங்கோட்டை, கடுக்காக்கோட்டை, தஞ்சை வட்டத்திலுள்ள விளார், வலங்கைமான் வட்டத்திலுள்ள முனியூர், அவளிநல்லூர், மன்னார்குடி வட்டத்திலுள்ள சேரங்குளம், புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள திருக்களம்பூர், வாண்டாக்கோட்டை, முதலிய ஊர்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். இப்பட்டம் விசுவராயர் என்றும் திரிந்துள்ளது.

பப்பாளியார்

இராசேந்திரசோழன் வென்ற மாபப்பாளம் என்பது கிரா, பூச்சந்திக்கருகில் இருக்கிறது என்பர்.[23] கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்று பப்பாளியார் என்பதாகும். இராசேந்திர சோழனோடு தொடர்புடைய இப்பட்டப் பெயர் பம்பாளியார் என்று மெலித்தல் விகாரமாகவும் வழங்கிவருகின்றது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள கீரனூர், வெள்ளைவெட்டன்விடுதி, பசுமலை, சத்தியமங்கலம், தஞ்சை மாவட்டம் மன்னார்குடி வட்டத்திலுள்ள எடகீழையூர் முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

மாணக்கவாரர்

மாணக்கவாரம் என்பது இராசேந்திரசோழன் வென்ற இன்றைய நிக்கோபார் தீவாகும்.[24] கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்றான மாணக்கவாரர் என்பது இராசேந்திரன் வென்ற மாணக்கவாரத்தோடு தொடர்புடைய பட்டப் பெயராகத் தோன்றுகின்றது. இப்பட்டப்பெயர் மாமணக்காரர் என்று திரிந்து வழங்குகின்றது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள திருக்காட்டுப்பள்ளிக்கருகில் உள்ள பூண்டி மாதாகோயில் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

பன்னையார்

பன்னை என்பது சுமத்திரா தீவின் கீழ்க்கரையில் அமைந்துள்ள ஊராகும்.[25] இதனை இராசேந்திரசோழன் வென்று கைப்பற்றினான். அஃது இந்நாளில் பணி, பனை என்று வழங்குகின்றது.

கள்ளர் பட்டப்பெயர்களில் பன்னையார் என்பதும் ஒன்றாகும். இப்பட்டப்பெயர் இராசேந்திரசோழன் வென்ற இப்பன்னை வெற்றியோடு தொடர்புடைய பட்டப்பெயராகக் கொள்ளலாம்.

சோழ பாண்டியர்

இராசேந்திரசோழன் தன் மைந்தன் ஒருவனுக்குப் பாண்டி நாட்டின் அரசுரிமையைக் கொடுத்துச் சுந்தரசோழ பாண்டியன் என்று பட்டமும்கொடுத்தான். சோழர்குலத் தோன்றலாகிய இவன் பாண்டி நாட்டை ஆண்டதால் சோழ பாண்டியன் என்று அழைக்கப்பட்டான். மேலும் பாண்டிநாட்டின் ஒழுகாறுபடி அவன் சடையவர்மன் என்ற பட்டமும் பெற்றான்.[26]

சோழ பாண்டியர் என்பது கள்ளர்களுக்கு வழங்கிவரும் பட்டப்பெயர்களில் ஒன்றாகும். இது சோழர் பட்டப்பெயரோடு ஒத்திருப்பது சிந்திக்கத்தக்கதாகும். மேலும் சோழபாண்டி என்ற ஓர் ஊர் மன்னார்குடி வட்டத்தில் அமைந்துள்ளது என்பதும் அறியத்தக்கதாகும்.

குச்சிராயர்

கன்னக்குச்சிராயன் என்பது இரண்டாம் இராசேந்திரசோழன் மகனுக்கு வழங்கிய பட்டப்பெயராகும். இவன் கன்னக்குச்சிரம் எனப்படும் இன்றைய கன்னோசியின் தலைவனாகப் பொறுப்பேற்றிருந்தான்.[27]

கள்ளர் பட்டப்பெயர்களில் காணப்படும் குச்சிராயன் என்ற பட்டப்பெயர் சோழனின் வெற்றிப் பெயரைக் குறிப்பதாக அமைந்துள்ளது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரத்தநாடு, வலங்கைமான் வட்டத்திலுள்ள புளியகுடி, பாபநாசம்வட்டத்திலுள்ள சூலமங்கலம் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

வையராயர்

முதலாம் குலோத்துங்கசோழன் வயிராகரத்தையும் சக்கரக் கோட்டத்தையும் வென்றான் என அறியமுடிகின்றது.[28]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று வையராயர் என்பதாகும். இப்பட்டப்பெயர் குலோத்துங்கச் சோழன் வென்ற வைராகரத்தோடு தொடர்புடையதாகத் தோன்றுகின்றது. இது வைராகராயர் என்பதன் திரிந்த வடிவமாகக் கொள்ள முடிகின்றது.

இன்று இப்பட்டப்பெயருடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டத்தில் வலங்கைமான் வட்டத்திலுள்ள பாடகச் சேரியில் வாழுகின்றனர்.

புறம்பியத்தார்

விசயாலய சோழன் சோழப்பேரரசை நிறுவுதற்குக் காரணமாக அமைந்த போர் திரும்புறம்பயப் போராகும். திரும்புறம்பியம் என்பது கும்பகோணத்திற்கு அருகே உள்ள ஓர் ஊராகும். வரலாற்றுச் சிறப்புமிக்க இந்த வெற்றியோடு தொடர்புடைய புறம்பயத்தைச் சேர்ந்தவர் என்ற பொருளில் இப்பட்டப்பெயர் அமைந்துள்ளது.

கள்ளர்களில் இப்பட்டமுடைய மக்கள் மன்னார்குடி வட்டத்தில் திருக்களர் என்ற ஊரில் வசித்து வருகின்றனர்.

சீனத்தரையர்

சோழர்கள் வணிகத்தின் பொருட்டுப் பல குழுக்களைச் சீன நாட்டிற்கு அனுப்பியுள்ளனர். கி.பி.1012 ஆம் ஆண்டில் முதல் இராசேந்திரசோழனும்

கி.பி. 1033 ஆம் ஆண்டில் முதல் இராசேந்திரசோழனும் கி.பி. 1077 ஆம் ஆண்டில் முதல் குலோத்துங்கச்சோழனும் சீன நாட்டிற்கு வணிகத்தின்பொருட்டு தூதுக்குழுக்களை அனுப்பியுள்ள செய்தி அறிய முடிகிறது.[29]

கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்றான சீனத்தரையன் என்பது சோழர்களின் சீன உறவோடு தொடர்புடைய பட்டமாகத் தோன்றுகிறது.

அருமனநாட்டார்

முதலாம் இராசேந்திரசோழன் வென்ற நாடுகளுள் ஒன்று அருமண தேசமாகும். இஃது கடாரநாட்டுக்கு வழங்கும் மற்றொரு பெயராகும்.[30]

கள்ளர் பட்டப்பெயரான அருமணநாட்டார் என்பது இராசேந்திரசோழன் வென்ற அருமணநாட்டோடு தொடர்புடைய பட்டமாகத் தோன்றுகின்றது. இப்பட்டப்பெயர் இன்று ஈறுகெட்டு, மை விகுதி பெற்று அருமைநாட்டார் என்று வழங்கி வருகின்றது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரத்தநாடு வட்டம் கண்ணுகுடி, மன்னார்குடி வட்டம் பைங்காநாடு முதலிய ஊர்களில் மிகுதியாக வாழுகின்றனர்.

செயங்கொண்டார், செயங்கொண்டப்பிரியர்

முதலாம் இராசராசசோழனின் வெற்றிப் பெயர்களுள் ஒன்று செயங்கொண்டான் என்பதாகும். கள்ளர் பட்டப்பெயர்களுள் செயங்கொண்டார் என்ற பட்டமும் ஒன்றாகும். இப்பட்டப்பெயர் இராசராசசோழனை நினைவு படுத்துவதாக அமைந்துள்ளது. செயங்கொண்டப்பிரியர் என்ற பட்டமும் கள்ளர் பட்டப் பெயர்களில் ஒன்றாகக் காணப்படுகின்றது.

இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் மேலநத்தம் என்ற ஊரில் வாழுகின்றனர்.

## மாந்தராயர்

சேரநாட்டில் மாந்துறை என்ற ஓர் பகுதி உள்ளது. சோழர்கள் இப்பகுதியை வென்ற செய்தி அறியப்படுகிறது. கள்ளர் பட்டப்பெயர்களில் காணப்படும் மாந்தராயர் என்பது சோழர்கள் வென்ற மாந்துறையோடு தொடர்புடைய பட்டமாகக் கொள்ளத் தோன்றுகிறது.

## உறந்தைராயர்

சோழர்களின் பழைய தலைநகரங்களில் ஒன்று உறையூராகும். உறையூர் உறந்தை என்றும் வழங்கப்பெறும். உறந்தைராயர் என்பது கள்ளர்களின் பட்டப்பெயர்களில் ஒன்றாகும். உறந்தைக்கு அரையர் என்ற பொருளில் அமைந்துள்ளது. இப்பட்டப்பெயரால் அமைந்த ஓர் ஊர் ஒரத்தநாடு வட்டத்தில் அமைந்துள்ளது. இதற்கு உறந்தைராயன்குடிகாடு என்பது பெயராகும்.

## வில்லவராயர்

சேர மன்னர்களின் இலச்சினை வில் ஆகும். வில்லவர் என்பது சேரனைக் குறிக்கும் சொல்லாகும். வில்லவரை வென்றதனால் வில்லவராயர் என்று வில்லவர்க்கு அரசர் என்ற பொருளில் சோழனைக் குறிக்கும். கள்ளர் பட்டப் பெயர்களுள் ஒன்றான வில்லவராயர் என்பது சோழனின் சேர வெற்றியோடு தொடர்புடைய பட்டப் பெயராகக் கொள்ளலாம்.

வில்லவராயன் என்னும் பட்டமுடைய சயசிங்க குலகால வளநாட்டு மீசெங்கிளி நாட்டு வளம்பக்குடி அரையன் மகன் என்பவனைப் பற்றிய குறிப்புக் கல்வெட்டில் காணப்படுகிறது.[31]

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் வில்லவராயன்பட்டி என்று இப்பட்டப்பெயரால் அமைந்த ஊரில் மிகுதியாக வாழுகின்றனர்.

## அருவா நாட்டார், அருவாத்தலையார்

காவிரியின் கழிமுகப் பகுதிக்கு வடக்கேயுள்ள பெண்ணையாற்றுப் பள்ளத்தாக்கு அருவாநாடாகும். அதனை ஆண்டவர்கள் அருவாளர் எனப்பட்டனர். அருவா நாட்டின் வடபால் உள்ள பகுதி அருவாவடதலைநாடாகும். கரிகாற் சோழன் அப்பகுதியை வென்றான் என்று வரலாறு கூறும்.[32]

கள்ளர் பட்டப்பெயர்களில் காணப்படும் அருவா நாட்டார், அருவாத்தலையார் என்பது சோழர் வென்ற அருவா நாட்டோடு தொடர்புடைய பட்டங்களாகத் தோன்றுகின்றன. அருவாவடதலையார் என்பது அருவாத்தலையர் என்று இன்று திரிந்து வழங்கி வருகின்றது. அருவாநாட்டார் என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்கள் மன்னார்குடி வட்டத்திலுள்ள பைங்காநாடு என்ற ஊரில் வாழுகின்றனர்.

## ஒலியராயர்

கோனாட்டு ஒலியூர்க்கூற்றம் என்ற ஊர் புதுக்கோட்டை மாவட்டத்தில் அமைந்துள்ள பகுதியாகும். இப்பகுதியை ஆண்டவர் என்ற பொருளில் ஒலியராயர் என்ற பட்டம் இவர்களுக்கு வழங்கத் தொடங்கியிருக்கலாம். இன்று இப்பட்ட முடைய கள்ளர் இனமக்கள் மன்னார்குடி வட்டத்திலுள்ள பைங்காநாடு, தலையாமங்கலம், வடகரைவாசல், திருக்களர் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## இராரண்டார்

இரேனாண்டுச்சோழர் என்போர் தம்மைக் கரிகாற்சோழனின் வழித்தோன்றல்கள் என்று கூறிக்கொண்டு சோழர் என்ற பெயருடன் கர்நூல், கடப்பா முதலிய தெலுங்குப் பகுதியை ஆண்டுவந்தனர். இவர்கள் இரேனாண்டுச் சோழர் என்றும் தெலுங்குச்சோடர் என்றும் அழைக்கப்பெற்றனர். கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று இராரண்டார் என்பதாகும். இது ரேனாடாண்டார் என்பதன் திரிந்த வடிவமாகக் கொள்ளலாம். இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள கக்கரை, மன்னை வட்டத்திலுள்ள மேலநத்தம் என்ற ஊர்களில் வாழுகின்றனர்.

## மண்கொண்டார்

'மண்ணை கொண்ட சோழன்' என்று திருவொற்றியூரில் ஒரு மண்டபம் உள்ளது. இம்மண்டபம் முதலாம் இராசேந்திரசோழனின் மண்ணைக் கடக்க வெற்றியின் சின்னமாக எழுப்பப்பட்டது.[33] வடவார்க்காடு, செங்கற்பட்டு உள்ளிட்ட, பகுதிகளைச்சம்புவராயர் என்ற குறுநில மன்னர்கள் ஆண்டுவந்தனர். இவர்கள் சோழர்க்கு அடங்கிய சிற்றரசர்களாகவும் அரசியல் அதிகாரிகளாகவும் விளங்கினர். பிற்காலத்தில் அவர்கள் 'வென்று மண்கொண்ட' என்ற பட்டப் பெயரோடு ஆண்டு வந்துள்ளனர்.[34] கி.பி.1322 ஆம் ஆண்டு சகலலோக சக்கரவர்த்தி என்ற மண்கொண்ட சம்புவராயன் ஒருவன் பட்டம் சூட்டப்பெற்று ஆண்டுவந்துள்ளான்.

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றான மண்கொண்டார் என்பது இராசேந்திரசோழனின் வெற்றிப் பெயரான மண்ணை கொண்டான் என்பதன் திரிபாகக் கொள்ளலாம் அன்றியும் மண்கொண்ட என்ற பட்டங்கொண்ட சம்புவராயர்களைக் குறிக்கும் பட்டமாகவும் கொள்ள இடமிருக்கிறது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் பூக்காரத்தெரு ஒரத்தநாடு வட்டம் கண்ணந்தங்குடி, பட்டுக்கோட்டை வட்டம் கிளாமங்கலம், மன்னார்குடி வட்டம் செருமங்கலம், கள்ளியூர், நீடாமங்கலம் வட்டம் சித்தமல்லி, புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள மிரட்டுநிலை முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## வல்லாளதேவர்

சோழர் ஆட்சிக்காலத்தில் தமிழகத்தில் வல்லாளர் என்னும் அரசமரபினர் சோழர்களிடத்தில் செல்வாக்குப் பெற்றிருந்தனர். சோழசிங்கபுரத்திலுள்ள பராந்தகச்சோழனின் ஒன்பதாம் ஆட்சியாண்டு கல்வெட்டொன்று 'வல்லாள' என்ற இடத்தில் நடைபெற்ற போரைப் பற்றியும் கங்க மன்னன் இரண்டாம் பிருதிபதி பகைவரை வென்று பராந்தகனுக்கு உதவியாக விளங்கினான் என்றும் கூறுகின்றது.[35]

கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்று வல்லாள தேவர் என்பதாகும். இது சோழர்களோடு உறவுடைய வல்லாளர்களோடு தொடர்புடைய பட்டமாகத் தோன்றுகின்றது. இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் வட்டம் கொல்லங்கரை, அண்டிதம்பட்டு, சூரியம்பட்டியிலும், ஒரத்தநாடு, பாபநாசம் வட்டம் திருபுவனம், சூலமங்கலம், மன்னார்குடி வட்டம் பெருகவாழ்ந்தான், பட்டவெளி முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

## பதுங்கராயர்

முதற் பராந்தகச்சோழன் வைதும்பரை வென்றான் என்று உதயேந்திரச் செப்பேடுகள் கூறுகின்றன.[36] வைதும்ப மகாராசன் என்னும் பட்டமுடைய

இரண்டு சிற்றரசர்கள் கி.பி.961, 964, 965 ஆகிய ஆண்டுகளில் இருந்தனர் என்று திருக்கோவலூர்க் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.[37] வைதும்பர்கள் பிற்காலத்தில் சோழர்களுக்கு அடங்கிய சிற்றரசர்களாயிருந்தனர். இவர்கள் 9 ஆம் நூற்றாண்டில் இரேணாண்டை யாண்ட தெலுங்கர் என்றும் அன்னோர் கங்கர்க்குப் பகைவராகவும், வாணர்க்கு நண்பராகவும் விளங்கினர் என்றும் அறியமுடிகிறது.

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றாக விளங்கும் பதுங்கராயர் என்பது வைதும்பராயர் என்பதன் திரிபாகக் கொள்ளலாம். வைதுங்கர் என்பது காலப் போக்கில் பதுங்கர் என்றாகிவிட்டது. தமிழில் வகர பகர மாற்றம் இயல்பாய் அமைவதேயாகும். இப்பட்டமுடைய கள்ளர்களைச் சோழரோடு உறவுடைய வைதும்பரோடு தொடர்புபடுத்தலாம்.

சோழதரையர்

சோழநாட்டவர் அல்லது சோழ மண்ணுக்கு உரிமையுடையவர் என்ற பொருளில் இப்பட்டப்பெயர் அமைந்துள்ளது. முதற்பராந்தகச் சோழனின் 34 ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டொன்று இம்மன்னனின் படைத்தலைவன் சிறுகுளத்தூர் மாறன் பரமேசுவரனான செம்பியன் சோழியவரையன் என்பவன் சீட்புலி, நெல்லூர் முதலிய பகுதிகளை வென்று திருவொற்றியூர் கோயிலுக்கு நந்தா விளக்கெரிக்க 96 சாவா மூவாப் பேராடுகள் வைத்தான் என்று கூறுகின்றது.[38] செம்பிய சோழியவரையன் என்பது அரசன் அவனுக்கு வழங்கிய விருதுப் பெயராகும். சோழியவரையன் என்ற இப்பட்டப்பெயர் சோழியதரையன் என்றும் சோழயதரையன் என்றும் சோழதரையன் என்றும் மாறியிருக்கலாம்.

கள்ளர்களுக்கு வழங்கும் சோழதரையன் என்ற பட்டப்பெயர் செம்பியன் சோழியவரையன் என்பவனோடு தொடர்புடைய பட்டமாகக் கொள்ளலாம். இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள காரியாப்பட்டி, கீரனூர், திருச்சி மாவட்டத்திலுள்ள செம்பட்டு முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

<u>மேனாட்டரையர்</u>

வேள் நாடு என்பது வேணாடு எனப் புணரும். இந்நாடு சேரநாட்டின் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. ஒன்பதாம் திருமுறை பாடிய அருளாளருள் ஒருவர் வேணாட்டடிகள் என்பவராவார். வேணாட்டுப்பகுதியை இராசராசசோழன் வென்ற செய்தி வரலாறு மூலம் அறியமுடிகிறது.[39]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றான மேனாட்டரையர் என்பது வேணாட்டரையர் என்பதன் திரிபாகும். தமிழில் வகர மகர மாற்றம் இயல்பாக அமைவதுண்டு. (எ.கா.) வானம்-மானம். இப்பட்டப்பெயர் சோழர் வென்ற வேணாட்டோடு தொடர்புடையதாகத் தோன்றுகின்றது.

இன்று இப்பட்டப்பெயருடைய கள்ளர் குடியினர் தஞ்சை மாவட்டத்திலுள்ள பூண்டி, புனவாசல் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

மேனாட்டரையன் என்ற குறுநில மன்னனும் சமீன்தாரும் ஆகிய ஒருவனைப் பற்றித் தஞ்சை மாவட்ட ஆட்சியரிடமிருந்து பெறப்பட்ட செப்பேட்டில் குறிப்புக் காணப்படுகிறது. முகமதிய அரசனுக்குப் பல தொல்லைகளைக் கொடுத்துவந்த இவன் நார்த்தாமலையில் மறைந்துகொண்டு பல தொல்லைகள் கொடுத்து வந்ததாகவும் பிறகு நட்புரிமையோடு பழகினான் என்றும் அச்செப்பேட்டால் அறியமுடிகிறது.[40]

சிந்துராயர்

முதலாம் இராசராசசோழன் சாளுக்கிய நாட்டின் ஒருபகுதியான சிந்தவாடி என்ற நாட்டின்மீது படையெடுத்து அதனை ஆண்ட கண்டராதித்தராசன் என்பவனை கி.பி. 1046 ஆம் ஆண்டில் வென்றான்.[41] கள்ளர் பட்டப் பெயர்களுள் ஒன்றான சிந்துராயர் என்பது சோழனின் இவ்வெற்றியோடு தொடர்புடைய பட்டப்பெயராகக் கொள்ளலாம்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள கம்மங்காடு என்ற ஊரிலும் தஞ்சை மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள பஞ்சநதிக்கோட்டை என்ற ஊரிலும் வாழுகின்றனர்.

பொய்யண்டார்

சோழ மண்டலத்திலுள்ள இராசேந்திர சிங்க வளநாட்டில் அமைந்துள்ள 24 நாடுகளுள் ஒன்று பொய்கை நாடாகும்.[42] திருவையாறு, திருமழபாடி, பெரும்புலியூர், கண்டராதித்த சதுர்வேதிமங்கலம் முதலிய ஊர்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது இப்பொய்கை நாடாகும். சேத்திரத் திருத்தாண்டகத்தில் அப்பரடிகள் இப்பொய்கை பற்றிப் பாடுகின்றார். பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனாகிய தென்னவன் மூவேந்த வேளான் என்பவன் இப்பொய்கை நாட்டின் தலைவனாக விளங்கினான். இவன், இராசராசசோழன் தஞ்சை நகரில் எடுப்பித்த பெரிய கோயிலில் அரசனின் ஆணைப்படி, பல திருப்பணிகளைச் செய்துள்ளான்.[43]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று பொய்யண்டார் என்பதாகும். இப்பட்டம் மேற்கூறிய பொய்கை நாட்டை ஆண்டவர் என்ற பொருளில் அமைந்த பொய்கையாண்டார் என்பதன் திரிபாகக் கொள்ளலாம். தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் பொய்யண்டார்கோட்டை, பொய்யண்டார்குடிகாடு

என்ற இரண்டு ஊர்கள் உள்ளன. இவ்வூர்களில் பொய்யண்டார் என்ற பட்டப் பெயருடைய கள்ளர் இனமக்கள் மிகுதியாக வாழுவதும் குறிப்பிடத்தக்கனவாகும்.

மல்லிகொண்டார்

தொண்டை மண்டலப் பகுதியை முதலாம் இராசராசசோழன் வென்றபின் அதற்குச் செயங்கொண்ட சோழ மண்டலம் எனப் பெயரிட்டான். இம்மண்டலத்தில் பெரும்பாணப்பாடி என்ற பகுதியில் கரைவழி மல்லியூர் என்ற பகுதியும் அமைந்துள்ளது.[44]

மல்லிகொண்டார் என்று வழங்கும் கள்ளர் பட்டப்பெயர் இராசராசன் வென்ற கரைவழி மல்லியூரை வெற்றிகொண்டதன் அடையாளமாக அமைந்த பட்டம் போல் தோன்றுகின்றது. இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள நெடுவாக்கோட்டை, மண்டலக்கோட்டை, பனையக்கோட்டை, முதலிய ஊர்களில் மிகுதியாக வாழுகின்றனர்.

கடம்பராயர்

இரண்டாம் இராசராசசோழனின் அரசியல் தலைவனாக குலோத்துங்கச் சோழ கடம்பராயன் என்பவன் விளங்கினான். இவன் புதுக்கோட்டைப் பகுதியில் வாழ்ந்து வந்துள்ளான். குடுமியான்மலையில் உள்ள திருக்குன்றமுடையார்கோயிலுக்கு நாள்தோறும் இரண்டு விளக்கு எரிப்பதற்கு நிவந்தம் அளித்துள்ளான்.[45]

கள்ளர் பட்டப் பெயர்களுள் ஒன்றான கடம்பராயர் என்பது இவ்வதிகாரியோடு தொடர்புடைய பட்டமாகத் தோன்றுகிறது. இன்று இப் பட்டமுடைய கள்ளர் இனமக்கள் புதுக்கோட்டை மாவட்டத்தில் வடவாளம் என்ற ஊரிலும் தஞ்சை மாவட்டத்தில் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள மேலஉளூர் என்ற ஊரிலும் மிகுதியாக வாழுகின்றனர்.

மண்டராயர்

கும்பகோணம் வட்டம் திரைலோக்கி கைலாசநாதர் கோயில் இரண்டாம் இராசராசசோழனின் 8ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டொன்றில் இக்கோயிலைச் சேர்ந்த நால்வர் தேவர் இடம் கொண்டானான மண்டையராயன் என்பவனிடம் காசு பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக சந்திவிளக்கெரிக்க எண்ணெய் அளக்க வேண்டும் என்ற செய்தி சொல்லப்பட்டிருக்கிறது.[46]

கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்றான மண்டராயர் என்பது மேற்குறிப்பிட்ட மண்டையராயனோடு தொடர்புடையதுபோலக் காணப்படுகிறது. மண்டையராயர் என்பதே காலப்போக்கில் மண்ட்ராயர் என்று திரிந்து வழங்கியிருக்கலாம். தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள மேல உளூருக்கு அருகே மண்ட்ராயன்குடிகாடு என்ற ஓர் ஊரும் அங்கு மண்ட்ராயர் என்ற பட்டமுடைய கள்ளர் இனமக்களே மிகுந்த எண்ணிக்கையில் வாழுகின்ற செய்தியும் அறியமுடிகின்றது. மேலும் தஞ்சை மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள பெரிய பருத்திக்கோட்டை, பாபநாசம் வட்டம் புலிமங்கலம், நீடாமங்கலம் வட்டம் சித்தமல்லி, முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

இஃதன்றி, மண்டலராயர் என்னும் பெயரின் திரிபாகவும் இதனைக்கொள்ள இடமுண்டு.

தென்னதரையர்

திருத்துறைப்பூண்டி வட்டம் வடகாடு கோயிலூர் மூன்றாம் இராசேந்திர சோழனின் 4ஆவது ஆட்சியாண்டு கல்வெட்டில் மூன்றாம் இராசேந்திர சோழனின் அரசியல் அதிகாரியான தென்னவதரையன் என்பவன் இராசேந்திர சோழபுரத்து நகரத்தார், கோயிலுக்கு நிவந்தம் அளித்த செய்தியில் கையொப்பமிட்டுள்ளான்.[47]

13 ஆம் நூற்றாண்டில் கோனாட்டில் அந்நாட்டு மக்களாலும் பூசாரியாலும் மேலதிகாரிகளாலும் கோயிலுக்குரிய நிலம் விற்கப்பட்ட செய்தி அறியமுடிகிறது. அவ்வாறு விற்கப்பட்டு சாசனத்தில் கையெழுத்திட்டுள்ள அதிகாரிகளுள் ஒருவனான தென்னதிரையன் என்பவனும் ஒருவனாவான்.[48] தென்னதிரையன்பட்டி என்ற ஓர் ஊர் புதுக்கோட்டை மாவட்டத்தில் அமைந்துள்ளது.

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றான தென்னதரையன் என்பது மேற்கூறிய அதிகாரிகளோடு தொடர்புடைய பட்டமாகத் தோன்றுகிறது. இப்பட்டப்பெயர் தென்னதிரியர் - தென்னரையர் - தென்னவரையர் எனவும் வழங்கி வருகின்றது. இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் புதுக்கோட்டை மாவட்டம் தென்னதிரையன்பட்டி, இலைகடிவிடுதி, கறம்பக்குடி, தஞ்சை மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள சோழபுரம் மன்னை வட்டத்து நெடுவாக்கோட்டை முதலிய ஊர்களில் மிகுதியாக வாழுகின்றனர்.

மணவாளர்

மணவாளர் என்பதற்கு மாப்பிள்ளை என்று பெயர். திருமாலுக்கு மணவாளர் என்ற பெயரும் உண்டு. திருத்துறைப்பூண்டி வட்டத்திலுள்ள சேகல் என்ற ஊரில் அமைந்துள்ள வர்த்தமான ஈசுவரர்கோயில் மூன்றாம் இராசராச சோழனின் கல்வெட்டில் சேகல் திருவாண்டளந்த நாயனார்க்கு சிவப்பிராமணன் ஒருவன் அழகிய மணவாளன் என்பானிடம் பொன்னைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பலிசையாக் சந்திவிளக்கு எரிக்கச் சம்மதித்த செய்தி கூறப்பட்டுள்ளது.[49] மூன்றாம் குலோத்துங்க சோழன் கோப்பெருஞ்சிங்கன் என்ற குறுநில மன்னனுக்கு அவன் வீரம், ஆற்றல் முதலியவற்றைக்கண்டு அவனுக்குத் தன் மகளை மணம்செய்து கொடுத்தான். அதுமுதல் அவன் 'மணவாளப்பிரியன்' என்று அழைக்கப்பெற்றான். ia.

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று மணவாளர் என்பது. இப்பட்டப்பெயர் மேற்குறிப்பிட்டவர்களோடு தொடர்புடைய பட்டமாகத் தோன்றுகின்றது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் மண்ணவலார் என்ற ஊரில் மிகுதியாக வாழுகின்றனர். மணவாளர் என்பதே மண்ணவலார் என்று திரிந்து வழங்குவதாகக் கொள்ளலாம். மேலும் செம்பட்டி (புது) தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள கா.தெக்கூர், பெரியபருத்திக்கோட்டை முதலிய ஊர்களில் மிகுதியாக வாழுகின்றனர்.

காங்கேயன்
-------

வீரசோழப் பெரிய காங்கேயன் என்பவன் சோழ வல்லரசில் பெரும் வீரனாக விளங்கியுள்ளான். இவன் பெரியகுலத் தலைவன், கங்கை முதல்வன் என அழைக்கப்படுகின்றான். இவன் கொங்கு மன்னர்களின் முதல்வனும் ஆவான். இவன் குடியேறிய இடம் காங்கேயம் என்று அழைக்கப்படுகின்றது.[50]

நன்னிலம் வட்டம் திருவாஞ்சியம் கோயில் கல்வெட்டொன்றில் ஆதி சண்டிகேசுவரர் கோயிலுக்கு நிலம் விற்றுக்கொடுத்த செய்தியும் அதில் கையெழுத்திட்டுள்ள அதிகாரிகளுள் ஒருவனாக காங்கேயன் என்பவன் இடம் பெறுகின்ற செய்தியும் இடம் பெற்றுள்ளன.[51]

காங்கேயர் என்பது கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்றாகும். இவர்கள் சோழர் படைத்தலைவராகவும் அதிகாரியாகவும் கொங்கு மண்டலத்தில் பணியாற்றியோரின் வழியினராகக் கருத இடமுண்டு. இப்பட்டப்பெயரின் அடிப்படையில் ஓர் ஊர் தஞ்சை மாவட்டத்தில் அமைந்துள்ளது. அது காங்கேயன்பட்டி என்றே வழங்குகின்றது. இவ்வூரில் இப்பட்டமுடையாரே பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர்.

### அங்கராயர்

நன்னிலம் வட்டம் இராமநந்தீசுவரம் இராமநாதசாமி கோயிலிலுள்ள கோனேரிமேற்கொண்ட குலோத்துங்கச்சோழன் காலக்கல்வெட்டில் கையொப்ப மிட்டுள்ள அதிகாரியாக அங்கராயன் என்பவன் விளங்குகின்றான்.[52]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றாகிய அங்கராயர் என்பது மேற்குறிப்பிட்ட அரசியல் அதிகாரியோடு தொடர்புடைய பட்டமாகக் கொள்ளலாம். இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் இப்பட்டப் பெயரால் அமைந்த புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள அங்கராயன்பட்டி, வத்தனாக்கோட்டை, அண்டக்குளம், செம்பட்டி, தஞ்சை மாவட்டத்தில் மேட்டுப்பட்டி, புது ஆர்க்காடு, மன்னார்குடி வட்டத்திலுள்ள அரவத்தூர், பஞ்சவடி, முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

### முதலியார்

சோழர் காலத்தில் தலைவர்களையும் உயர் அதிகாரிகளையும் முதலிகள் என்று அழைக்கும் வழக்கம் இருந்திருக்கிறது.[53] முதலி என்ற சொல்லுக்கு முதன்மையானவர் என்று பொருளாகும். இவர்களுள் சேனை முதலி, படை முதலி, அகம்படி முதலி என மூவகை முதலிகள் உண்டு. தேவார ஆசிரியர்களை மூவர் முதலிகள் என்று அழைக்கும் வழக்கம் உண்டு.

கள்ளர் பட்டப்பெயர்களில் ஒன்றான முதலியார் என்பது சோழப் படையோடு தொடர்புடைய பட்டப்பெயராகக் கொள்ளலாம். இவர்கள் வழியினரே இப்பட்டமுடைய கள்ளர் இனத்தவர் எனலாம். இப்பட்டப் பெயரையுடைய ஓர் ஊர் ஒரத்தநாடு வட்டத்தில் முதலிப்பட்டி என்ற பெயரோடு விளங்குகின்றது. அங்கு முதலியார் பட்டமுடையவர்களே முதன்மையானவர்களாகவும் மிகுதியானவர்களாகவும் உள்ளனர். மேலும் தஞ்சாவூர் வட்டம் குருங்குளம், சுந்தராம்பட்டி, ஒரத்தநாடு வட்டத்திலுள்ள ஈச்சங்கோட்டை, தஞ்சை வட்டத்தில்

குளிச்சப்பட்டு, வாகரைக்கோட்டை, பட்டுக்கோட்டை வட்டத்திலுள்ள கிராமங்கலம், மன்னார்குடி வட்டத்தில் மூவரக்கோட்டை, பெருகவாழ்ந்தான், கீழ்க்கரம்பையம், நீடாமங்கலம் வட்டம் திருவரங்கநல்லூர் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

துண்டிராயர்

வீரராசேந்திர சோழன் வென்ற பகுதிகளில் ஒன்று துண்டிரம் என்பது. இங்கு இவன் 40,000 அந்தணர்களுக்குப் பிரம்மதேயங்கள் வழங்கினான்.[54]

கள்ளர் பட்டப் பெயர்களுள் ஒன்று துண்டிராயர் என்பதாகும். இது சோழன் வென்ற துண்டிரநாட்டோடு தொடர்புடைய பட்டமாகக் கொள்ளலாம். தஞ்சை வட்டத்தில் துண்டிராயன்பாடி என்று இப்பட்டப்பெயராலேயே அமைந்த ஓர் ஊரும் அங்குத் துண்டிராயர் என்ற பட்டமுடைய கள்ளர் இனத்தவரே மிகுதியாக வாழுகின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

பழங்கொண்டார்

முதலாம் இராசராசன் வென்ற பகுதிகளில் ஒன்று முந்நீர்ப் பழந்தீவு பன்னிராயிரம் என்பதாகும். இது பழந்தீவம் என்றும் அழைக்கப்பெறும். பழந்தீவம் கொண்டார் என்ற இப்பழந்தீவத்தோடு தொடர்புடைய பட்டப் பெயராக கள்ளர்களிடத்தில் காணப்படும் பழங்கொண்டார் என்ற பட்டத்தைக் கொள்ளலாம். பழந்தீவங்கொண்டார் என்பதே மருவி பழங்கொண்டார், பழங்கண்டார் என்று திரிந்து வழங்குகின்றது.

இன்று இப்பட்டப் பெயரையுடைய கள்ளர் இனத்தவர் இப்பட்டப் பெயராலேயே அமைந்த ஊர்களான பழங்கொண்டான்குடிகாடு, பழங்கொண்டான் கோட்டை முதலிய ஊர்களில் மிகுந்த எண்ணிக்கையில் வாழுகின்றனர். இவ்வூர்கள்

தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் அமைந்துள்ளன. மேலும் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள பொய்யுண்டார்கோட்டை முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

மங்கலார்; மங்கலத்தேவர்

நன்னிலம் வட்டம் எண்கண் பிரமபுரீசுவரர் கோயில் கல்வெட்டில் கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு கொடைக்குக் கையெழுத்திட்டுள்ள அதிகாரிகளுள் ஒருவனாக சோழமங்கல அரையன் என்பவன் இடம்பெற்றுள்ளான்.[55]

மங்கல நாடென்பது தஞ்சாவூர் மாவட்டத்தில் ஆர்வலக்கற்றத்திலுள்ள ஓர் ஊராகும்.[56] கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்றான மங்கலார், மங்கலத் தேவர் முதலிய பட்டப்பெயர்கள் மங்கல நாட்டோடும் மங்கல அரையனோடும் தொடர்புடைய பட்டங்களாகத் தோன்றுகின்றன.

மங்கலார் என்ற பட்டப்பெயரையுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் உச்சாணி, உடையாளிப்பட்டி, இலாகிடிப்பட்டி, செங்களூர், திருச்சி மாவட்டத்தில் திருச்சி, பழங்கனான்குடி முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

மங்கலத்தேவர் என்ற பட்டமுடைய கள்ளர் இனத்தவர் தஞ்சாவூர் மாவட்டத்தில் கொல்லங்கரை, சூரியம்பட்டி முதலிய ஊர்களில் வாழுகின்றனர். மங்கலத்தேவர் என்பது திரிந்து மங்காத்தேவர் என்றும் மொங்கத்தேவர் என்றும் வழங்கி வருகின்றது. புதுக்கோட்டை மாவட்டத்தில் மங்களத்தேவன்பட்டி என்ற ஊரும் இவ்வூரில் இப்பட்டமுடையாரும் உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கூர்சார்

இரண்டாம் இராசேந்திரசோழன் தான் வென்ற கன்னோசி இராச்சியத்தின் நினைவாகத் தன்மகனுக்குக் கன்னக்குச்சிராயன் என்று பெயரிட்டு

இம்மண்டலத்துக்கு அவனை அரசப்பிரதிநிதியாகவும் நியமித்தான். கன்னோசிக்குக் கூர்சரம் என்றும் பெயருண்டு.[57]

கள்ளர் பட்டப்பெயர்களுள் ஒன்று கூர்சார் என்பதாகும். இது கூர்சரராயர் என்பதன் திரிபாகக் கொள்ளலாம். கன்னக்குச்சிராயனின் பெயரே கூர்சரராயர் என்று கள்ளர்களின் பட்டப் பெயராக அமைந்திருக்கிறது என்று தோன்றுகிறது. கூர்சரராயர் என்பது திரிந்து கூர்சார் என்று இப்போது வழங்கி வருகின்றது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் ஒரத்தநாடு வட்டத்திலுள்ள கண்ணந்தங்குடி, நீடாமங்கலம் வட்டத்திலுள்ள வாசுதேவமங்கலம், இலாயம், பாபநாசம் வட்டத்திலுள்ள சூழியக்கோட்டை, திருபுவனம், முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

<u>அன்னுத்திப்பிரியன்; அயிரப்பிரியன்</u>

திருத்துறைப்பூண்டி வட்டத்திலுள்ள பஞ்சநதிக்குளம் என்ற ஊரிலுள்ள தனுக்கோடி ஈசுவரர் கல்வெட்டொன்றில் மூன்றாம் குலோத்துங்கச்சோழனின் அதிகாரிகளுள் ஒருவனான ஐந்நூற்றுவப் பிரியன் என்பவன் கையெழுத்திட்டுள்ளான்.[58]

முதலாம் குலோத்துங்கச் சோழனின் 36 ஆம் ஆட்சியாண்டில் மூன்று படைப்போர்க் கோயிலில் கைக்கோளர் என்பாரும் நாட்டுப் பழியிலி ஐநூற்றுவர் என்னும் பகைக் குழாங்களும் ஒரு கோயிலின் அறக்கட்டளையைப் பராமரிக்க இவ்வூர்ச் சபையோருடன் இணைந்து பணியாற்றினர்.[59]

வணிகர்களுள் நாநாதேச திசையாயிரத்து ஐந்நூற்றுவர், மணிக்கிராமத்தார், நகரத்தார், வளஞ்சியர், அஞ்சுவண்ணத்தார், என்ற பல குழுவினர் இருந்தனர்.

மேலே குறிப்பிட்ட குழுவினருள் நாநாதேச திசையாயிரத்து ஐந்நூற்றுவர், திசையாயிரத்து ஐந்நூற்றுவர் எனவும் ஐந்நூற்றுவர் எனவும் குறிக்கப்பெற்றுள்ளனர்.[60]

முந்நூற்றுவன், ஈராயிரவன் போன்ற பெயர்கள் அவர்கள் சேர்ந்திருந்த குழுக்களின் பெயராக இருந்திருக்கலாம். இவ்வாறு எண்களை அடிப்படையாக உடைய குழுவினர் கல்வெட்டுக்களிலும் வரலாற்று நூல்களிலும் காணப்படுகின்றனர். கள்ளர் பட்டப்பெயர்களில் அஞ்ஞூத்திப்பிரியன், ஆயிரப்பிரியன் என்னும் பட்டங்கள் காணப்படுகின்றன. இவை ஐந்நூற்றுப்பிரியன், ஆயிரப்பிரியன் என்பதன் திரிந்த வடிவங்களாகக் கொள்ளலாம். இவ்வாறு எண்ணிக்கையோடு கூடிய குழுவினர்மீது விருப்பம் உடையவர் என்ற பொருளில் பிரியர் என்று வருகின்றன. இவை அரசனையோ அல்லது அதிகாரியையோ குறித்து வரும் பட்டங்களாகக் கொள்ளலாம்.

ஆயிரப்பிரியர் என்ற பட்டமுடைய கள்ளர் இனத்தவர் திருச்சி மாவட்டத்தில் நாவல்பட்டு என்ற ஊரில் வாழுகின்றனர்.

செம்பியதரையன்

மூன்றாம் குலோத்துங்கச்சோழன் காலத்தில் செம்பியதரையன் என்ற பட்டப்பெயருடைய அதிகாரி இருந்துள்ளான்.[61] செம்பியதரையன் என்ற இப்பட்டம் அரசனால் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். செம்பியர் என்பது சோழர்க்கு வழங்கும் பெயர்களுள் ஒன்று ஆகும். சோழ மன்னனால் கொடுக்கப்பட்ட இப்பட்டப்பெயரே கள்ளர்களுக்கு வழங்கும் பட்டப்பெயர்களுள் ஒன்றாக விளங்குவது ஒப்புநோக்கத்தக்கதாகும்.

தொகுப்புரை

1. இடைக்காலச் சோழர் சிலருக்கு வழங்கிய பட்டங்களைக் கள்ளர்கள் பூண்டு வருகின்றனர். மேற்கொண்டார் என்னும் பட்டம் அத்தகையதாகும்.

2. சோழ மன்னர்கள் தம்உறவினர்களுக்கு ஆட்சியுரிமை கொடுத்துப் பட்டங்களும் வழங்கினர். இப்பட்டங்களுள் சில கள்ளர்களுக்கு வழங்குகிறது. சோழங்கர், சோழகர், சோழகங்கநாட்டார், முதலிய பட்டங்கள் அத்தகையனவாகும்.

3. நாடாள்வான் என்னும் பட்டமுடைய கள்ளர் முன்னர் இப்பட்டத்துடன் ஆண்ட மன்னர்களின் வழியினராவர்.

4. சோழ மன்னர்கள் வென்று கைக்கொண்ட நாடுகளோடு தொடர்புடைய பலபட்டங்கள் இன்று கள்ளர்களுக்கு வழங்குகின்றன. கொல்லத்தரையர், பாண்டியராயர், கொங்கரையர், கங்கநாட்டார், ஈழங்கொண்டார், சோழகங்க நாட்டார், ஈழத்தரையர், சிங்களேந்தியார் முதலான பட்டங்கள் அத்தகையனவாகும்.

5. மன்னருக்கேயுரிய பட்டங்களும் கள்ளர் பட்டங்களாகத் திகழ்கின்றன. உய்யக்கொண்டார் என்பது அவற்றுள் ஒன்றாகும்.

6. இராசேந்திரசோழனின் வெற்றியோடு தொடர்புடைய பல பட்டப் பெயர்கள் கள்ளர்களுக்கு வழங்குகின்றன. கடாரம்கொண்டார், விசயதேவர், விசயராயர், பம்பாளியார், மாணக்கவாரர், மண்ணையார் முதலிய பட்டப் பெயர்கள் அத்தகையனவாகும்.

7. எண்ணிக்கை அடிப்படையில் அமைந்த ஐந்நூற்றுவப்பிரியன், ஆயிரப்பிரியன் முதலான பட்டப்பெயர்களும் கள்ளர்களுக்கு வழங்கி வருகின்றன.

8. சோழர்களோடு தொடர்புடைய வேங்கிநாடு, கொங்குநாடு, துண்டீரநாடு, பாண்டியநாடு, ஈழநாடு, கலிங்கநாடு, வேணாடு, தொண்டைநாடு முதலான பல்வேறு நாடுகளோடும் தொடர்புடைய பட்டப்பெயர்கள் கள்ளர்களுக்கு வழங்கி வருகின்றன.

9. சோழனுக்கு உறவினர் என்னும் பொருளில் அமைந்த சோழன் கிளையார் என்னும் பட்டப்பெயர் கள்ளரில் ஒருசாரருக்கு வழங்குகின்றது.

இம்முடிபுகளால் கள்ளர்களின் ஒரு பகுதியினரை இடைக்காலச் சோழர்களின் வழித்தோன்றல்களாகக் கருதுவதன் பொருத்தம் புலப்படுகிறது.

சான்றெண் விளக்கக் குறிப்புக்கள்


1. ந.மு. வேங்கடசாமி நாட்டார், _கள்ளர் சரித்திரம்_, ப.38, மூன்றாம் பதிப்பு, 1984.
2. மேற்படி, ப.39.
3. மேற்படி., ப.40.
4. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், _பிற்காலச் சோழர் வரலாறு_, ப.106.
5. மேற்படி., ப.106.
6. மேற்படி., ப.107.
7. மேற்படி., ப.107.
8. ந.மு.வேங்கடசாமி நாட்டார், _கள்ளர் சரித்திரம்_, ப.39.
9. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், _பிற்காலச்சோழர் வரலாறு_, பக்.110-111.
10. Inscription 553 of 1920.
10அ. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், _பிற்காலச் சோழர் வரலாறு_ பக்.122-123.
11. Epy. Ind. Vol.VI, p.349.
12. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், _பிற்காலச் சோழர் வரலாறு_, ப.116.
13. மேற்படி., ப.118.
14. இரா.பி. சேதுபிள்ளை, _ஊரும் பேரும்_, பக்.121, 122.
15. Epy. Ind. Vol.XII, pp.295, 296.
16. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், _பிற்காலச்சோழர் வரலாறு_, ப.150.
17. Epy, Ind. Vol.IX, pp.178, 179.
18. சுந்தரேச வாண்டையார், _முப்பது கல்வெட்டுக்கள்_, ப.77.
19. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், _பிற்காலச் சோழர் வரலாறு_, ப.163.
20. Epy. Ind. Vol.XXXII, p.24.
21. Ibid., Vol.XIII, No.34.
22. Epy. Ind. Vol.IX, No.34.

23. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, ப.171.
24. மேற்படி., ப.173.
25. மேற்படி., ப.170.
26. மேற்படி., பக்.156, 157.
27. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள், ப.254.
28. வை. சுந்தரேச வாண்டையார், முப்பது கல்வெட்டுக்கள், ப.114.
29. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச்சோழர் வரலாறு, ப.587.
30. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள், ப.48.
31. வை. சுந்தரேச வாண்டையார், முப்பது கல்வெட்டுக்கள், ப.234.
32. மேற்படி, ப.137.
33. Epy. Ind., Vol.XIV, p.213-5.
34. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், கல்வெட்டு கூறும் உண்மைகள், ப.117.
35. Epy. Ind. Vol. IV, pp.221,225.
36. Epy. Ind. Vol.II, No.575.
37. Epy. Ind. Vol.IV, pp.142-144.
38. Epy. Ind. Vol.III, No.108.
39. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச்சோழர் வரலாறு, ப.200.
40. Cooper plates Govt. Museum, Madras, p.66.
41. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, ப.205.
42. வை. சுந்தரரேச வாண்டையார், முப்பது கல்வெட்டுக்கள், பக்.31,32.
43. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, ப.141.
44. வை. சுந்தரேச வாண்டையார், முப்பது கல்வெட்டுக்கள், ப.78.
45. Ins. of Pudukkottai State, No.135.
46. குடந்தைக் கல்வெட்டுத் தொகுதி,

47. இரா.நாகசாமி, திருத்துறைப்பூண்டி கல்வெட்டு, எண்:193.

48. Thirumalai, Studies in Ancient Township in Pudukkottai, p.

49. இரா.நாகசாமி, திருத்துறைப்பூண்டி கல்வெட்டுத் தொகுதி எண்:76.

50. சக்தி தேவி, கொங்கு நாட்டின் வரலாறு, பக்.232.

51. ஆ.பத்மாவதி, நன்னிலம் கல்வெட்டுத் தொகுதி எண்:111/1977.

52. மேற்படி., தொகுதி-3, எண்:508.

53. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள், ப.1144.

54. மேற்படி., ப.370.

55. ஆ.பத்மாவதி, நன்னிலம் கல்வெட்டுத் தொகுதி எண்:100.

56. M.S. Govindasamy, The Role of Fuedctories in Pallavas,

57. S.I.I., Vol.III.

58. இரா.நாகசாமி, திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டுத் தொகுதி, எண்:163/1976.

59. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, சோழர்கள், ப.508.

60. தி.வை.சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, பக்.576, 577.

61. இரா.நாகசாமி, திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டுத் தொகுதி எண்:163/1976.

1. அதியமான்களும் கள்ளர்களும்

அதியமான்கள் சங்க காலத்தில் தகடூரைத் தலைநகராகக் கொண்டு அதனைச் சூழ்ந்த பகுதிகளை ஆண்டு வந்துள்ளனர். இவர்கள் உதியர்களாகிய சேரர் வழிவந்தவர்கள் ஆவர்.[1] சங்க இலக்கியங்கள் இவர்களை 'மழவர் பெரும'[2], 'மழவர் பெருமகன்'[3] எனச் சுட்டுகின்றன.

அதியமான்களைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. வேறு ஆவணங்களில் இவர்களைப் பற்றிய செய்திகள் குறைந்தே காணப்படுகின்றன. அதியமான் மரபினர் அசோகர் காலம் முதல் அறியப்படும் சிறப்புக்குரியோராவர். அசோகரின் சாசனத்தில், 'சதிய புத்திரர்' என்று இவர்கள் சுட்டப்படுவர்.[4]

சங்க இலக்கியச் சான்றுகள்

அதியமான்களைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் பல அரிய செய்திகளைத் தருகின்றன. அதியமான் மரபினரின் முன்னோர் தமிழ்நாட்டுக்குக் கரும்பை அறிமுகம் செய்து வைத்தவர்கள் என்ற குறிப்பு புறநானூற்றில் காணப்படுகின்றது.[5] இவர்களைப் பற்றி ஔவையார், அரிசில்கிழார், பரணர், பெருஞ்சித்திரனார், மாமூலனார், நத்தத்தனார் ஆகியோர் பாடியுள்ளனர். அதியன் விண்ணத்தனார் என்னும் சங்கப்புலவர் இம்மரபினராதல் வேண்டும்.

சங்க இலக்கியங்களில் அதியமான் மரபில் அதியமான் நெடுமிடல், அதியமான் அஞ்சி, அதியமான் பொகுட்டெழினி என்ற மூன்று மன்னர்களைப்

பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. அதியமான் என்பது மரபுப் பெயர் என்றும் இவர்கள் பரம்பரையில் அஞ்சி, எழினி என்ற பட்டங்களை மாறிமாறிப் புனைந்து கொண்டனர் என்றும் திரு.செ.இராசு கூறுகின்றார்.[6]

அதியமான் மரபில் கொடை, வீரம் முதலிய பண்புகளால் மிகுதியாகப் போற்றப்படும் அரசன் அதியமான் நெடுமான் அஞ்சியாவான். இவனை ஔவையார், அச்சியத்தை மகள் நாகையார், பரணர், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், அரிசில்கிழார், பெருஞ்சித்திரனார், மாமூலனார் ஆகியோர் பாடியுள்ளனர்.

பல்லவர் காலம்

பல்லவர் காலத்தில் நந்திவர்மப் பல்லவன் ஆட்சியில் அதியமான் மரபினர் செல்வாக்குப் பெற்றிருந்தனர். இரண்டாம் நந்திவர்மன் தன் பகைவரை வெல்லத் தகடூரை ஆண்ட அதியமான் உதவியைப் பெற்றான்.[7]

சோழர் காலம்

பல்லவர்களை அடுத்துச் சிறப்பெய்திய இடைக்காலச் சோழர் காலத்தும் அதியமான்கள் அரசியலில் குறிப்பிடத்தக்க இடம்பெற்றிருந்தனர். கி.பி.11 ஆம் நூற்றாண்டில் முதற்குலோத்துங்கனின் கீழ் உயரதிகாரியாக விளங்கிய சாமந்த அதியமானைப் பற்றிக் கல்வெட்டுச் சான்றுள்ளது.[8] மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் இராசராச அதியமான் என்பவன் வாழ்ந்தான். இவன் திருவண்ணாமலைக் கோயிலுக்கும், தருமபுரி மல்லிகார்ச்சுனர் கோயிலுக்கும் கொடையளித்துள்ளான்.[9] இவன் மகன் விடுகாதழகிய பெருமான் இருபத்தைந்து ஆண்டுகாலம் ஆட்சிபுரிந்துள்ளான்.[10] இவனது ஆட்சி ஆந்திரத்தில்

சித்தூர் மாவட்டம், வடவார்க்காடு, தென்னார்க்காடு மாவட்டம் வரைப் பரவியிருந்தது. இவனது கல்வெட்டுக்கள் மூன்றாம் குலோத்துங்களின் இருபதாம் ஆட்சியாண்டு முதல் மூன்றாம் இராசராசனின் மூன்றாம் ஆட்சியாண்டுவரை ஆண்டுள்ளான் என்று கூறுகின்றது. இவன் வடவார்க்காடு மாவட்டம் திருமலையிலுள்ள சமண குடவரைக் கோயிலைப் புதுக்கினான். இக்கோயிலுக்கு மூன்று விளக்கெரிக்க நிவந்தங்கள் அளித்துள்ளான். கம்பை நல்லூரில் சிறுகோட்டை என்னுமிடத்தில் சிவன்கோயில் ஒன்றைக் கற்கோயிலாக எடுப்பித்துள்ளான்.[11]

விடுகாதழகிய பெருமாளுக்குப் பிறகு இப்பகுதியில் அதியமான்களின் செல்வாக்கும் முடிந்தது; சோழர்கள் தம் ஆட்சியையும் இழந்தனர். ஒய்சாளர் இப்பகுதியில் சொல்வாக்குப் பெற்றிருந்தனர்.

இவ்வாறு பேரரசன் அசோகன் காலம் முதல் நன்கு அறிமுகமாகி இடைக்காலச் சோழர் ஆட்சியின் இறுதிக்காலம் வரையில் தமிழக வரலாற்றில் சிறப்பிடம் பெற்று விளங்கிய அதியமான்களின் வரலாற்றை உலகம் தொடர்ந்து நினைவு கூரும் வகையில் கள்ளரின் ஒரு பிரிவினர் அதியமான் என்னும் குடும்பப் பட்டத்தினைத் தாங்கியுள்ளனர். இவர்கள் அதியமான்கள் என்றும் அதிகமான்கள் என்றும் இருவகையாக அழைக்கப்படுகின்றனர். சங்க இலக்கியங்களிலும் இவ்விரு நிலை வழக்கு இருப்பது எண்ணிப் பார்க்கத்தக்கதாகும். மரியாதையாகக் குறிப்பிடும் வகையில் அதியமார் என்னும் வழக்கும் காணப்படுகின்றது. இப்பட்டம் தாங்கிய கள்ளர் குடியினர் திருச்சி மாவட்டம் கூத்தப்பார், தஞ்சாவூர் மாவட்டம் காசவளநாடுபுதலூர் முதலிய ஊர்களில் பேரெண்ணிக்கையில் வாழுகின்றனர்

தகடூரைத் தலைநகராகக் கொண்டிருந்த அதியமான்கள் சோழப் பேரரசில் பெற்றிருந்த உயர்நிலை பல கல்வெட்டுக்களால் அறியலாகிறது. இவர்களின் தாயகம் தஞ்சையிலிருந்தும் திருச்சியிலிருந்தும் செய்மைக்கண் இருப்பினும்

அதியமான்களின் கால்வழியினர் இங்கு இருப்பதற்குக் காரணம் உண்டு. தஞ்சையும் கங்கைகொண்ட சோழபுரமும் சோழப் பேரரசின் தலைநகரங்களாக விளங்கின. எனவே, அரசில் உயர் அதிகாரிகளாகப் பணியாற்றியோர் தலைநகர்ப் பகுதியில் குடியேற வாய்ப்பிருந்தது என்று எண்ணத் தோன்றுகின்றது. இவர்கள் ஆண்ட பிற பகுதிகளிலும் இவர்களின் மரபினர் இருத்தல் கூடும். அன்னோர் இப்போது பல இனத்தாரோடும் கலந்திருக்க இடமுண்டு. எனினும் இவர்களின் கள்ளரினத் தொடர்புபோல் பிற இனத்தவரோடுள்ள தொடர்பினை அறியச் சான்றுகள் இல்லை என்று கருத வேண்டியுள்ளது.

## 2. இருக்கு வேளிரும் கள்ளரும்

புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள கொடும்பாளூர், அன்னவாசல் முதலிய பகுதிகளை இருக்குவேளிர் என்னும் மரபினர் ஆண்டு வந்தனர். இவர்கள் சோழர்களுக்குப் பெண் கொடுக்கும் உரிமை கொண்டோராவர். சுந்தரசோழன் காலத்தில் படைத்தளபதியாக இருந்து ஈழத்தை வென்று, அப்போரில் உயிர்நீத்த பெருமை கொடும்பாளூர் குறுநில மன்னர் பராந்தகன் சிறிய வேளாளரைச் சாரும். கொடும்பாளூர்க் கல்வெட்டுக்கள் கொடும்பாளூரைக் கொடும்பை எனக் குறிக்கின்றன. கொடும்பையை ஆண்டதால் கொடும்பைராயர் என அழைக்கப்பட்டனர்.[12]

இருங்கோ வேளிர் என்பது இவர்கள் குடியின் பெயராகும். இருங்கோ வேளிர் என்பது நாளடைவில் இருக்கு வேளிர் என்று திரிந்து வழங்கிற்று எனலாம். அன்னவாசல் பகுதியை ஆண்ட காரணத்தால் இவர்களுக்கு அன்னவாசல்ராயர் என்றும் பெயருண்டு.[13]

கள்ளர் பட்டங்களில் காணப்படும் பொடும்பராயர், இருங்களார், அன்னவாசல்ராயர் என்பன கொடும்பாளூர் குறுநில மன்னர்களோடு தொடர்புடைய பட்டங்களாகக் கொள்ளலாம்.[14]

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள ஊர்களான செங்கிப்பட்டி, சாணூரப்பட்டி, பாலையப்பட்டி, கரியாப்பட்டி, முத்துவீர கண்டியன்பட்டி, ஆவாரம்பட்டி, மனையேறிப்பட்டி, நந்தவனம்பட்டி, புங்கனூர், வீரமராசன்பேட்டை, கரையாம்பட்டி, புதுப்பட்டி, மாதுரான் புதுக்கோட்டை முதலான ஊர்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர்.[15]

3. களப்பிரரும் கள்ளரும்

சங்க காலத்திற்குப் பிறகு தமிழகத்தைக் களப்பிரர் என்ற அரச மரபினர் கி.பி.3 ஆம் நூற்றாண்டு முதல் 6 ஆம் நூற்றாண்டு வரை ஆண்டு வந்துள்ளனர். இவர்களைப் பற்றி வரலாற்று ஆசிரியர்களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

அச்சுத விக்கந்தன் என்ற களப்பிர மன்னன் சேர, சோழ, பாண்டியர்களை வென்று தமிழ்நாட்டின் பெரும்பகுதியைத் தன்னாட்சிக்குக் கொண்டுவந்தான் என்று யாப்பருங்கல விருத்தி ஆசிரியர் மேற்கோளில் கூறுகின்றார்.[16]

கூற்றனார் என்பவர் சோழநாட்டை ஆண்ட களப்பிர அரசராவார். இவரைக் கூற்றனார் என்றும் கூற்றுவ நாயனார் என்றும் கூறுவர். இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவராவார்.

"ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைகோன் அடியேன்"[17]

என்று சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத்தொகையில் இவரைக் குறிப்பிடுகின்றார். இவர் களப்பாளர் குலத்தவர் என்று நம்பியாண்டார் நம்பி, தமது திருத்தொண்டர் திருவந்தாதியில் "கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே" என்று கூறுகின்றார்.[18]

கி.பி.ஆறாம் நூற்றாண்டிற்குப் பிறகு தெற்கே பாண்டியர்களாலும் வடக்கே பல்லவர்களாலும் வலிகுன்றி கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டுகளில் அரசு அதிகாரிகளாகவும் ஊர்த் தலைவர்களாகவும் விளங்கினர்.[19]

முதலாம் இராசராசசோழன் காலத்தில் இடையள நாட்டுச் சிறுஞார் என்ற ஊரில் அவ்வூர்த் தலைவனாக இருந்த களப்பாளன் தன்னிச்சை என்பவன் திருமறைக் காட்டுப் புவனவிடங்கதேவர் கோயிலுக்கு நந்தா விளக்கிற்கு நிவந்தம் வைத்துள்ள செய்தி கல்வெட்டில் காணப்படுகிறது.[20]

முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் எய்தலூர் என்னும் ஊரைச் சார்ந்த களப்பாளன் செல்லையன் தொண்ணம்பி என்பவனின் மனைவி, கங்கைகொண்ட சோழ வளநாட்டுப் பட்டான் பாக்கை நாட்டு சோழ குல வல்லி நல்லூரிலுள்ள திருக்கண்ணீசுவரமுடைய மாதேவர்க்கு நிவந்தம் அளித்துள்ள செய்தியை அறியமுடிகிறது.[21]

இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் கங்கை கொண்ட சோழ களப்பாளன் என்பவன் அரசு அதிகாரியாக விளங்கியுள்ளான்.[22]

தஞ்சை மாவட்டத்திலுள்ள திருப்புகலூர் இறைவன்மீது திருப்புகலூர் அந்தாதி என்ற நூலை யாத்தக் களப்பாளராயர் நெற்குன்றங்கிழார் என்பவர் பாடியுள்ளார். மேலும் களப்பாளராசன் சாலை ஒன்றையும் அவர் ஏற்படுத்தியுள்ளார்.[23]

இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் சிதம்பரம் நடராசர் கோயில் கல்வெட்டில் கையெழுத்திட்டுள்ள அதிகாரிகளில் ஒருவனாகக் களப்பாளன் என்பவன் விளங்குகிறான்.[24]

சேக்கிழான் பாலறாவாயன் களப்பாளராயன் என்பவன் சேக்கிழாரின் தம்பியாக விளங்கியுள்ளான். இவன் திருவறத்துறை என்னும் ஊரில் ஞானசம்பந்தருக்கு முத்துச்சிவிகை விழா எடுக்க நிவந்தம் வழங்கியுள்ளான்.[25]

மூன்றாம் இராசேந்திர சோழன் காலத்தில் அழகப்பெருமாளான களப்பாளராயன் என்பவன் திருவாரூர் தியாகராச சுவாமி கோயிலுக்கு நிவந்தம் அளித்துள்ளான்.[26]

சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் சிதம்பரத்திலிருந்த களப்பாளராயன் தில்லை மாகாளிக்கு நிவந்தம் அளித்துள்ளான்.[27]

சடையவர்மன் வீரபாண்டியன் காலத்தில் சோழபுரத்தைச் சேர்ந்த உத்தம சோழபுர சதுர்வேதி மங்கலத்தில் களப்பாளராயர் என்பவர் நுழைவாயில் மண்டபம் ஒன்றை எடுப்பித்திருக்கிறார்.[28] அது உடையார் களப்பாளராயர் மண்டபம் என்று பெயர் பெறுகிறது.

சடையவர்மன் விக்கிரம பாண்டியன் காலத்தில் நிலக்கொடை அளித்த செய்தி கூறும் கல்வெட்டில் களப்பாளராயன் என்பானும் காணப் படுகின்றான்.[29]

விசயநகர மன்னன் கிருட்டிண தேவராயர் காலத்தில் 'இரு சமய விளக்கம்' என்னும் நூலை அரிதாசர் களப்பாளராயர் என்பவர் எழுதியுள்ளார்.[30]

இவ்வாறு சங்க காலத்திற்குப் பிறகு கி.பி. 6 ஆம் நூற்றாண்டு வரைத் தமிழகத்தை ஆண்டு அதன் பின்னர் சோழர் காலத்தில் அரசு அதிகாரிகளாகப்

பணியாற்றிய இவர்கள் பாண்டியர் காலத்திலும் உயர்நிலையில் இருந்துள்ளனர் என்பதைக் கல்வெட்டுக்களால் அறியமுடிகிறது.

இன்று வாழும் கள்ளர்களின் ஒரு பகுதியினருக்கு வழங்கும் களப்பாளர் களப்பிலார் களந்தையாண்டார் என்னும் பட்டங்களைக் கொண்டு கள்ளர்களுக்கு இவர்களோடு உள்ள தொடர்பை அறியமுடிகிறது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனமக்கள் தஞ்சை மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் தென்னமநாடு முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 4. திருக்கோவலூர் மலையமான்களும் கள்ளர்களும்

கள்ளர்களுக்கு வழங்கும் சில பட்டப்பெயர்களை ஆராயும்போது சங்க காலத்தளவிற்குப் பழம்பெருமை மிக்க மலையமான்களோடு இவர்களுக்குள்ள உறவினை அறியமுடிகின்றது. திருக்கோவலூரைத் தலைநகரமாகக் கொண்ட மலையமான்களை நினைவூட்டும் பட்டங்களும் அவர்கள் காலப்போக்கில் சூட்டிக்கொண்ட ஏனைய பட்டங்களோடு தொடர்புடைய பட்டங்களும் கள்ளர்களிடையே காணப்படுகின்றன.

திருக்கோவலூர் சங்ககாலத்தில் கோவலூர் என்றே பெயர் பெற்றிருந்தது. அதனைத் தலைநகராகக் கொண்ட கடையேழு வள்ளல்களுள் ஒருவரான காரி மலையமான் திருமுடிக்காரி என்றே அழைக்கப்பட்டான். கோவலூர் நாட்டில் புகழ்வாய்ந்த முள்ளூர்மலை அமைந்துள்ளது. இம்மலை சங்கப்புலவரால் புகழப்பட்ட சிறப்புக்குரியதாகும். காரி மூவேந்தராலும் மதிக்கப்பட்டான் என்பதைப் புறநானூறு சுட்டிக்காட்டுகின்றது. சோழர் களுள்ளும் இம்மரபினர் படைத்தலைவராக விளங்கினர் என்பது இம்மரபைச்

சார்ந்த ஒருவன் சோழிய ஏனாதி எனப் புகழப்படுவது கொண்டு அறியலாம். மலையராயர் என்றும், திரிபுற்ற நிலையில் மலையரார் என்றும் வழங்கும் கள்ளர் பட்டப்பெயர் புகழ்வாய்ந்த மலையர்களோடு கள்ளர்களுக்குள்ள உறவை உறவுபடுத்துகின்றது.

மலையமான்கள் ஆண்ட பகுதி சேதிநாடு என்றும் பிற்காலத்தில் அழைக்கப்பட்டது. 11 ஆம் நூற்றாண்டு முதல் மலையமான்கள் தம்மை சேதிராயர் என்று அழைத்துக்கொண்டனர். ஒருவனே தன்னை மலையமான் என்றும் சேதிராயன் என்றும் கூறிக்கொள்வதைக் காணமுடிகின்றது. பல்லவர் காலத்தில் கோவலூரை ஆண்ட மெய்ப்பொருள் நாயனார் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவராகப் பாராட்டப்பெறுகின்றார். முதலாம் நரசிம்மன் காலத்தில் மாந்தபருமர் என்னும் சேதிராயர் ஆண்டதாக அறிய முடிகின்றது. சேதிராயர் என்னும் சைவப் புலவர் பெருமகனார் ஒருவர் 11 ஆம் திருமுறையில் இடம்பெற்றிருக்கின்றார். பிற்காலச் சோழர் காலத்தில் இராசேந்திரசோழ சேதிராயர், விக்கிரமசோழ சேதிராயர், காமன் சேதிராயர், முதலாம் இராச கம்பீரச் சேதிராயர், இரண்டாம் இராச கம்பீரச் சேதிராயன் முதலான புகழ்வாய்ந்த தலைவர்கள் சோழர்களுக்கு அடங்கிய சிற்றரசர்களாகவோ அரசியல் அதிகாரிகளாகவோ விளங்கிப் பல்வேறு அறப்பணிகளில் ஈடுபட்டுத் தம்புகழ் நிறுவியுள்ளனர். சோழ மன்னர் களோடு இவர்களுக்கு இருந்த நெருக்கமான உறவினால் சோழநாட்டின் தலைநகரான தஞ்சைப் பகுதியில் இவர்கள் வந்து தங்குவதற்கு மிகுந்த வாய்ப்புக்கள் இருந்திருக்க வேண்டும். அதனால்தான் சேதிராயர் என்னும் பட்டமுடையார் தஞ்சைப்பகுதியில் குறிப்பிடத்தகுந்த எண்ணிக்கையில் வாழுகின்றனர். சேதிராயன் குடிகாடு என்னும் ஊர் ஒரத்தநாடு பகுதியில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. திருக்காட்டுப்பள்ளியை அடுத்துள்ள இளங்காட்டிலும் சேதிராயர்கள் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர்.

மலையமான்களின் கிளைக்குடியினர் வெவ்வேறு இடங்களிலும் தம்முடைய ஆட்சியைப் பரப்பியுள்ளனர். தம்முடைய நாட்டைப் பல பகுதிகளாகப் பகுத்துத் தனியுரிமையுடன் ஆண்டனர் என்றும் தெரிகிறது. இவர்கள் ஆண்ட பகுதிகளில் கிளியூர் என்பதும் ஒன்றாகும். கிளியூர் மலையமான்கள் என்று இவர்கள் அழைக்கப்பெற்றனர். தஞ்சை மாவட்டத்தில் கிளியூர் என்னும் பெயர் கொண்ட ஊர் அமைந்திருப்பதும் கிளியினார், கிளியூராயர் என்னும் பட்டங்களைக் கொண்டோர் இங்கு வாழுவதும் கிளியூர் மலையமான்களோடு இவர்களுக்குள்ள உறவை உறுதிப்படுத்தக் காணலாம்.

வாணகோப்பாடி நாடு என்பது ஒன்று கல்வெட்டுக்களில் பேசப் படுகின்றது. அது வாணர்களுக்குரியது. மலையமான்கள் வாணர்களுக்குரிய இப்பகுதியையும் தம் நாட்டோடு இணைத்துக் கொண்டதோடு தம் மேலாண்மையைக் குறிக்கும் வகையில் தம்மை வாணகோவரையர் என்றும் அழைத்துக் கொண்டனர். இது பாண்டி நாட்டை மேலாண்மை செய்த சோழ இளவரசர்கள் தம்மைப் பாண்டியர் என அழைத்துக்கொண்டதை ஒத்ததாகும். வாணகோவரையரின் தலைநகரம் மகதை என்பதாகும். கள்ளர்களில் ஒரு பிரிவினருக்கு வழங்கும் மாதையாண்டார் என்ற பட்டப்பெயருக்கும் மகதை நாட்டுக்கும் தொடர்பிருப்பதாகத் தெரிகிறது. தமிழில் இரண்டு உயிர் ஒலிகளுக்கிடையில் வரும் வல்லினம் இழக்கப் படுவதும் அதனை ஈடு செய்யும் வகையிலும் முதற்கண் நின்ற குறில் நெடிலாகத் திரிவதும் இயல்பான போக்காகும். பகுதி - பாதி, பகல் - பால், தொகுப்பு - தோப்பு என்பவை சான்றுகளாகும். இவ்வடிப்படையில் மகதை யாண்டார் என்பது மாதையாண்டார் என்று திரிந்தது என்று கொள்வதில் தவறில்லை.

சேதிராயர்கள் தஞ்சைப் பகுதியில் திருச்சினம்பூண்டி, திருவேதிகுடி, இளங்காடு, வேதபுரம் வாணாதிராயன்குடி என்னும் பகுதிகளிலும், ஒரத்தநாடு

வட்டத்தில் பனையக்கோட்டை, தலையாமங்கலம், தென்னமநாடு, சேதிராயன் குடிகாடு ஆகிய பகுதிகளிலும், மன்னார்குடி வட்டத்தில் சோழ பாண்டியிலும், புதுக்கோட்டை மாவட்டத்தில் மழையூரிலும் நெருங்கி வாழுகின்றனர். முற்கூறிய பனையக்கோட்டையிலேயே மாதையாண்டார் என்ற பட்டமிருப்பது ஆழ்ந்த சிந்தனைக்குரியதாகும்.

5. மழவராயரும் கள்ளரும்

மழவர் என்ற சொல்லுக்கு வீரர், இளையோர் எனப் பொருள் கொள்ளமுடியும். 'மழவும் குழவும் இளமைப் பொருள' என்பது தொல்காப்பியம்.[32] மழவர் குடியைச் சேர்ந்த சில குழுவினர் சேரர்க்கும் அதியர்க்கும் பிற மன்னர்க்கும் மெய்க்காப்பாளர் ஆயினர். சேரமன்னன் 'மழவர் மெய்ம்மறை' என அழைக்கப்படுகிறான்.[33] எந்த அரசனின் ஆணைக்கும் அடங்கி நடக்கமுடியாத மழவர் குடியைச் சார்ந்த மற்றவர் தமிழ்நாட்டில் வடக்கே திருவேங்கடமலை வரையில் சுற்றித் திரியலாயினர்.[34] பிறகு அவர்கள் சோழநாட்டில் நிலையாகத் தங்கி வாழத் தலைப்பட்டனர். அவர்கள் வாழ்ந்த பகுதி மழநாடு எனப்பட்டது. அவர்கள் அங்குப் பெருஞ்சிறப்போடு வாழ்ந்தனர். மழபாடி என்பது மழவர்கள் பாடியமைத்துத் தங்கிய இடமாகும். இதுபோன்ற, வேறுசில பெயர்களும் மழவரின் பெருமைக்குச் சான்று பகர்வனவாகும்.

மழவர்கள் எல்லாரும் வீரத்திற் சிறந்தவர்களாக இருந்தனர். இதனால் மழவர் என்ற சொல் பொதுவில் வீரர் என்னும் பொருள் குறிப்பதாயிற்று.[35] 'மழவர் என்பார் சில வீரர்' என்பது நச்சினார்க்கினியர் உரையாகும். இதை நோக்கும்போது மூத்த குடியினரான[36] தமிழ் வீரரைக் குறிக்கும் மறவர் என்ற சொல்லின் திரிந்த வடிவமே மழவர் என்பதோ என்ற ஐயம் எழுகிறது. சங்கப் பாடல்கள் மறக்குடியைத் தமிழ்நாட்டின் மிக்க

பழங்குடி என்ற பொருளில் 'மூதில்' என வழங்குகின்றன. 'முதிற் பெண்டிர்' எனப் புறப்பாட்டில் வரும் சொற்றொடர்க்கு அதன் உரையாசிரியர் 'முதிய மறக்குடியில் பிறந்த பெண்டிர்' என்று உரையெழுதுகிறார்.[37] மூதில் மகளிர்–மறக்குடி மகளிர்[38] என வருவதும் காணலாம்.

தமிழ்நாட்டின் தெற்குப் பகுதியில், மழவர்கள் எப்பார் தொடர்ந்து ஆற்றல் மிக்கவர்களாகவே வாழ்ந்திருந்தனர். ஆனால் மழவர், மறவர் என்ற இரு சொற்களால் குறிக்கப்படுபவர்களை வேறுவேறானவர்கள் எனத் தமிழ் இலக்கியம் உணர்த்துகின்றது. அகம் 35 ஆம் பாடலில் இந்த வேறுபாட்டை விளக்கும் குறிப்பொன்று வருகிறது. நீண்ட கூரிய வேலை ஏந்திய குறும்படை மழவர்கள், தங்கள் நாட்டகத்தே புகுந்த ஆனிரைகளைக் கவர்ந்து சென்ற வெட்சி மறவர்களைத் துரத்திச் சென்று போரில் வென்று ஆனிரைகளை மீட்குங் கால் போரில் மிக்க வீரம் காட்டி இறந்த மறவர்கட்கு அவர்களை மறைத்த பதுக்கையில் நடுகல் இட்டுப் பீலி சூட்டித் துடிப்பகுத்துத் தோப்பிக் கள்ளொடு ஆட்டுக்குட்டியையும் பலியாகக் கொடுத்துப் பதுக்கைக் கடவுளைப் பேணுதற்கு இடமாகிய கவர்த்த வழி[39] என்பதாக அமைகிறது.

இங்கு மழவரும் மறவரும் ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கொண்டதாகக் கூறப்படுகிறது. இவ்வாறு சண்டையிட்டுக் கொண்டனர் என்று இருப்பினும் இவ்விரு சொற்களும் வீரத்தைக் குறிக்கும் 'மறம்' என்ற சொல்லிலிருந்து பிறந்தவை எனக் கொள்ளுவதற்குத் தடையில்லை எனலாம். தொல்காப்பியப்படி ழகரமும் றகரமும் ஒரே வகை முயற்சியால் பிறக்கும் மெய்யொலிகளாகும்.

மழவர் என்ற சொல்லுக்கு மற்றொரு வகைப் பிறப்பு முறையும் கொள்ளலாம். இளமை என்ற பொருளில் மழ என்னும் சொல் வரும் என்ற

தொல்காப்பியர் கூற்றுப்படி, தமிழ்நாட்டு வீரர்கள் முதுமையில் இறப்பதைவிட இளமையிலேயே போர்க்களத்தில் மடிவதைச் சிறப்பாகக் கருதினர். ஒருவன் போரில் அன்றி நோயால் இறந்துவிட்டாலும் அவனுடலை வாளால் போழ்ந்து வீரமரணம் அளிப்பது வழக்கமாகும்.[40] இளமை நீங்கி முதுமை வந்தவுடன் சாதாரண மனிதனோ அல்லது அரசனோ தன் ஆற்றல் இழந்துவிடுவான் என்ற கொள்கை பண்டைக்காலத்தில் மக்களிடையே பரவியிருந்தது. எனவே, வீரர்கள் இளையர்-மறவர் என அழைக்கப்பட்டதன் காரணம் விளங்குகிறது.

ஆவியென்பான், உருவக்குதிரை மறவர்களைப் போரில் வென்று துரத்தினான்.[41] மறவர்களில் பெரும்பாலோர் அரசரிடம் தலைமை சான்ற வீரராய் அமர்ந்திருந்தனர். அதியன் மறவர் பெருமகன் என்று அழைக்கப் பட்டதிலிருந்து இது தெரிகிறது.[42] சேரர்களிடமும்[43] ஓரியிடமும்[44] இவர்கள் வீரர்களாயிருந்தனர். இம்மறவர்களிடமிருந்த குதிரைகளைப் பற்றியும் அறிய முடிகிறது. கொல்லிமறவன் என்பவனைப் பற்றிய குறிப்பும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது.

மறவர்கள் தமக்கென ஒரு சிறு நாடு உடையவராயிருந்தனர் என்ற குறிப்பும் சங்க இலக்கியத்திற் காணப்படுகிறது. மறவர்களையடக்கிய புல்லி மறவர் புலத்தையே வணங்கச் செய்தவனாகப் புகழப்படுகின்றான்.[45] எனவே மறவர்களின் ஆட்சியில் ஒரு நாடு இருந்தமை புலனாகிறது. எனவே, சேர நாட்டிலும் தமிழகத்தின் வடக்கெல்லை வரையுள்ள பிற பகுதிகளிலும் பரவியிருந்த மறவர்கள் இறுதியில் அமைதியுற்றுச் சோழநாட்டின் ஒரு பகுதியில் நிலைத்து வாழத் தலைப்பட்டார்கள் எனலாம்.

மறவராயர் என்னும் தொடரை வீரர்களுக்கு அரசர் அல்லது தலைவர் என்று பொருள் விரிக்கலாம். மறநாடு என்பது இன்றைய பழுவூரைச்

சேர்ந்த பகுதியாகும். இப்பகுதியை ஆண்டதனால் இவர்களுக்குப் பழுவேட்டரையர் என்ற பெயருமுண்டு. திருமழபாடி முதலிய இடங்களில் இவர்கள் பாடி வீடு முதலியன அமைத்து அப்பகுதிகளில் மிக்க செல்வாக்குப் பெற்று விளங்கினர். இவர்கள் சோழர்களோடு நெருங்கிய நட்புக் கொண்டிருந்தனர். சோழர்களுக்குப் பெண் கொடுக்கும் உரிமை கொண்டிருந்தனர். சோழர்களின் படைத்தலைவர்களாயிருந்து பல வெற்றிகளை அவர்களுக்குத் தேடித் தந்தனர்.

அடிகள் பழுவேட்டரையன் கண்டன் மழவன்

இவன் இராசராசசோழன் காலத்தில் வாழ்ந்து அவனுக்குக் கீழ் ஆண்ட குறுநில மன்னர்களில் முதன்மையானவன் என்று கருதத்தக்கவனாவான். இவன் குறுநில மன்னர்களுக்குரிய எல்லாச் சிறப்புக்களும் பெற்றிருந்தான். இவன் பேரரசர் போன்றே பெருந்தரம் அதிகாரிகளை நியமிக்கும் உரிமை பெற்றிருந்தான்.[46]

கொல்லி மழவன் ஒற்றியூரன் பிருதிகண்டவர்மன்

இவன் இராசராசசோழனுக்குக் கீழிருந்த குறுநில மன்னர்களில் ஒருவனாக விளங்கினான். இராசராசசோழனின் தந்தை பராந்தகச் சோழனோடு இவன் தந்தை ஈழப்போரில் பங்கு பெற்று உயிர் துறந்தான்.[47]

உதயதிவாகரன் கூத்தாடியான வீரராசேந்திர மழவராயன்

இவன் இரண்டாம் இராசேந்திரசோழனின் அரசியல் அதிகாரியாவான். இவன் அரசனின் ஆணைகளில் கையெழுத்திட்ட செய்தி அறியமுடிகிறது.[48]

மும்முடிச்சோழனான பரமன் மழபாடியார்

இவன் இராசராசசோழனின் படைத்தலைவனாகச் சீத்புலி, பாகி நாடுகளை வென்று வெற்றியைத் தேடித் தந்தவன். அந்நாடுகளிலிருந்து கொண்டு

வந்த நிறைப்பொருள்களுள் தொள்ளாயிரம் ஆடுகளைக் கச்சிப்பேட்டு ஐஞ்சந்தி துர்க்கைக்குச் சாவாமூவாப் பேராடுகளாக அளித்துள்ளான்.[49]

செம்பியன் மாதேவி, பஞ்சவன் மாதேவி

கண்டராதித்தசோழனின் மனைவி செம்பியன் மாதேவி ஒரு மழவர் மகளாவார். இவ்வுண்மையை மழவராயர் மகளார் ஸ்ரீகண்டராதித்த பெருமான் தேவியவர் என்ற கல்வெட்டுப் பகுதியால் அறியலாம்.[50] இராசராசசோழனின் மனைவியரில் ஒருத்தியான பஞ்சவன் மாதேவி என்பவள் மழவராயர் குடியில் பிறந்தவள் ஆவாள்.[51]

பழுவூர் பழுவேட்டரையன் கண்டன் அமுதன்

இவன் பராந்தகச் சோழனுக்கும் இராசசிம்மபாண்டியனுக்கும் நடந்த போரில் சோழனின் படைத்தலைவனாக விளங்கினான்.[52]

இவ்வாறு தொல்குடியினராகிய மழவராயர் குடியினர் சோழர்களுக்குப் பெண் கொடுக்கும் உரிமை உடையவர்களாயிருந்ததோடு அவர்களுக்கு நம்பிக்கைக்கு உரிய படைத்துணையாகவும் அரசியல் அதிகாரிகளாகவும் விளங்கினர்.

குடந்தை வட்டத்திலுள்ள திருக்கோந்திட்டை வேதபுரீசுவரர் கோயில் கல்வெட்டில் உத்தமச்சோழனின் மனைவியான மழவராயனின் மகள் கிழானடிகள் இக்கோயிலுக்கு இறையிலி நிலம் அளித்துள்ளாள்.[53]

நன்னிலம் வட்டம் திருச்செங்காட்டன்குடி உத்திராபதீசுவரர் கோயில் மூன்றாம் குலோத்துங்கசோழன் கல்வெட்டில் நிலம் காணியாகும்படிச் செய்த அரசு ஆணையில் மழவரையன் என்பவன் கையெழுத்திட்டுள்ளான்.[54]

நன்னிலம் வட்டம் இராமநதீசுவரம் இராமநாதசாமி கோயில் கோனேரின்மை கொண்டான் குலோத்துங்க சோழனின் கல்வெட்டில் மழவராயன், என்ற குறிப்புக் காணப்படுகின்றது.[55]

நன்னிலம் வட்டம் திருச்சிறுகுடி சூட்சுமபுரீசுவரர் ஆலய வீரராசேந்திரனின் ஏழாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் மழவதரையன் என்ற குறிப்புக் காணப்படுகிறது.[56]

தஞ்சாவூர் மாவட்டத்தில் மன்னார்குடி வட்டத்தில் மழவராயநல்லூர் என்ற ஓர் ஊர் உள்ளது. பாண்டிய நாட்டில் மழவராயன் ஏந்தல் என்ற ஓர் ஊர் உள்ளது. பாண்டிய நாட்டின் அரியணைக்கு மழவராயன் என்ற ஒரு பெயரும் உண்டு.

இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் ஒரத்தநாடு வட்டம் நெல்லுப்பட்டு, பஞ்சநதிக்கோட்டை, தெக்கூர், காட்டுக்குறிச்சி, செல்லம்பட்டி, பொய்யுண்டார் கோட்டை முதலிய ஊர்களிலும், புதுக்கோட்டை மாவட்டத்தில் கிள்ளுக்கோட்டை, மழவராயன்பட்டி, கீரனூர், முதுகுளம், அரையன்பட்டி முதலிய ஊர்களிலும் தஞ்சை மாவட்டத்தில் கல்விராயன்பேட்டை, பீமன்பட்டி, புங்கனூர், தத்தனூர் சீதாப்பட்டி, கண்டனூர், களமாவூர் முதலிய ஊர்களிலும் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர்.

மேற்கண்ட சான்றுகளால் பழமையான மழவர் குடியினர் இடைக்காலச் சோழர்களின் பெருமைக்கும் புகழுக்கும் காரணமானவர்களாக விளங்கினார்கள் என்றும் இன்று வாழும் மழவராயர்கள் அப்பெருமக்களின் வழித்தோன்றல்கள் என்றும் உணரமுடிகிறது.

## 6. முத்தரையரும் கள்ளரும்

சங்ககாலத்திற்குப் பின் தமிழகத்தின் சில பகுதிகளை ஆண்டோருள் முத்தரையர் என்பார் குறிப்பிடத்தக்கோராவர். இவர்களைப் பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உண்டு. இவர்களை, சங்ககால மன்னர்களை வீழ்த்தி இருண்டகாலத்தை உருவாக்கியோராகக் கருதப்படும் களப்பிரர்களோடு உறவுபடுத்துவார் உளர். இதற்கு மாறாக முத்தரையரையும் களப்பிரரையும் வெவ்வேறு குடியினராகக் கருதுவாரும் உண்டு. இருவரும் ஒரு குடியிலிருந்து தோன்றிய இருகிளைக் குடியினர் என்று கருதுவார் உளர். கள்ளர் குடியினரிடையே வழங்கிவரும் மூன்று பட்டப்பெயர்கள் முத்தரையர்க்கும் கள்ளர்க்கும் இடையே உள்ள குருதி உறவைக் குறிப்பனவாகத் தோன்றுகின்றன. அப்பட்டப் பெயர்களாவன, 1. மானமுத்தரையர், 2. செம்பிய முத்தரையர், 3. வங்கார முத்தரையர் என்பனவாகும். இதனை ஆய்வதன் முன் முத்தரையர் பற்றிய சுருக்கமான வரலாற்றை அறிவது நலம்.

மைசூரின் தென்பகுதியை ஆண்ட கங்க மன்னர்களில் சிலரின் பெயரோடு முத்தரைசர் என்ற பட்டம் சேர்க்கப்பட்டுக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றது. எடுத்துக்காட்டாகக் 'கொங்காணி,' 'முத்தரைசர்' என்ற பட்டங்கள் சேர்க்கப்பட்டுக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக் 'கொங்காணி, முத்தரைசர்' என்றும் 'ஸ்ரீபுருச முத்தரைசர்' என்றும் குறிக்கப்பட்டுள்ளன.[57]

ஸ்ரீபுருசன் கி.பி.எட்டாம் நூற்றாண்டில் அரசாட்சி செய்தவன் ஆவான். அவனது கல்வெட்டுகள் தமிழகத்தின் வடபகுதியில் பெருமளவில் கிடைத்துள்ளன. வடஆர்க்காடு மாவட்டம் ஆலங்காயம் பகுதியிலுள்ள குண்டு ரெட்டியூர் என்னும் ஊரையொட்டியுள்ள ஏலகிரி மலையில் அவன் காலத்திய ஒரு

வட்டெழுத்துக் கல்வெட்டுக் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டில் சமணப் பள்ளிக்குக் கொடையளித்ததைப் பற்றிய செய்தி குறிக்கப்பட்டுள்ளது. இப் பெருமன்னனின் பெயரோடு 'முத்தரைசர்' என்ற பட்டம் சேர்த்துக் குறிக்கப்பட்டிருக்கிறது.

நாலடியாரில் முத்தரையர்கள் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

> பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்
> கருணைச்சோ றார்வர் கயவர்

என்றும்,

> நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத்தரையரே
> செல்வரைச் சென்றிரவாதார்[59]

எனவும் இவர்கள் யாவர்க்கும் நல்லுணவளித்துப் போற்றி வந்தார்கள் எனவும் மிக்க புகழும் செல்வமும் உடையவர்கள் எனவும் அறியமுடிகிறது.

தஞ்சை மாவட்டத்திலுள்ள செந்தலைத் தூண் கல்வெட்டிலிருந்துதான் முத்தரையர் பற்றிய செய்தியை அறியமுடிகிறது. அக்கல்வெட்டு முத்தரையரைப் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றது.

"பெரும்பிடுகு முத்தரையரான குவாவன் மாறனவன் பரமேஸ்வரனவன் மகன் பெரும்பிடுகு முத்தரையனாயினசுவரன் மாறனவன் எடுப்பித்த படாரி கோயிலவனெறிந்த ஊர்களும் அவன் பேர்களும் அவனைப் பாடினோர் பெயர்களும் மீறான் கல்மேலெழுதின" என்று கூறுகிறது.

பிற்காலச் சோழ அரசர்களின் முதல்வனான விசயாலயச் சோழன் பட்டமேற்ற காலத்தில் வரலாற்றுப்புகழ் மிக்க முத்தரையர் என்னும் குறுநில மன்னர்கள் தஞ்சை மாவட்டத்தில் செழிப்பான பல ஆற்றோரப் பகுதிகளைத் தம் வசப்படுத்தினர். செந்தலை அல்லது நியமம் என்ற ஊரைத் தம் தலைநகராகக்

கொண்ட முத்தரையர் தஞ்சையையும் ஆண்டு வந்தனர் என்று இவர்களது செந்தலைக் கல்வெட்டுக் கூறுகின்றது. சோழர்களைப் போலவே தம் தனி ஆட்சியை நிலை நாட்டமுடியாமல் இவர்கள் பாண்டியர்களுடனோ பல்லவர்களுடனோ நட்புக்கொள்ள வேண்டியிருந்தது.

தங்கள் முன்னேற்றத்தையே நோக்கமாகக் கொண்டு அவ்வப்போது தங்கள் ஆதரவை முத்தரையர்கள் மாற்றிக் கொண்டனர் என்று இவர்களது கல்வெட்டுக்களும் விருதுகளும் கூறுகின்றன. வரகுண பாண்டியன் காலத்தில் தாமாகவோ அல்லது வரகுணனின் முயற்சியாலேயோ இவர்கள் தம் முழு ஆதரவையும் பாண்டியர்க்கே அளித்தனர். இதன் விளைவாகப் பல்லவர்களின் உரிமைகளைக் காக்கும் பொருட்டுச் செயல்பட்ட விசயாலயச் சோழனிடம் இவர்கள் தஞ்சையை இழக்கலாயினர்.

புதுக்கோட்டை மாவட்டம் குடுமியான்மலைக் கல்வெட்டு ஒன்று பத்தரையர்களோடு இருக்குவேளிர் மணஉறவு கொண்டிருந்தனர் என்று கூறுகின்றது.

புதுக்கோட்டைப் பகுதியிலிருந்து கிடைத்த ஒரு கல்வெட்டில் காணப்பெறும் குவாவன் சாத்தன் செந்தலைக் கல்வெட்டில் குறிக்கப்பெறும் பெருமுத்திரையனுக்கு உடன் பிறந்தவனாக இருக்க வேண்டும்.[60]

இவர்களல்லாமல் சாத்தன் மாறன் என்ற முத்தரைய மன்னன் திருமயக் கல்வெட்டில் காணப்படுகின்றான். இவன் செந்தலைக் கல்வெட்டில் காணப்படும் பெரும்பிடுகு முத்தரையனான சுவரன்மாறனின் மகனாக இருக்கக்கூடும்.

இதுவரை குறிப்பிட்ட மன்னர்களுக்கு முன்பும் சில மன்னர்கள் தொண்டைமண்டலப் பகுதியிலும் ஆட்சி செய்துள்ளனர். வடஆர்க்காடு மாவட்டம்

திருவண்ணாமலையையடுத்த தண்டராம்பட்டிலிருந்து கிடைத்த இரு கல்வெட்டுக்களில் பொன்மாந்தனார் என்ற முத்தரையன் குறிப்பிடப்பட்டுள்ளான். முத்தரைய மன்னர்களின் பழைய இருப்பிடத்தையும் அவர்கள் விரிவுபடுத்தியதையும் இக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.[61] மேலும் வாணகோ முத்தரைசர் என்பவன் தமிழகத்தின் வடவெல்லையில் ஆட்சி செய்திருக்கலாம் என்றும் தெரிவிக்கின்றன.

## பெரும்பாண முத்தரைசர்

இவன் தருமபுரி மாவட்டம் பாலாவடியில் கிடைத்த ஒரு கல்வெட்டு மூலம் அறியப்படுகிறான். இவன் கங்க நாட்டை ஆண்டதாகக் கல்வெட்டில் காணப்படுகிறது.

பொன்மாந்தனார் என்னும் முத்தரைய மன்னனே இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டுக்களில் முற்பட்ட காலத்தில் ஆட்சிபுரிந்தவன் என்று தெரிகிறது. இவன் நரசிம்மப் பல்லவன் காலத்தில் மேற்கோவலூர்ப் பகுதியை ஆண்டான்.

## சாத்தன் மாறன்

பெரும்பாண முத்தரையனுக்குப் பிறகு சாத்தன் மாறன் என்பவன் இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் ஆண்டான்.

## குவான் முத்தரையன் (கி.பி. 8 ஆம் நூற்றாண்டு)

தஞ்சை மாவட்டத்தின் பொன்விளைந்தான்பட்டி என்னும் ஊரில் கிடைத்துள்ள கல்வெட்டு குவான் முத்தரையன் பற்றிய செய்திகளைக் கூறுகின்றது. பொன்விளைந்தான்பட்டி என்னும் இவ்வூர் செந்தலை, நியமம் ஆகிய ஊர்களுக்கு அருகிலேயே இருப்பதால் இவன் இப்பகுதியைத் தலைமையிடமாகக் கொண்டு ஆண்டுள்ளான் என்பது தெரிகிறது.

இவனுக்குப் பின்னால் குவான் மாறன் முத்தரையன், குவான் சாத்தன், காடக முத்தரையன், சத்ரு பயங்கர முத்தரையன், பராந்தக முத்தரையன், கண்டராதித்த முத்தரையன், சோழ முத்தரையன், விசயாலய முத்தரையன், விச்சாதிர முத்தரையன், அபிமான மேரு சோழ முத்தரையன், கருணாகரச்சோழ முத்தரையன், மாறன் பரமேசுவரன், பெரும்பிடுகு முத்தரையன், புதிகளரி, தென்னவன் இளங்கோ முத்தரையன் ஆகியோர் ஆண்டுள்ளனர்.

திருச்சிராப்பள்ளி மாவட்டம் மலையடிப்பட்டிப் பகுதியில் ஆளத் தொடங்கிய இவ்வை பரம்பரை தென்னவன் இளங்கோ முத்தரையனோடு முடிவுற்றது. அதன்பிறகு திருச்சிப் பகுதியிலும் தஞ்சைப் பகுதியிலும் இருந்த முத்தரையர்கள் தனியரசு செலுத்தி ஆளவில்லை. அவர்களின் நிலை சோழர்களின் செல்வாக்கினால் குறைய ஆரம்பித்துவிட்டது. இவர்கள் சோழர், பாண்டியர் ஆகியோரிடம் அரசியல் தலைவர்களாகவும் குடிமக்களாகவும் இருந்துள்ளனர்.

மான முத்தரையர், செம்பிய முத்தரையர், வங்கார முத்தரையர் ஆகிய பட்டப்பெயர்கள், கள்ளர் மரபினரின் ஒரு பகுதியினராக முத்தரையரும் அமைந்துள்ளனர் என்ற உண்மையைத் தெரிவிப்பனவாகக் கருதலாம். முத்தரையர்களைப் பற்றி நாம் அறிகின்ற பழைமையான சான்று நாலடியாரில்தான் காணப்படுகிறது. முத்தரைய மன்னர்களின் பெருமையைக் குறிக்கும் வகையில் நாலடியார் செய்யுள் ஒன்று இவர்களைப் பெருமுத்தரையர் என்று குறிப்பிடுகின்றது. அக்காலத்தில் இவர்கள் அரசியலில் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தனர் என்பது 'பெரு' என்னும் அடைமொழியால் தெரிகிறது. இந்தப் பெரு முத்தரையர் என்னும் பெயரும் மான முத்தரையர் என்ற கள்ளர் பட்டமும் ஒரு பொருள் உடையனவாகக் கருதத்தக்கனவாகும். மானம் என்ற சொல்லின் பொருள் பெருமை என்பதேயாகும்.[62]

செம்பிய முத்தரையர் என்னும் பட்டப்பெயர் சோழர்களுக்கும் முத்தரையருக்கும் உள்ள நெருக்கமான உறவைக் குறிப்பதாகத் தெரிகிறது. முத்தரைய மரபினர் தமிழகத்தின் பகுதிகளில் மட்டுமின்றித் தமிழகத்தைச் சுற்றியுமுள்ள வேறு இடங்களிலும் வாழ்ந்துள்ளனர். ஆந்திரத்தையொட்டிய பகுதிகளிலும் கொங்கணம் போன்ற பகுதிகளிலும் இவர்கள் வாழ்ந்துள்ளனர். எடுத்துக்காட்டாகக் கொங்கணத்தில் இருந்தோர் கொங்கணி முத்தரையர் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களிடமிருந்து பிரித்துக்காட்டவே சோழநாட்டு முத்தரையர்கள் செம்பிய முத்தரையர் என்று அழைக்கப்படுகின்றனர். இவர் களிடமிருந்து பிரித்துக்காட்டவே சோழநாட்டு முத்தரையர்கள் செம்பிய முத்தரையர் என்று தம்மை அழைத்துக் கொண்டனர் என்று கருதலாம். குறுநிலத் தலைவர்களுக்கு விருதுகள் வழங்கிச் சிறப்பித்தபோது சோழ மன்னர்கள் தம் சிறப்புப் பெயர் ஒன்றைச் சேர்த்துக் கொடுப்பது மரபாக இருந்துள்ளது. இம்மரபினையொட்டியே செம்பிய முத்தரையன் என்ற பட்டம் வழங்கியிருக்கலாம்.

மூன்றாவது பட்டமாகிய வங்கார முத்தரையன் என்பது ஆழ்ந்த சிந்தனைக்குரியதாக விளங்குகிறது. இப்பட்டத்தின் முதற்பகுதி தெலுங்காகவும் பிற்பகுதி தமிழாகவும் உள்ளது. பங்காரு என்னும் தெலுங்குச் சொல் 'பொன்' என்னும் பொருளுடையதாகும். பகர வகர மாற்றம் தமிழில் இயல்பானதாகும். எடுத்துக்காட்டாக பாணர் என்பது வாணர் என்றும் வழங்கும். இப்பட்டத்தில் தெலுங்குச் சொல் அமைந்ததன் பின்னணியை ஆராயவேண்டியுள்ளது. பல்லவர்கள் காலத்திலேயே வடஆர்க்காடு மாவட்டத்தில் முத்தரையரின் ஒரு கிளைக் குடியினர் வாழ்ந்ததாக நடன. காசிநாதன் எடுத்துக்காட்டியுள்ளார். அக் குடியினரின் குலமரபைச் சுட்டும் கல்வெட்டு ஒன்றில் ஒவ்வொருவரின் பெயருக்கு முன்பும் 'பொன்' என்னும் அடைமொழி காணப்படுகிறது. இதனால் வங்கார முத்தரையன் என்னும் பட்டம் பொன்முத்தரையன் என்னும் பட்டத்தின் மாற்று வடிவமாகக் கருதத்தக்கதாகவுள்ளது. வடஆர்க்காடு மாவட்டத்தை ஒட்டிய

பகுதி தெலுங்குப் பகுதியாதலின் பொன் என்னும் அடைமொழி மொழிபெயர்க்கப் பட்டு வழங்கப்பட்டது எனக் கருதலாம். மேலும், இடைக்காலச் சோழ மன்னர்கள் வேங்கி நாட்டோடு மிக நெருங்கிய தொடர்புடையோர் ஆதலின் தெலுங்குமொழித் தொடர்பு அவர்களுக்கு ஏற்பட்டது இயல்பேயாகும்.

தென்னார்க்காடு மாவட்டத்தில் திட்டக்குடி என்னும் ஊரிலுள்ள திருக்கோயில் ஒன்றில் வங்கார முத்தரையன் என்னும் புகழ்மிக்க மன்னன் செய்த அறப்பணிகள் தொடர்பான பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

சோழப் பேரரசு மறைந்து ஏறத்தாழ ஏழு நூற்றாண்டுக்கு மேலாகியும் அப்பேரரசுக்கு வழங்கிய ஒரு குறுநில மன்னர் மரபினரின் பட்டப் பெயர் ஒன்று ஒரு சிறு மாற்றமும் இன்றி இன்றும் வழங்குவது குறிப்பிடத் தகுந்ததாகும்.

இன்று தமிழகத்தில் வாழும் வேறு ஒரு குடியினர் தம்மை முத்தரையர் வழியினர் என்று கூறிக் கொள்கின்றனர். 'முத்துராசா' என்று அவர்களுக்குரிய பட்டத்தை முத்தரையர் என்னும் பட்டத்தோடு உறவுபடுத்திக் கொள்கின்றனர். முத்தரையர் சங்கம் என்ற ஓர் அமைப்பும் உருவாக்கப்பட்டுள்ளது. முத்தரையர் என்னும் பெயரை முத்து அரையர் என்று பிரித்துத் தம்மை முத்துக்களுக்குத் தலைவர்களாக விளக்குகின்றனர். அவ்வாறெனின் அவர்கள் கடலோரத்தில் வாழுகின்ற பரதவர்களின் கால்வழியினர் எனக் கொள்ள வேண்டும். வலையைக் கையாளுதல் உள்நாட்டில் வாழும் மக்களுக்கும் கடலோரத்துப் பரதவர்களுக்கும் பொதுவான இயல்பேயாகும். என்றாலும் மருதநிலப் பகுதிகளில் வாழ்வோருக்கும் கடலோரத்துப் பரதவர்க்கும் யாதொரு தொடர்பும் இருப்பதாகத் தெரிய வில்லை. முற்காலத்தில் காட்டு வாழ்வினராக இருந்த வேட்டுவத் தொழில்

புரிந்தோராக வலைஞர்களைக் கருதவேண்டியுள்ளது. இன்றுங்கூட அவர்கள் வேட்டைத் தொழிலில் ஈடுபடுவது இயல்பாக உள்ளது. இவ்விடத்தில் முத்தரையர் என்னும் பொருளில் ஆய்வு நூல் ஒன்றைப் படைத்த நடன காசிநாதன் கூறும் கருத்து ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாகும். இன்றைய வலையர்களின் பல பெயர்களுள் ஒன்றாகக் கண்ணப்ப குல வலையர் என்னும் பெயரையும் குறிப்பிடு கின்றார். இங்குக் கூறப்படும் கண்ணப்பர் நாயன்மார்களில் ஒருவராகிய திருக்கண்ணப்ப தேவர் என்பதில் ஐயமில்லை. இவர் காளத்தி வேடர் தலைவனின் திருமகன் என்பதை எண்ணிப் பார்க்கையில் தம்மைக் கண்ணப்பகுல வலையர் என்று அழைத்துக் கொள்ளும் தமிழ் மக்கள் உண்மையில் வேட்டுவ மரபினரேயாவர் என்று முடிவு செய்ய வேண்டியுள்ளது.

வேட்டுவ மரபினர் வேட்டைத் தொழிலுக்கு வலைகளைப் பயன்படுத்துவது இயல்பு என்பதைக் கண்ணப்ப நாயனார் புராணம் கொண்டு தெளியலாம். இதனால் முத்துக்குளிக்கும் தொழிலோடு தம்மை இணைத்துப் பார்த்து முத்தரையர் என்னும் பொருளுக்கு விளக்கம் காண்பது பொருத்தமாகத் தெரியவில்லை. முத்தரையர் ஆண்ட பகுதியாகச் சொல்லப்படுகின்ற தஞ்சை வட்டாரத்தில் இன்றும் பேரெண்ணிக்கையில் வாழ்வோர் கள்ளர் சமூகத்தினராகவே உள்ளனர். எனவே, முத்தரையர் இன்றைய கள்ளர் சமூகத்தின் ஒரு பகுதியினராகவே அமைந்துள்ளனர் என்று கருதலாம். மு.இராகவையங்கார் முத்தரையரைக் கள்ளர் சமூகத்தின் ஒரு பகுதியினராகவே கூறுகின்றார்.[63]

சமண முனிவர்களால் இயற்றப்பட்ட நாலடியார் பாண்டிய நாட்டில் தோன்றிய நூல் என்பது வழிவழியாக ஒப்புக் கொள்ளப்பட்ட செய்தியாகும். நாலடியார் தோன்றிய காலத்தில் முத்தரையர் பாண்டிய நாட்டில் பெருமைக் குரியோராய் விளங்கினர் என்று அந்நூல் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். பாண்டியர்களைப் பற்றிய எந்தக்குறிப்பும் இல்லாமை கொண்டு அந்நாளில் பாண்டியர்களின் கை ஓங்கியிருக்கவில்லை என்பதையும் உய்த்துணரலாம். பாண்டிய நாட்டை முழுமையாகக் கைக்கொண்ட அரசமரபினர் முத்துவளம் மிக்க பாண்டிய நாட்டின் தலைவர்கள் எனக் குறிக்கும் வகையில் தம்மை முத்தரையர் என்று

அமைத்துக் கொண்டிருக்கக்கூடும். அங்ஙனம் பாண்டி நாட்டிற்குத் தலைவராய் விளங்கியோர் சோழநாட்டுப் பகுதியையும் தமக்குரியதாகக் கொண்டு ஆண்டிருக்கக்கூடும். இவ்வாறன்றி மூன்று தலைவர் எனப் பிரித்துச் சேர, சோழ, பாண்டிய நாட்டுக்குத் தலைவர் எனப் பொருள் கொண்டால் களப்பிரர் வரலாற்றோடு முத்தரையர் வரலாறு உறவுடையதாகச் சொல்லத் தோன்றுகிறது. இது உண்மையானால் முத்தரையர் என்போர் களப்பிரர்களின் ஒரு கிளைக் குடியினர் என்ற கருத்து வலிமை பெறும். இது மேலும் நன்கு ஆயத்தக்க ஒரு பொருளேயாகும்.

முத்தரையர்களோடு தொடர்புடைய கள்ளர் பட்டப்பெயர்களாகத் தஞ்சைராயர், வல்லாண்டார், வல்லத்தரையர் முதலியவற்றைக் கொள்ளலாம். தஞ்சிராயர் என்ற பட்டமுடைய கள்ளர்குடியினர் தஞ்சையை அடுத்த கொல்லங்கரை, நடுவூர், ஆழிவாய்க்கால், காசவளநாடு புதூர் முதலிய ஊர்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர்.

வல்லாண்டார் என்ற பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சைக்கு அருகில் வல்லான் பின்பட்டு என்ற ஊரில் மிகுந்த எண்ணிக்கையில் வாழுகின்றனர்.

## 7. முனையதரையரும் கள்ளரும்

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஆட்சிபுரிந்த குறுநில மன்னர் மரபில் முனையதரையர் மரபும் ஒன்றாகும். முனையதரையர் என்பார் முனைப்பாடி நாட்டை ஆண்ட சிற்றரசர் எனப்படுவர். முனைப்பாடி நாடு என்பது, வடவார்க்காடு, தென்னார்க்காடு மாவட்டங்களின் பகுதிகள் அடங்கிய பழைமையான நாடுகளுள் ஒன்றாகும். "சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு" என்பது பெரியபுராணம்.[64]

முனை என்ற சொல்லுக்குப் பொருதல், ஊக்கங்கொள்ளுதல், போர்முனை எனப் பல பொருள் கொள்ளலாம். அவன் அந்தச் செயலில் முனைந்திருந்தான் என்று கூறும்போது அவன் அந்தச் செயலில் ஊக்கத்தோடு முற்பட்டிருந்தான் என்று அறிகிறோம். போர் முனை என்பது போர் நடைபெறும் இடம் அல்லது போர்க்களம் என்று பொருள்படும். முனைகாரன் என்றால் தீரன் என்று பொருளாகும். முனைஞர் என்பவர் தண்டத்தலைவர் என்பவராவார். "வேந்துவிடு முனைஞர்" என்று தொல்காப்பியம் கூறும்.[65] முனைந்தோர் என்பதற்குப் பகைவர் என்று பொருள் கொள்ளலாம். முனைப்பதி என்பது பாசறையாகும்.

முனைப்பாடி நாட்டை ஆண்டவர் நரசிங்க முனையரையர் ஆவார். இவர் சுந்தரமூர்த்தி நாயனாரை வளர்ப்பு மகனாகப் பெற்று வளர்த்தவர். சுந்தரமூர்த்தி நாயனாருக்கு முனைப்பாடித் தலைவர் என்னும் பெயர் உண்டு.[66]

முனையர்கோன் என்பவன் விக்கிரம சோழனுடைய அமைச்சர்களுள் ஒருவனாவான்.[67] இவனைப் பற்றிய குறிப்பு திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டில் காணப்படுகிறது.[68]

இன்று முனையரையர் பட்டமுடைய கள்ளர் இனத்தவர் திருச்சி மாவட்டம் கூத்தப்பாரில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். மேலும் தஞ்சாவூர் மாவட்டம் காசவளநாடு புதூர், கருக்காக்கோட்டை, மன்னை வட்டத்தில் நெடுவாக்கோட்டை முதலிய ஊர்களிலும் வாழுகின்றனர்.

## சான்றெண் விளக்கக் குறிப்புக்கள்

1. Epy. India, Vol.VI, pp.331-332.
2. புறநானூறு, பாடல் எண்.90.
3. மேற்படி., பாடல் எண்.88.
4. சொ. சாந்தலிங்கம், வரலாற்றில் தகடூர், ப.18.
5. புறநானூறு, பாடல் எண்.99.
6. சொ.சாந்தலிங்கம், வரலாற்றில் தகடூர், ப.22
7. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு, ப.247.
8. மேற்படி, சோழர்கள், ப.336.
9. S.I.I. Vol.VIII, No.126.
10. S.I.I. Vol.VII, No.533.
11. தருமபுரிக் கல்வெட்டுக்கள் முதல் தொகுதி எண்.13.
12. அ.தட்சிணாமூர்த்தி, கள்ளர் பட்டப்பெயர்களும், ஆய்வுக் கட்டுரை, ப.4.
13. மேற்படி, ப.4.
14. மேற்படி, ப.4.
15. வி.கருப்பையன்,
16. நடன. காசிநாதன், களப்பிரர், ப.7.
17. திருத்தொண்டத் தொகை
18. திருத்தொண்டர் திருவந்தாதி, பாடல் எண்.47.
19. நடன காசிநாதன், களப்பிரர், ப.45.
20. S.I.I., Vol.XVII, No.509.
21. மேற்படி,Vol.V, No.640.
22. மேற்படி,Vol.VII, No.460.
23. மேற்படி,Vol.Epy. India, Vol.No.31.
24. S.I.I., Vol. III, No.86.
25. மேற்படி, Vol.V, No.708.
26. A.R.E., 445 of 1912.

27. நடன. காசிநாதன், களப்பிரர், ப.50.

28. மேற்படி, ப.50.

29. S.I.I., Vol.XVII, No.130.

30. நடன. காசிநாதன், களப்பிரர், ப.51.

31. புறம்., 174.

32. தொல்காப்பியம், சொல்.311.

33. பதிற்றுப்பத்து, 21.55.

34. புறம், 88,90.

35. மதுரைக்காஞ்சி, 395, 687 - நச்சர் உரை

36. புறப்பொருள் வெண்பா மாலை, 2:14.

37. புறம், 19.

38. புறம், 279.

39. அகம், 35:1-10.

40. புறம், 93.

41. அகம், 35.

42. புறம், 88.

43. பதிற்றுப்பத்து, 21, 55.

44. நற்றிணை, 52.

45. அகம், 61.

46. S.I.I., Vol.V, No.667, 670, 671.

47. Ibid., Vol.III, No.23.

48. Ibid., 69.

49. Ibid., 149, 150.

50. Ibid., 141.

51. சதாசிவ பண்டாரத்தார், தி.வை. பிற்காலச் சோழர் வரலாறு, ப.135.

52. பத்மாவதி, ஆ. நன்னிலம் கல்வெட்டுத் தொகுதி.1, எண்.48/1979.

53. நாகசாமி, இரா. குடந்தைக் கல்வெட்டுத் தொகுதி, 48/1979.

54. பத்மாவதி, ஆ. நன்னிலம் கல்வெட்டுத் தொகுதி.1, எண்.68/1979.

55. மேற்படி, 508/1978.

56. பத்மாவதி, ஆ. நன்னிலம் கல்வெட்டுத் தொகுதி.1, எண்.68/1979.

57. நடன. காசிநாதன், முத்தரையர், ப.21.

58. நாலடியார், பாடல் எண்.200

59. மேற்படி, 296.

60. நடன. காசிநாதன், முத்தரையர், ப.28.

61. மேற்படி, ப.34.

62. திருக்குறள் மானம் அதிகாரம்

63. மு. இராகவையங்கார், கள்ளர் சரித்திரம், ப.16.

64. பெரியபுராணம்

65. தொல். புறத். நூ .2.

66. சிறப்புப் பெயரகராதி

67. சதாசிவ பண்டாரத்தார், தி.வை., பிற்காலச் சோழர் வரலாறு, ப.333.

68. இரா. நாகசாமி, திருத்துறைப்பண்டிக் கல்வெட்டுத் தொகுதி எண்.181.

ஊர்களுக்கு அமைந்துள்ள பெயர்கள் வரலாற்றுச் சிறப்புமிக்கவையாகும். ஒரு நாட்டின் பழைமையை உணர்வதற்கு உதவும் சான்றுகளுள் ஊர்ப் பெயர்களுக்குச் சிறப்பான இடம் உண்டு. தமிழகத்தைப் பொறுத்தவரை சங்ககாலம் தொட்டு நிலவும் மிகப் பழைமையான ஊர்களும் அடுத்தடுத்த வரலாற்றுக் காலங்களில் புதியனவாகத் தோன்றிய ஊர்களும் உண்மை. இன்றும் புத்தம் புதிய ஊர்கள் ஆங்காங்கே உருவாகி வருகின்றன. மக்கள் தத்தம் காலத்திற்கேற்ற பெயர்களைத் தம் ஊர்களுக்கு இட்டு வழங்குகின்றனர். இப்பெயர்கள் அவ்வக் காலத்து அரசியல், சமூக, சமய மாற்றங்களை வெளிப்படுத்துவனவாக உள்ளன. மக்களின் மனநிலையில் ஏற்பட்ட மாற்றங்களை ஊர்களின் பெயர்களைக் கொண்டு அறிய வாய்ப்புண்டு. பல ஊர்களின் பெயர்கள் காலப்போக்கில் மாற்றம் பெற்றுள்ளன. இம்மாற்றங்களைக் கல்வெட்டுக்களும் பிற ஆவணங்களும் தெரிவிக்கின்றன. பல ஊர்களின் பெயர்கள் மக்கள் வழக்கில் சிதைவுற்றுக் காணப்படுகின்றன. இதனால் அவற்றின் உண்மை வடிவமும் உணர்த்தும் பொருளும் தெளிவின்றிக் காணப்படுகின்றன. தூய தமிழ்ப் பெயர்களாக இருந்தவை வடமொழிச் சார்புபெற்ற பெயர்களாக மாறியுள்ளன. இக்காலத்தில் பழைமை வேட்கையின் விளைவாக அங்ஙனம் மாற்றம் பெற்ற ஊர்களுக்கு மீண்டும் பழம்பெயரைச் சூட்டும் போக்கையும் காணமுடிகிறது. உலகம் முழுவதும் ஊர்ப்பெயர்களின் ஆய்வு பற்றிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. மேலை நாடுகளில் ஊர்ப்பெயர் ஆய்வுக் கழகங்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இந்தியாவிலும் குறிப்பாகத் தமிழகத்திலும் இவ்வாய்வுகள் அண்மைக்காலமாக மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. எனினும் முழுமையான ஆய்வாக இது வளர்ச்சியுறவில்லை என்றே தோன்றுகின்றது.

தமிழகத்தில் ஊர்ப்பெயர் ஆராய்ச்சிக்கு ஊக்கமளித்தவர்களில் முதன்மையானவர் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கிய ரா.பி.சேதுபிள்ளை ஆவார். 'ஊரும் பேரும்' என்னும் இவருடைய

நூல் ஊர்ப்பெயர்களைப் பகுப்பாய்வு செய்து காண்பதற்கு அடித்தளத்தை அமைத்துக் கொடுத்தது. அவரைத் தொடர்ந்த குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் அறிஞர்கள் இந்த ஆய்வை மேற்கொண்டனர் எனக் கூறுவதற்கில்லை. திருவனந்தபுரம் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியர் கி.நாச்சிமுத்து இன்று ஊர்ப்பெயர் ஆய்வில் நல்ல ஊக்கம் செலுத்தி வருகின்றார். தமிழகப் பல்கலைக்கழகங்களில் எம்.ஃபில்., பிஎச்.டி., போன்ற பட்டங்களுக்காக ஆய்வு செய்யும் இளம் ஆய்வாளர்கள் சிலர் இம்முயற்சியில் நாட்டம் செலுத்துவது விரும்பத்தக்கதாகும். இவ்வாய்வு தமிழகம் தழுவிய நிலையில் ஒரு பெரும் திட்டத்தின்கீழ் மேற்கொள்ளப் படுமாயின் இதுகாறும் அறியப்படாத பல வரலாற்று உண்மைகளைக் கண்டறிய வாய்ப்புண்டு. இதற்கு அரசும் பல்கலைக்கழகங்களும் உறுதுணையாக அமைய வேண்டும்.

கள்ளர் பட்டப்பெயர்கள் பற்றிய ஆய்வுக்கும் ஊர்ப்பெயர் ஆய்வுக்கும் மிகவும் நெருக்கமான உறவு இருப்பதனால் இவ்வாய்வேட்டின் ஒரு பகுதியாக இப்பொருளும் சிந்திக்கப்படுகிறது. தமிழகத்தில் அமைந்துள்ள ஊர்ப்பெயர்களுக்கு, அமைந்தப் பொதுக்கூறுகளும் சிறப்புக் கூறுகளும் தனித்த ஆய்வுக்குரியன. தமிழகத்தின் வெவ்வேறு பகுதிகளும் அவ்வப்பகுதிகளுக்கே உரிய பொதுக்கூறுகளைப் பெற்றுத் திகழ்கின்றன. பொதுக் கூறுகளாக அமைவனவற்றை விரிவாகப்பேச இது தக்க இடம் அன்று. ஆய்வுக்குரிய கள்ளர்கள் வாழ்கின்ற பகுதிகளில் காணப்படும் பல ஊர்கள் அவர்களின் பட்டப்பெயர்களோடு தொடர்புடையனவாக அமைந்துள்ள சிறப்பே ஈண்டு ஆழமாகச் சிந்திக்கத்தக்கதாகும்.

கள்ளர் பட்டப்பெயர்களுக்கும் ஊர்ப்பெயர்களுக்கும் இடையில் அமைந்த உறவினை முதற்கண் எடுத்துக்காட்டியவர் 1923 ஆம் ஆண்டில் 'கள்ளர் சரித்திரம்' என்னும் நூலை வெளியிட்ட ந.மு.வேங்கடசாமி நாட்டார் ஆவார்.

கள்ளர் இனத்தவர் பல்லவரோடும் சோழரோடும் தொடர்புடைய ஒரு வகுப்பார் என அடையாளம் காட்டிய நாட்டாரவர்கள் அவர்கள் இருந்த நாடு பற்றியும் பிற நாடுகளை வென்று கைக்கொண்டமை பற்றியும் படைத் தலைவராகவோ படைவீரராகவோ இருந்தமை பற்றியும் அவர்கள் நாட்டாட்சி செய்தமைப்பற்றியும் எடுத்துக்கூறியதோடு அவர்களுக்கு ஏற்பட்ட பட்டங்களையும் விளக்கிக்காட்டி, இப்பட்டப்பெயர்கள் பலவற்றின் அடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்களின் பட்டியலையும் தந்துள்ளார்.[1] அப்பட்டியலில் காணப்படாத வேறு பல ஊர்களும் உள்ளன.

1. வாண்டையாரிருப்பு
2. தென்கொண்டாரிருப்பு
3. தின்னாயிருப்பு
4. துறையாண்டார் கோட்டை
5. பொய்கையாண்டார் கோட்டை
6. மூவரையர் கோட்டை
7. நெடுவாக்கோட்டை
8. சங்கரன் குடிகாடு
9. சோழகன் குடிகாடு
10. வேங்கிராயன் குடிகாடு
11. தெலிங்கராயன் குடிகாடு
12. புள்ளவராயன் குடிகாடு
13. உறந்தைராயன் குடிகாடு
14. தோழவன்னியன் குடிகாடு
15. நல்லவன்னியன் குடிகாடு
16. கரைமீண்டார் கோட்டை
17. காங்கேயன்பட்டி

18. சோழகன் பட்டி
19. இராயமுண்டான் பட்டி
20. வாலியன் பட்டி
21. தொண்டைமான் பட்டி
22. கண்டியன் பட்டி
23. சாதகன் பட்டி
24. துண்டிராயன் பாடி
25. ஆரமுண்டான் பட்டி
26. ஓசையன் பட்டி
27. வில்லவராயன் பட்டி
28. செம்பியன் களர்
29. உலகங் காத்தான் பட்டி
30. மலையராயன் பட்டி
31. திராணிப் பட்டி
32. கலியராயன் பட்டி
33. சாளுரா ரன்பட்டி
34. கச்சிராயன்மங்கலம்
35. ஏத்தண்டான் பட்டி
36. பாப்பரையன் பட்டி
37. மாதைராயன் பட்டி
38. வல்லாண்டான்பட்டு
39. நரங்கியன் பட்டி
40. பாலாண்டான் பட்டி
41. வன்னியன் பட்டி
42. காடவராயன் பட்டி

43. சுரக்குடிப்பட்டி
44. பாண்டியராயன் பட்டி
45. காவாலிப்பட்டி
46. வெண்டையன் பட்டி
47. தொண்டராயன்பட்டு
48. மழவராயன்பட்டி
49. மழவராய நல்லூர்
50. மழவராயன் எந்தல்
51. வேங்கிராயன் உக்கடை
52. கொங்கராயன் நல்லூர்
53. பணிக்கொண்டான் விடுதி
54. செருமங்கலம்
55. வடுவூர்
56. பொன்னாப்பூர்
57. வாணாதிராயன் குடிகாடு
58. பல்லவராயன்பேட்டை
59. காலிங்கராயன் ஓடை
60. ஆர்சுற்றிப்பட்டு
61. வாண்டையான் குடியிருப்பு
62. முதலிப்பட்டி
63. பொய்கையாண்டார் குடிகாடு
64. பழங்கொண்டான்கோட்டை
65. வீரமுண்டான் குடிகாடு
66. பழங்கொண்டான் குடிகாடு

67. கருப்பட்டிப்பட்டி
68. இராசாளிப்பட்டி
69. தென்னதரையன்பட்டி
70. மங்கத்தேவன் பட்டி
71. மங்கலத்துப்பட்டி
72. மலையப்பட்டி
73. மலையர்புரம்
74. பிலிவயல்
75. அன்னவாசல்
76. சாமந்தன் வயல்
77. ஒக்கநாடு
78. அங்கராயன்பட்டி
79. ஊரத்தி
80. நாட்டரையர்கோட்டை
81. சூரியம்பட்டி
82. ஊமத்தநாடு
83. கடம்பராயன்பட்டி
84. கரம்பயம்
85. புறம்பியம்
86. கதவம்பட்டி
87. அழும்பில்
88. ஆர்க்காடு
89. தஞ்சை
90. வல்லம்

91. கொடும்பாளூர்
92. கொல்லம்
93. குறுக்கை
94. ஆதாழி
95. ஆதியபுரம்
96. கண்டியா நத்தம்
97. காடுவெட்டி விருதி
98. மாதையராயன் புதுக்கோட்டை
99. களப்பாள்
100. கிளியூர்
101. நார்த்தேவன்குடிகாடு
102. களத்தில் வென்றான்பேட்டை

ந.மு.வேங்கடசாமி நாட்டாரையடுத்து 1926 ஆம் ஆண்டில், வேளிர், நாகர், சோழர், பல்லவர் என்கிற சூரியகுல கள்ளர் சரித்திரம் என்னும் நூலை வெளியிட்ட மு.சுவாமிநாத மாதவராயர், நாட்டார் நூலில் காணப்படாத பல விவரங்களைத் தருகின்றார். இவ்வாசிரியர் தம்முடைய ஆய்வு முடிவுகளை ஊர்ப்பெயர்களின் அடிப்படையிலேயே வெளியிடுகின்றார் என்பதை iu»^ அறியமுடிகின்றது. தமிழகம் முழுவதிலும் அமைந்துள்ள நூற்றுக்கணக்கான ஊர்களோடு கள்ளர் பட்டப்பெயர்களை உறவுபடுத்திக் காண்பது இவருடைய ஆய்வின் சிறப்புக் கூறாகும். இந்நூலின் 'திருக்குறிப்பு' என்னும் பகுதியில் இதுபற்றிய விளக்கங்களைக் காணலாம். இப்பகுதியின் இறுதியில் "பல்லாயிரம் நகரங்களை உண்டுபண்ணி இராசதானியாகக் கொண்டும் கோயில்கள், ஊர்கள், ஆறுகள், ஏரிகள், கால்வாய்கள் முதலியவற்றை உண்டுபண்ணியும், கடலைப் பருப்பு பெறுமானமுள்ள பொன்பணம், கோழியின் உருவம்அமைக்கப்பெற்ற

செப்புக்காசு, வீரராசேந்திரப் பெருவிலையாகிய பெரும்பணம் முதலிய நாணயங்களை அமைத்தும் வேற்று அரசர்களைப் போரில் வென்று தன்னடிமைப் படுத்தியும் ஆண்டனர். அவ்வரசர்களின் பெயரும் அவர்கள் உண்டுபண்ணிய நகரங்களின் பெயர்களும் அவர்கள் ஆண்ட நாடுகளின் பெயர்களும் அவர்கள் காட்டிய வீரபராக்கிரமங்களின் பெயர்களும் அவர்கள் உண்டுபண்ணிய கோயில்களின் பெயர்களும் அவ்வவ்வரசர்களின் மரபோர்க்குத் தனித்தனிப் பட்டப்பெயர்களாக அமைந்துள்ளன"[2] என்று விளக்கியுள்ளார்.

பல பட்டப்பெயர்களுக்கும் ஊர்ப்பெயர்களுக்கும்இடையே நெருக்கமான உறவு உள்ளமை ஏற்றுக்கொள்ளத்தக்கதாயினும் மு.சுவாமிநாத மாதவராயர் தருகின்ற சில விளக்கங்கள் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகக் காணப்படவில்லை. அரசன் பெயராக ஒன்றைக்கூறி, அப்பெயரோடு தொடர்புடையதாக ஓர் ஊரைக் குறிப்பிடுகின்றார். அவ்வூரின் அடிப்படையில் அமைந்த பட்டப்பெயராக ஒன்றையோ ஒன்றுக்கும் மேற்பட்டவற்றையோ கூறுகின்றார். பின்னர் அப்பெயரை ஒத்த ஊர்களின் பட்டியலைத் தந்து அவை யாவும் குறிப்பிட்ட மன்னனால் உருவாக்கப்பட்டவை என்று முடிக்கின்றார். எடுத்துக்காட்டாக, கருப்பைமன் என்பவன் நியமிசோழன் மரபில் வந்தவன் எனக் குறிப்பிட்டு அவன் கருவூர் என்னும் நகரை உருவாக்கித் தன் தலைநகராகக் கொண்டவன் என்றும் அவன் பெயர் கருவூரான் என்றும், கருக்கொண்டான் என்றும் வழங்கலாயிற்று என்றும் குறிப்பிடுகின்றார். தொடர்ந்து கருகாவூர், கருக்குடி, கருப்பாரியலூர், கருவிழி, கருப்பூர் என்னும் சிவத்தலங்களை இவனே அமைத்தான் என்று கூறுகின்றார். மேலும் கருப்பூர், கருப்பக்கள்ளர், கருப்பஞ்சேரி, கருப்பட்டி மூலை, கருங்குளம், கருங்கண்ணி, கருப்பக்குறிச்சி, என்னும் ஊர்களையும், இவனே உருவாக்கினான் என்றும் இவனுடைய மரபினருக்குக் கருப்பட்டியார்,

கருப்பூரார், முதலிய பட்டப்பெயர்கள் வழங்கின என்றும் முடிவு செய்கின்றார்.[3] இதைப்போலவே இவர் நூல் முழுவதும் கன்னிச்சையான பல முடிவுகள் காணப்படுகின்றன.

இத்தகைய இவருடைய முடிவுகளுக்குச் சொல்லொற்றுமை ஒன்றைத் தவிர வேறு வரலாற்றுச் சான்றுகளைக் காட்டுவது அரிதாகும். சங்ககாலம் தொட்டுப் புகழோடு விளங்கி வரும் கருவூரைக் கருப்பைமன் என்பவன் உருவாக்கினான் என்பதற்கு எந்தச் சான்றும்இல்லை. கருவூரை அமைத்தவனாக அவர் கூறும் கருப்பைமன், தஞ்சைப்பகுதியிலுள்ள கருவூரையும் கருப்பக்களரையும் கருப்பட்டி மூலையையும் கருவாக்குறிச்சியையும் உண்டாக்கினான் என்பது வியப்புக்குரியதேயாகும். சில முடிவுகள் வரலாற்று முரண்களாகக் காணப் படுகின்றன. எடுத்துக்காட்டாக மாதைராயன் என்னும் பட்டத்தைப் பற்றிய இவருடைய முடிவைக் கொள்ளலாம். மாதையன் என்னும் பெயருடைய ஓர் அரசன் வாழ்ந்தான் என்றும் அவன் செம்பியன் மரபில் வந்தவனென்றும் அவன் மாதேவப்பட்டினம் என்னும் அரணைக் கட்டித் தலைநகராகக் கொண்டான் எனவும் தம்நூலில் குறிப்பிடுகின்றார்.[4] இவனே மாத்தூர், மாதூர் என்னும் சிவத்தலங்களை உருவாக்கினான் என்றும் இவனுடைய மனைவி செம்பியன்மாதேவி என்றும் இவன் கட்டிய திருக்கோயில் மாதையப்பட்டினத்திற்கு அருகே இருப்பதாகவும் கூறுகின்றார். மாதையன் என்னும் சோழ மன்னன் எந்தக் காலத்திலும்தமிழகத்தில் இருந்ததில்லை. தேவாரம் பெற்ற தலங்களை உருவாக்கினவன் என்று இவர் கூறுவதனால் அவர் கூறும் மாதையன் பல்லவர் காலத்திலோ பல்லவர்க்கு முற்பட்ட காலத்திலோ வாழ்ந்திருக்கவேண்டும். அப்படி யாரும் வாழ்ந்ததில்லை. மேலும் இடைக்காலச் சோழர்களில் ஒருவனான கண்டராதித்த சோழனின் பட்டத்தரசியான செம்பியன்மாதேவியை

மாதையன் மனைவி என்று குறிப்பிடுகின்றார். மேலும் மகாதேவப்பட்டணம் என்னும் ஊர் அவ்வூரில் குடிகொண்டுள்ள மகாதேவர் என்னும் சிவபெருமான் திருப்பெயரால் உருவாக்கப்பட்டதாகும். அவ்வூரிலுள்ள கோட்டை மராட்டிய மன்னன் தஞ்ஜாஜியினால் கட்டப்பட்டது என்பது வரலாற்று உண்மையாகும். இவற்றின் ஒளியில் காண்கையில் மாதவராயரின் முடிவு வரலாற்று முரண் என்று விளங்குகின்றது. எனவே கள்ளர் பட்டப்பெயர்களுக்கும் ஊர்ப்பெயர்களுக்கும் உள்ள உறவினைத் தருக்க ரீதியாகவும் வரலாற்று முரண் இன்றியும் ஆராய்ச்சியாளர்கள் ஏற்றுக்கொள்ளும் வகையிலும் ஆராய வேண்டியது இன்றியமையாததாகின்றது.

பட்டப் பெயர்களுக்கும் ஊர்ப்பெயர்களுக்கும் இடையே உள்ள உறவு பற்றிய ஆராய்ச்சியை இருநிலைப்படுத்திக் காணலாம். அவை வருமாறு:

1. ஊரின் பெயர் அடிப்படையில் உருவான பட்டப் பெயர்;
2. பட்டப் பெயரின் அடிப்படையில் அமைந்த ஊர்.

உறந்தைராயர், கரம்பயத்தார், சுரக்குடியார், புறம்பியத்தார், ஆர்க்காட்டார், ஒக்கநாட்டார் முதலான பட்டப்பெயர்களை ஊர்களின் அடிப்படையில் அமைந்த பட்டப்பெயர்களாகக் காணமுடிகின்றது. அவர்கள் ஆண்ட அல்லது கைக்கொண்ட நாடு அல்லது நகரத்தின் பெயரோடு சேர்ந்து அமையும் பட்டப் பெயர்களாக அண்ணவாயில் ராயர், கச்சிராயர், கொல்லத்தரையர், கொடும்பைராயர், தஞ்சைராயர் முதலான பட்டங்களைக் கொள்ளலாம்.

குறிப்பிட்ட பட்டப் பெயரைக்கொண்ட கள்ளர் இனத்தவர் நெருங்கி வாழும் ஊர்கள் அப்பட்டப்பெயர் அடிப்படையில் பெயர் பெறுவதைக் கள்ளர்

வாழும் பகுதிகளில் காணமுடிகின்றது. இத்தகைய ஊர்ப்பெயர்களில் பட்டப் பெயர் சிறப்புக் கூறாக முதற்கண் அமைந்து யாதாகும் ஒரு பொதுக்கூறைப் பின்னொட்டாகக் கொள்கின்றது. பட்டப்பெயர்களுக்குப் பின்னால் அமையும் பொதுக்கூறுகளாக இருப்பு, கோட்டை, குடிகாடு, பட்டி, பாடி, மங்கலம், பட்டு, நல்லூர், ஏந்தல், உக்கடை, விடுதி, பேட்டை, ஓடை, குடியிருப்பு, முதலானவற்றைக் காணமுடிகின்றது. இவ்வகையில் அமைந்த ஊர்களைப் பின்வருமாறு பொதுக்கூறுகளின் அடிப்படையில் பகுத்துக் காணலாம்.

<u>இருப்பு</u>

1. வாண்டையாரிருப்பு
2. தென்கொண்டாரிருப்பு
3. தின்னாயிருப்பு

<u>கோட்டை</u>

1. துறையாண்டார்கோட்டை
2. பொய்கையாண்டார் கோட்டை
3. மூவரையர் கோட்டை
4. நெடுவாக் கோட்டை
5. கரையீண்டார் கோட்டை
6. பழங்கண்டான் கோட்டை
7. நாட்டரையர் கோட்டை

<u>குடிகாடு</u>

1. சங்கரன் குடிகாடு
2. சோழகன் குடிகாடு

3. வேங்கிராயன் குடிகாடு

4. தெயுங்கபாயன் குடிகாடு

5. புள்ளவராயன் குடிகாடு

6. உறந்தைராயன் குடிகாடு

7. நல்லவன்னியன் குடிகாடு

8. பொய்கையாண்டார் குடிகாடு

9. வீரமுண்டார் குடிகாடு

10. பழங்கொண்டான் குடிகாடு

பட்டி

1. காங்கேயன் பட்டி

2. சோழகன் பட்டி

3. இராமுண்டான் பட்டி

4. வாலியன் பட்டி

5. தொண்டையான் பட்டி

6. அண்டியன் பட்டி

7. சாதகன் பட்டி

8. ஆரமுண்டான் பட்டி

9. ஒசையன் பட்டி

10. வில்லவராயன் பட்டி

11. உலகங்காத்தான் பட்டி

12. மலையராயன் பட்டி

13. திராணிப்பட்டி

14. கலியராயன் பட்டி

15. சாணூரன் பட்டி
16. எத்துமண்டாம் பட்டி
17. பாப்பரையன் பட்டி
18. மாதரையன் பட்டி
19. வல்லாண்டான் பட்டி
20. நரங்கியன் பட்டி
21. பாலாண்டான் பட்டி
22. வல்லியம் பட்டி
23. காடவராயன் பட்டி
24. சுரக்குடிப் பட்டி
25. பாண்டியராயன் பட்டி
26. காவாலிப் பட்டி
27. வெண்டையன் பட்டி
28. மழவராயன் பட்டி
29. முதலிப் பட்டி
30. கருப்பட்டிப் பட்டி
31. இராசாளிப் பட்டி
32. தென்னதரையன் பட்டி
33. மங்கத்தேவன் பட்டி
34. மங்கலத்துப் பட்டி
35. மலையப் பட்டி
36. அங்கராயன் பட்டி
37. சூரியன் பட்டி
38. கடம்பராயன் பட்டி
39. கதவம் பட்டி

பாடி
---

1. முண்டிபராயன் பாடி

பட்டு
---

1. ஆர்க்காற்றிப்பட்டு
2. வன்னிப்பட்டு
3. கண்டியன்பட்டு
4. வல்லாண்டான்பட்டு
5. தொண்டராயன்பட்டு

மங்கலம்
-----

1. கச்சிராயன்மங்கலம்
2. செருமங்கலம்

நல்லூர்
-----

1. மழவராயன் நல்லூர்

ஏந்தல்
----

1. மழவராயர் ஏந்தல்

உக்கடை
-----

1. வேங்கிராயன் உக்கடை

விடுதி

1. காடுவெட்டி விடுதி
2. பணிகொண்டான் விடுதி
3. வெட்டன் விடுதி

பேட்டை

1. பல்லவராயன்பேட்டை
2. களத்தில் வென்றான் பேட்டை
3. கல்விராயன்பேட்டை

ஓடை

காலிங்கராயன் ஓடை

குடியிருப்பு

வாண்டையான் குடியிருப்பு

மேற்காட்டிய கள்ளர் பட்டப் பெயர்களைத் தாங்கிய ஊர்களில் அந்தந்தப் பட்டப்பெயர் உடையாரே எண்ணிக்கையில் மிகுதியாக இருப்பதைக் காணமுடிகின்றது. ஊர்களின் பெயர்கள் அமையக் காரணமாகயிருந்த பட்டப் பெயருடையாரே அவ்வப்பகுதியில் முதற்கண் குடியேறி வாழ்ந்திருக்கவேண்டும் என முடிவு செய்வது பொருத்தமாகும். இத்தகைய ஊர்களில் வேறுபட்டங்களைத் தாங்கிய மக்களும் வாழ்கின்றனர் என்றாலும் ஊரின் தலைமைப் பொறுப்பு முன்னவர்களைச் சார்ந்ததாகவே இருத்தலை இப்பகுதியில் காணலாம். பிற பட்டங்களைத் தாங்கியவர்களை யாதாகும் காரணம்பற்றி வேற்றூரிலிருந்து

குடியேறியவர்களாகக் கருதலாம். எடுத்துக்காட்டாகத் தஞ்சை மாவட்டத்தில் தஞ்சையை அடுத்த ஒரத்தநாடு வட்டத்தில் உள்ள நெல்லுப்பட்டு என்னும் சிற்றூரில் பெரும்பான்மையானோர் மழவராயர் பட்டம் புனைந்தோராவர். இவர்களே ஊர்த்தலைமை கொண்டோராகக் கோயில் குளங்களையும் பொது நிலங்களையும் மேலாண்மை செய்கின்றனர். இவ்வூரில் எண்ணாட்டுப் பிரியர், ஆர்சுற்றியார், பொன்னாப்பூண்டார், தஞ்சிராயர், கண்டியர், விசயராயர், மண்ணையார், வெங்கிராயர் என்னும் பட்டமுடையோரும் மிகக் குறைந்த எண்ணிக்கையில் வாழுகின்றனர். இவர்கள் யாவருமே வேற்றூரிலிருந்து இவ்வூரில் உள்ளாரோடு மணஉறவு கொண்டமையினால் வந்து குடியேறியவர்களாகவே காணப்படுகின்றனர். இத்தகைய நிலையைத்தான் கள்ளர் பட்டப் பெயரோடு தொடர்புடைய பிற ஊர்களிலும் காணமுடிகின்றது.

ஊர்ப்பெயர்களின் அமைப்பு தமிழகம் முழுவதிலும் ஒன்றுபோல் அமையவில்லை. வட்டாரந்தோறும் சிற்சில பொதுக்கூறுகள் மாறுபட்டுக் காணப்படுகின்றன. அப்பொதுக் கூறுகள் அவ்வப் பகுதியின் சிறப்புப் பண்பாகக் கருதத்தக்கன. எடுத்துக்காட்டாக 'விடுதி' என்னும் பொதுக்கூறு புதுக்கோட்டைப் பகுதிக்குச் சிறப்பாகத் தெரிகிறது. இவ்வாறே பட்டி, கோட்டை என்பன புதுக்கோட்டை, திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்களில் ஆற்றுப் பாய்ச்சலுக்கு உட்படாத மேட்டுப் பகுதிகளின் சிறப்புக் கூறுகளாக அமைகின்றன. 'புலம்' என்னும் ஊர்ப்பெயர்கள் கடலோரப் பகுதிகளில் மிகுந்து காணப்படுகின்றன.

கள்ளர் வாழும் பகுதிகளில் காவிரி, வெண்ணாறு, வெட்டாறு, அரிசிலாறு குடமுருட்டி முதலான ஆறுகள் பாய்ந்து வளம் சிறக்கும் பகுதிகளும்

முற்கூறியவாறு ஆற்றுப்பாய்ச்சலுக்கு உட்படாத மேட்டுப் பகுதிகளும் ஊர்ப்பெயர் அமைப்பில் வேறுபட்டுக் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாகக் கோட்டை என்னும் பொதுக்கூறுடைய ஊர்களைக் கொள்ளலாம். இத்தகைய பெயர்கள் தஞ்சை மாவட்டப் பகுதியில் அமைந்துள்ள பாங்கினை அ. தட்சிணாமூர்த்தி, 'தஞ்சைக் கோட்டைகள்' என்னும் கட்டுரையில் விளக்கியுள்ளார்.[5] வண்டல் படியாத மேட்டுப்பாங்கான பகுதிகளில் ஐம்பதிற்கும் மேற்பட்ட ஊர்கள் கோட்டை என்னும் பெயர் தாங்கியுள்ளன. ஆற்றுப்பாய்ச்சல் மிக்க பகுதியில் சாக்கோட்டை என்னும் ஊர் ஒன்றே இவ்வாறு அமைந்துள்ளது என்றும் அதுகூட, பல்லவர் காலத்தில் திருக்கலயநல்லூர் என்றே அறியப்பட்டது என்றும் கோட்டை என்று முடியும் ஊர் அமைப்பு மேட்டுப் பகுதிக்கே உரிய சிறப்புக்கூறு என்றும் இவர் எடுத்துக் கூறுகின்றார்.

கோட்டை என்னும் சொல்லுக்கு அரண் என்பது பொதுவான பொருளாகும். அரண்கள், காட்டரண், நீரரண் எனப் பலவகைப்படும். கோட்டை என முடியும் பெரும்பான்மையான ஊர்கள் யாதாகும் ஒரு தாவரத்தின் பெயரைக் கொண்டு அமைந்துள்ளன என்றும் அங்கெல்லாம் மதில் அரண்கள் அல்லது நீர் அரண்கள் இருந்தமைக்குரிய சான்றுகள் இல்லை என்றும் எனவே பகைவர் நுழைய முடியாத பாதுகாப்பான பகுதிகள் என்கின்ற பொருளிலேயே இப்பெயர்கள் தோன்றியிருக்கலாம் என்றும் இவர் கருத்துத் தெரிவிக்கின்றார். இத்தகைய பட்டப்பெயர்கள் தாங்கிய ஊர்கள் மிகுந்து காணப்படுதலை நோக்க இங்கெல்லாம் முதன்முதல் குடியேற்றங்களை அமைத்து வாழத் தொடங்கியோர் கள்ளர்களாகவே இருக்கவேண்டும் என்றும் கருத்துத் தெரிவிக்கின்றார். மேட்டுப் பகுதிகளில் காணப்படுகின்ற இவ்வூர்கள் பல்லவர் கல்வெட்டுக்களிலோ சோழர் காலக் கல்வெட்டுக்களிலோ காணப்படாததை நோக்க இவ்வூர்களெல்லாம்

சோழர் ஆட்சிக் காலத்திற்குப் பிறகு தோன்றியிருக்க இடமுண்டு எனக் கருத்துத் தெரிவிக்கின்றார். இப்புதிய குடியேற்றம்ஏற்பட்டதற்கு உரிய காரணம், அஃது ஏற்பட்ட சரியான காலப்பகுதி ஆகியவை ஆராய்ச்சிக்கு உரியவை என்று காட்டியுள்ளார்.

இவ்வினாவிற்கு விடைகாண ஊர்ப் பெயர்களின் அமைதியையும் அவை அமைந்திருக்கக்கூடிய வட்டாரங்களையும் கணக்கில் கொள்வது இன்றியமையாதது. புதுக்கோட்டை மாவட்டம், தஞ்சை மாவட்டத்தின் தஞ்சை, ஒரத்தநாடு, பட்டுக்கோட்டை, மன்னார்குடி ஆகிய வட்டங்கள் ஊர்ப்பெயர்களைப் பொறுத்த வரையில் ஒற்றுமையுடையனவாக அமைகின்றன. அவ்வாறே புதுக்கோட்டை மாவட்டத்தையொட்டி அமைந்துள்ள தஞ்சை வட்டத்தின் ஊர்களில் பல பட்டிகளாக அமைகின்றன. தஞ்சையை ஒட்டிய ஒரத்தநாடு பகுதியில் நான்கு பட்டிகள் காணப்படுகின்றன. அதற்கப்பால் காணமுடியவில்லை.

புதுக்கோட்டை மாவட்டத்தில் காணப்படுவது போன்றே பட்டுக்கோட்டை, மன்னார்குடி, ஒரத்தநாடு ஆகிய வட்டங்களில் 'கோட்டை' என முடியும் ஊர்கள் பலவாக உள்ளன. 'வயல்' என முடியும் ஊர்கள் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ளது போன்றே பேராவூரணி வட்டத்திலும் பட்டுக்கோட்டை வட்டத்திலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. புதுக்கோட்டைப் பகுதியில் காணப்படுமாறு ஒரத்தநாடு பகுதியிலும் விடுதி என முடியும் ஊர்கள் உள்ளன.

இந்தப் பெயரமைதியைக்கொண்டு காண்கையில் மேற்குறிப்பிட்ட பெயர்கள் அனைத்தையும் பண்பாட்டு அடிப்படையில் ஒரலகாக அல்லது வட்டாரமாகக் குறிப்பிட இடமிருக்கிறது. ஊர்ப்பெயர்களில் கள்ளர் பட்டப்

பெயர்களின் அடிப்படையில் அமைந்த ஊர்களைக் கணக்கெடுக்கையில் அவை அனைத்தும் மேற்குறிப்பிட்ட வட்டத்திலேயே அமைந்துள்ளமையும் அவை கள்ளர் வாழுகின்ற பிற பகுதிகளில் காணப்படாமையின் ஆழ்ந்த சிந்தனைக்குரியனவாக உள்ளன. மேற்கண்ட உண்மைகள் இங்குக் குறிப்பிட்ட பகுதி கள்ளர் இனத்தவருக்கே உரியது என்று முடிவு செய்யக் காரணங்களாக அமைகின்றன.

புதுக்கோட்டையின் செல்வாக்கு மெல்ல கிழக்கு நோக்கிப் பரவியிருக்க வேண்டும்போல் தோன்றுகிறது. ஊர்ப்பெயர்கள் இம்முடிவுக்கு இட்டுச் செல்கின்றன. தஞ்சாவூர் மாவட்டம் வடுவூருக்கு அருகில் ஒரு புதுக்கோட்டை அமைந்துள்ளது. இங்ஙனமே புதுக்கோட்டைப் பகுதியில் உள்ளவாறு தஞ்சைப் பகுதியில் பரவாக்கோட்டையும் ஆதனக்கோட்டையும் காணப்படுகின்றன. பரவாக்கோட்டை மன்னார்குடி வட்டத்திலும் ஆதனக்கோட்டை ஒரத்தநாடு வட்டத்திலும் அமைந்துள்ளன. புதுக்கோட்டைப் பகுதியில் வாண்டையார் குடியிருப்பு உள்ளவாறே தஞ்சை மாவட்டத்தில் வடுவூருக்கு அருகில் வாண்டையாரிருப்பு காணப்படுகின்றது.

ஓர் ஊரிலிருந்து மக்கள் குடிபெயர்ந்து வேறோர் இடத்திற்குச் சென்று புதிய குடியிருப்புக்கள் அமைக்கும்போது தம்முடைய பழைய ஊரின் பெயரையே அமைத்துக்கொள்வது இயல்பானதேயாகும். ஒரு காலத்தில் திருநெல்வேலி மாவட்டத்திலிருந்து இலங்கைக்குச் சென்ற தமிழ் மக்கள் தாம் குடியேறிய நாட்டிலும் ஒரு திருநெல்வேலியை உருவாக்கினமையை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம். காடவராயர் என்னும் பட்டம் உடைய மக்கள் தமக்கென ஒரு குடியிருப்பை அமைத்து நெடுங்காலமாக வாழ்ந்துவரும் இடம் காடவராயன்பட்டி என்று அழைக்கப்படுகின்றது. கந்தர்வகோட்டைப் பகுதியில் இவ்வூர் அமைந்துள்ளது. இப்பட்டமுடையார்

தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் சிறுபான்மையினராகக் காணப்படுகின்றனர். இவர்கள் புதுக்கோட்டை மாவட்டத்திலிருந்தே சென்றிருக்கவேண்டும் என்று ஊய்த்துணர வேண்டியுள்ளது. இப்பகுதிகளில் வாழுகின்ற வேறு பட்டமுடைய மக்கள் தம்முடைய முன்னோர் புதுக்கோட்டைப் பகுதியிலிருந்து கிழக்கு நோக்கி வந்ததாகக் கூறுகின்றனர். ஒரத்தநாடு வட்டத்தில் மழவராயர்கள் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் வாழ்கின்றனர். இவர்கள் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள மழவராயன்பட்டி, கிள்ளுக்கோட்டை முதலான ஊர்களிலிருந்து குடிபெயர்ந்து இங்கு வந்து குடியேறியதாகப் பெரியவர்கள் குறிப்பிடுகின்றனர்.[6]

தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் நெடுவாக்கோட்டை என்ற ஓர் ஊர் உள்ளது. இவ்வூரில் நெடுவாண்டார் பட்டம் உடையாரும் பல்லவராயர் பட்டம் உடையாரும் மிகுதியாகக் காணப்படுகின்றனர். புதுக்கோட்டைப் பகுதியில் மேற்கொண்டகள-ஆய்வில் குளத்தூர் என்னும் ஊரில் நெடுவாண்டார்கள் வாழ்வது கண்டறியப்பட்டது. அவ்வாறே கல்லாக்கோட்டை சமீன்தாரும் அவருடைய உறவினரும் பல்லவராயர் பட்டமுடையோர் என்பது அறியப்படுகிறது. இதனால் ஒரத்தநாடு நெடுவாக்கோட்டையில் வாழும் நெடுவாண்டாரும் பல்லவராயரும் புதுக்கோட்டையிலிருந்து ஒரு காலத்தில் வந்து குடியேறியவர்களின் கால்வழியினர் என்று கருத இடமுண்டு. ஒரத்தநாட்டுப் பகுதிக்கு வந்து குடியேறிய நெடுவாண்டார்களில் ஒரு பகுதியினர் கிழக்கு நோக்கிச் சென்று மன்னார்குடிக்கு மேற்கில் ஒரு கல் தொலைவில் அமைந்த பகுதியில் குடியேறி அவ்விடத்திற்கும் நெடுவாக்கோட்டை என்று பெயர் சூட்டினர் என்று தெரிகிறது. இவ்வூரின் தலைமை நெடுவாண்டார் என்னும்

பட்டமுடையார் கையிலுள்ளது. இவ்வூரின் நாட்டாண்மைக்காரருக்கு மன்னை இராசகோபாலசாமி கோயிலில் ஆண்டுதோறும் இருமுறை சிறப்பு மரியாதை வழங்கப்படுகின்றது. திருமங்கையாழ்வார் தொடர்பாக நடத்தப்படும் வேடன்பறி என்னும் சமய நிகழ்ச்சிக்கு உரியோராக நெடுவாக்கோட்டை மக்களே காணப்படுகின்றனர். புதுக்கோட்டைப் பகுதியில் காணப்படும் பட்டிகளில் தென்னதிரையன்பட்டி என்பதும் ஒன்றாகும். இப்பெயரைக்கொண்டு இவ்வூர் இப்பட்டமுடையாரால் முதற்கண் அமைக்கப்பெற்றது என்றும் அறியமுடிகின்றது. மேலே குறிப்பிட்ட மன்னை நெடுவாக்கோட்டையில் இன்றும் தென்னதிரையர் பட்டமுடையார் வாழ்கின்றனர் என்பது புதுக்கோட்டைக்கும் மன்னார்குடிக்கும் உள்ள உறவுக்குச் சான்றாக உள்ளது.

உலகங்காத்தார் என்னும் பட்டமுடையாருக்கு உரிய தலைமையிடம் புதுக்கோட்டையிலுள்ளது. அஃது உலகங்காத்தான்பட்டி என வழங்குகின்றது. இப்பட்டமுடையார் நாகப்பட்டினத்திலும் வாழுகின்றனர். தஞ்சை மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் தென்னமநாடு, துறையூர் முதலான ஊர்களில் வளங்கொண்டார் என்னும்பட்டமுடையார் வாழுகின்றனர். இவர்கள் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள வளங்கொண்டான் விடுதியிலிருந்து வந்து குடியேறியவர்களின் கால்வழியினராகக் கருதவேண்டியுள்ளது. ஒரத்தநாடு வட்டம் மடிகை கிராமத்தில் கருப்பட்டியார் என்னும் பட்டமுடையார் வாழுகின்றனர். இப்பட்டத்திற்கும் புதுக்கோட்டைப் பக்கத்திலுள்ள கருப்பட்டிப்பட்டிக்கும் தொடர்புண்டு என உறுதியாக நம்பலாம். இதேபோன்று ஒரத்தநாடு வட்டத்தில் கருப்பட்டிப்பட்டி என்னும் ஊரும் உள்ளது. அங்கும் இப்பட்டமுடையாரே மிகுதியாக வாழுகின்றனர். புதுக்கோட்டைப் பகுதியில் நரங்கியர் என்னும் பட்டமுடையார் வாழுகின்றனர். நரங்கியன்பட்டி என்ற ஓர் ஊரும் அப்பகுதியில் உள்ளது. அங்கு நரங்கியர் என்ற பட்டமுடையாரே மிகுதியாக

வாழுகின்றனர். மன்னை வட்டத்தில் உள்ள அத்திக்கோட்டையில் வாழும் நரங்கப்பிரியர் என்ற பட்டமுடையோர் புதுக்கோட்டை நரங்கியரோடு இணைத்துச் சிந்திக்கத்தக்கோர் எனத் தோன்றுகிறது. ஒரத்தநாடு வட்டத்தில் புதுப்பட்டி என்ற கிராமத்தில் நரங்கியர் என்ற பட்டமுடையார் வாழுகின்றனர் என்பதும் அறியத்தக்கதாகும்.

ஆய்வுக்குரிய ஆற்றுப் பாய்ச்சலில்லாத மேட்டு நிலப்பகுதியில் ஏற்பட்ட புதிய குடியிருப்புக்களுக்கும் குடிப்பெயர்களுக்கும் யாதாகும் தக்க காரணங்கள் இருந்தேயாகவேண்டும். ஆதிக்க உணர்வு, அரசியல் நெருக்கடி, இயற்கையின் சீற்றம், பஞ்சம் முதலியவற்றில் ஒன்று இதற்குக் காரணமாக இருக்கலாம். அல்லது குறிப்பிட்ட அரசின் முயற்சியினால் இக்குடியேற்றங்கள் ஏற்பட்டிருக்கவும் இடமுண்டு. காடு கொன்று நாடாக்கும் முயற்சி நீண்ட காலமாக இருந்து வந்த ஒன்றேயாகும்.

விசயநகர மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் அரசின் உதவியினால் நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டுவரப்பட்டன என்று அறியமுடிகின்றது. கிருட்டிணதேவராயர் அனந்தபுரி மாவட்டத்தில் கோயில், குளம், கிணறு முதலியவற்றை வெட்டுவித்த 'பாலிரெட்டி' என்பவருக்குத் தாசபந்தமாக நிலங்களை அளித்த செய்தி தெரியவருகின்றது.[7] மைசூர் நாட்டில், "இந்த நான்கு எல்லைக்கு உட்பட்ட இடங்களில் காடுகொன்று நாடாக்கிக் குளம் தொட்டு வளம்பெருக்கிய உங்களுக்கு இங்குள்ள நிலங்களில் நான்கில் மூன்று பங்கு அளிக்கிறோம்"[8] என்று ஒரு கல்வெட்டில் காணப்படுகின்றது. இவ்வாறே தமிழ்நாட்டில் தேப்பெருமாள் நல்லூரில் பயிரிடப்படாமல்

கிடந்த நிலத்தை அவ்வூரிலிருந்த கோயில் பண்டாரத்தார் வாங்கிச் சீர்திருத்திக் குத்தகைக்கு விட்டனர் என்று அறியமுடிகின்றது.[9] தரிசு நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வந்தவர்களுக்கு அரசு பல சிறப்புரிமைகளை அளித்திருக்கிறது. 16 ஆம் நூற்றாண்டில் இராமநாதபுரம் மாவட்டத்தில் குடிகளில்லாமல் பாழடைந்து கிடந்த ஊரில் இரு அரசாங்க அலுவலர்கள் மூன்று சகோதரர்களை அழைத்து நிலங்களைப் பயிரிடும் குடிகளைக் குடியேற்றும்படி உத்திரவிட்டனர். அச்சகோதரர்களில் சக்கதேவன் என்பவர் பாடி காவல் அதிகாரியாக நியமிக்கப்பட்டார். மைசூர் நாட்டில் இத்தகைய சலுகைகள் அளிக்கப்பட்டது பற்றிய சான்றும் உண்டு.[10] இச்சான்றுகளைக் கொண்டு காண்கையில் தமிழரசர்களின் ஆட்சிக்குப் பிறகு தெலுங்கர்களின் ஆட்சிக் காலத்தில் இம்மேட்டுப் பகுதிகளில் குடியேற்றங்கள் அரசின் உதவியோடு ஏற்பட்டிருக்கலாமோ என ஐயுற வேண்டியுள்ளது.

சிலபோது மாகாண சிற்றரசர்கள் விதித்த வரிவிதிப்பைத் தாங்க முடியாமல் குடிகள் தங்களுடைய வீடு வாசல்களைவிட்டு வேறு இடங்களில் குடிபெயர்ந்த நிகழ்ச்சிகளும் நடைபெற்றுள்ளன. இங்ஙனம் குடிபெயர்ந்த மக்களுக்கு விசயநகர அரசு உதவி செய்தது. "தன்னாட்டை விட்டுச்சென்று வேற்று நாட்டில் குடியேறும் மக்களுடைய துன்பத்தை நீக்க முயற்சி செய்யாத அரசன் ஏழ்பொழில்களையும் வென்று அடக்கினாலும் அவனுடைய நாடு நாடாகாது" என்று கிருட்டினதேவராயர் தம்முடைய 'ஆமுக்த மாலிதா' வில் குறிப்பிடுகின்றார்.[11]

புன்செய் நிலங்களைச் சாகுபடி செய்தவர்களுக்குத் தரப்பட்ட சலுகைகள் பற்றிச் சான்று உண்டு. 16 ஆம் நூற்றாண்டில் திருக்கோயிலூர் பகுதியில்

மக்கள் வரிச்சுமையால் குடிபெயர்ந்தபோது அரசியல் அதிகாரி இம்மக்களுக்கு உதவி செய்தமைக்குச் சான்று உண்டு.[12] தென்னார்க்காடு மாவட்டத்தில் வரிச் சுமையால் மக்கள் துன்புற்றபோது ஒரு கச்சிராய தலைவர் அவர்களுக்குச் சலுகைகள் செய்தது பற்றிய சான்று இருக்கிறது. இச்சான்றுகள் அடிப்படையில் காண்கையில் ஆய்வுக்குரிய பகுதியில் ஏற்பட்ட புதிய குடியிருப்புக்களுக்கு இத்தகையதொரு அரசியல் பின்னணி இருந்திருக்கலாம் என உய்த்துணர இடம் உண்டு. வலுவான ஆவணச் சான்று கிட்டும் வரை இதுபற்றிய தெளிவான முடிவை மேற்கொள்ள முடியாது.

கள்ளர் இனத்தவர் தம்முடைய பகுதிகளை ஆட்சி செய்வதற்குத் தாமே அமைத்துக்கொண்ட நாடுகள் பலவற்றைப் பற்றிப் பழைய ஆவணங்கள் பேசுகின்றன. அத்தகைய பட்டியல் ஒன்றினைக் கள்ளர் சரித்திர ஆசிரியர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் தருகின்றார். கள்ளருக்கு வழங்குகின்ற பல பட்டப்பெயர்களுக்கு உரிய விளக்கங்கள் கிடைக்காத நிலையில் இந்த நாடுகளின் பட்டியல் பேருதவியாக அமைந்தது. நாடுகளின் பெயர்களுக்கும் பட்டப்பெயர்களுக்கும் இடையே நெருக்கமான உறவு இருப்பது கண்டறியப்பட்டது. அத்தகைய நாட்டுப் பெயர்களும் பட்டப்பெயர்களும் இங்கு சிந்திக்கப்படுகின்றன.

| | நாட்டுப் பெயர் | | பட்டப் பெயர் |
|---|---|---|---|
| 1. | மருங்கைநாடு | - | மருங்கையார் |
| 2. | திருமங்கலநாடு | - | மங்கலார் |
| 3. | புழியூர் நாடு | - | புழிராயர் |
| 4. | கீழ்வேங்கைநாடு | - | வேங்கிராயர்/வேங்கைராயர் |
| 5. | சித்துபத்துநாடு | - | சிற்றாட்சியார் |

| | | | |
|---|---|---|---|
| 6. | பத்துநாடு | – | பத்தாளர் |
| 7. | ஒக்கநாடு | – | ஒக்கநாட்டார் |
| 8. | ஜயயா ர்நாடு | – | ஜயப்பிரியர் |
| 9. | அன்னவாசல் பத்துநாடு | – | அன்னவாசல்ராயர் |
| 10. | கோட்டைப்பத்துநாடு | – | கோட்டைரையர் |
| 11. | வடுவூர்நாடு | – | வடுவராயர் |
| 12. | பாப்பா நாடு | – | பாப்புடையார் |
| 13. | சுந்தரநாடு | – | சுந்தர் |
| 14. | மின்னாத்தூர்நாடு | – | மேனாட்டரையர் |
| 15. | கிளியூர்நாடு | – | கிளியூரார் |
| 16. | காவாலிநாடு | – | காவாலியார் |
| 17. | வல்லநாடு | – | வல்லாண்டார் |
| 18. | மாலைநாடு | – | அம்மாலைத்தேவர் |
| 19. | கண்டர்மாணிக்கநாடு | – | கண்டர்சில்லி, கண்டபிள்ளை |
| 20. | சிறுகுடிநாடு | – | சுரக்குடியார் |
| 21. | செம்பொன்மாரிநாடு | – | செம்பொன்கொண்டார் / செம்மைகொண்டார் |
| 22. | ஊமத்தநாடு | – | ஊமத்தரையர் |
| 23. | அம்மநாடு | – | அம்மையர் |
| 24. | அங்கப்பட்டி நாடு | – | அங்கராயர் |
| 25. | அருமைநாடு | – | அருமைநாட்டார் |
| 26. | செட்டிநாடு | – | செட்டியரையர் |
| 27. | இடங்காநாடு | – | இடங்காப்பிறந்தார் |
| 28. | கைக்கெட்டிநாடு | – | கட்கொடையார் |

| | | | |
|---|---|---|---|
| 29. | களப்பாடி நாடு | - | களப்பாடியார் |
| 30. | காரைக்காடு நாடு | - | காரைக்காட்டார் |
| 31. | காசாநாடு | - | காசிநாடு |
| 32. | கிராக்குடிநாடு | - | கிடங்காப்பிறந்தார் |
| 33. | நரசிங்கம்பட்டி | - | நரசிங்கப்பிரியர் / நரஙிகப்பிரியர் |
| 34. | ஒண்டிநாடு | - | ஒண்டிப்புலியூர் |
| 35. | பம்பநாடு | - | பம்பாளியார் |
| 36. | பஞ்சமநாடு | - | பஞ்சமராயர் |
| 37. | பண்ணியநாடு | - | பண்ணியமுண்டார் / கொண்டார் |
| 38. | சவுட்டி நாடு | - | சவட்டியார் |
| 39. | செம்பர்நாடு | - | செம்பியர் |
| 40. | சென்னாடு | - | சென்னாடர் |
| 41. | சிறுநாடு | - | சிறுநாடர் |
| 42. | ஊரத்திநாடு | - | ஊரத்தியார் |

நாட்டுப் பெயர்களுக்கும் பட்டப்பெர்களுக்குமிடையே காணப்படும் இந்த நெருக்கமான உறவினைக் காண்கையில் அந்தந்தப் பகுதிகளின் ஆட்சியும் வளர்ச்சியும் பாதுகாப்பும் பிறவும் இம்மக்களைச் சார்ந்தே இருந்திருக்க வேண்டும் என்று உய்த்துணர வேண்டியுள்ளது. பண்டை மன்னர்களைப் போலவே இவர்களும் தத்தம் தகுதிக்கேற்ப இத்தகைய பட்டங்களை மேற்கொண்டுள்ளனர் எனத் தெரிகின்றது. இங்குக் குறிக்கப்பட்ட பட்டப்பெயர்கள் சோழர்காலத்துக் கல்வெட்டுக்களிலோ அதற்கு முற்பட்ட கல்வெட்டுக்களிலோ காணப்படவில்லை.

இதனால் இப்பட்டங்கள் சோழர் காலத்துக்குப் பிறகுதான் இம்மக்களுக்கு ஏற்பட்டிருக்கக் கூடும் என முடிவு செய்வது தவறாகாது. கள்ளர் நாடுகளில் அமைந்த நாட்டுப் பிரிவும் நாட்டாட்சியும் இத்தகைய பட்டப் பெயர்களின் உருவாக்கத்திற்கு அடிப்படையாக இருந்துள்ளன. இந்தப் பட்டங்கள் வேறு எந்த அரச மரபினரோடும் இவர்களை இணைத்துக் காண உதவவில்லை. இவர்கள் தனியுரிமையோடு தத்தம் நாட்டுப் பகுதிகளை ஆட்சிபுரிந்தனர் என ஊகித்தறிய இடமுண்டு.

தொகுப்புரை

1. ஊர்ப்பெயர்களுக்கும் கள்ளர் பட்டப்பெயர்களுக்கும் நெருங்கிய உறவுள்ளமையை ந.மு.வேங்கடசாமி நாட்டாரும் சுவாமிநாத மாதவராயரும் சுட்டிக்காட்டியுள்ளனர். சுவாமிநாத மாதவராயரின் பல விளக்கங்கள் வரலாற்றுச் சான்றுகளால் நிறுவ முடியாதனவாகக் காணப்படுகின்றன.

2. ஆய்வுக்குரிய வட்டாரங்களில் நூற்றுக்கு மேற்பட்ட ஊர்களின் பெயர்கள் பட்டப் பெயர்களோடு நெருங்கிய தொடர்புடையனவாக உள்ளன.

3. ஊர்ப்பெயர்களால் பட்டப்பெயர்களும் பட்டப்பெயர்களால் ஊர்ப் பெயர்களும் அமைந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

4. பட்டப்பெயர் அடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்களுக்கு இருப்பு, கோட்டை, குடிகாடு, பட்டி, பாடி, பட்டு, மங்கலம், நல்லூர், ஏந்தல், உக்கடை, விடுதி, பேட்டை முதலியன சிறப்புக் கூறுகளாக அமைந்துள்ளன.

5. பட்டப்பெயராயல் அமைந்த ஊரில் குறிப்பிட்டபட்டமுடையாரே நாட்டாண்மைக்காரராக உள்ளனர் ஏனைய பட்டமுடையார் வேற்றூரிலிருந்து வந்து குடியேறியவர்களாகக் காணமுடிகின்றனர்.

6. ஆற்றுப்பாய்ச்சல் மிக்க வளமான பகுதிகளுக்கும் மேட்டுப்பாங்கான பகுதிகளுக்கும் இடையே ஊர்ப்பெயர் அமைப்பில் வேறுபாடு காணமுடிகிறது. புதுக்கோட்டை, தஞ்சாவூர், திருச்சி மாவட்டங்களின் செம்மண் நிலப்பாகங்களை ஒரு பண்பாட்டு அலகாகக் கொள்ள இடமிருக்கிறது.

7. ஊர்ப்பெயர்களையும் பட்டப்பெயர்களையும் அடிப்படையாகக்கொண்டு காண்கையில் பல பட்டப்பெயர் தாங்கியோர் புதுக்கோட்டைப் பகுதியிலிருந்து கிழக்கு நோக்கிக் குடியேறிச் சென்றனர் என்று முடிவு செய்ய வேண்டியுள்ளது.

8. இக்குடியேற்றம் சோழர் காலத்துக்குப் பிறகே ஏற்பட்டிருக்க வேண்டும் போல் தோன்றுகிறது. இப்பகுதிகளில் காணப்படும் பல ஊர்ப்பெயர்களும் பட்டப்பெயர்களும் சோழர்காலக் கல்வெட்டுக்களில் காணப்படாமையை இதற்குச் சான்றாகக் கொள்ளலாம்.

9. பல பட்டப்பெயர்கள் எந்த அரச மரபினரோடும் தொடர்புபடுத்திக் காணமுடியாதனவாக உள்ளன. இம்மக்கள் தன்னுரிமையோடு தாம் அமைத்துக்கொண்டு நாட்டுப்பகுதிகளை ஆண்டமை பற்றித் தமக்குத் தாமே சூட்டிக்கொண்ட பட்டங்களாக இவை தோன்றுகின்றன.

## சான்றெண் விளக்கக் குறிப்புக்கள்

1. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், பக்.48-49.
2. மு.சுவாமிநாத மாதவராயர், சூரியகுல கள்ளர் சரித்திரம், ப.39.
3. மேற்படி., ப.74.
4. மேற்படி., பக்.102-103.
5. பூண்டிக் கல்லூரி வெள்ளி விழா மலர்-1981, பக்.105-106
6. அ.வீராசாமி மழவராயர், நெல்லுப்பட்டு, நேர்காணல், நாள்: 30.10.92.
7. தே.வே.மகாலிங்கம், விஜயநகரப் பேரரசில் நிலைபெற்றிருந்த பொருளாதார வாழ்க்கை முறை, ப.64.
8. மேற்படி., ப.64.
9. மேற்படி., ப.64.
10. மேற்படி., ப.65.
11. மேற்படி., ப.65.
12. மேற்படி., ப.65.

உலகிலேயே கள்ளர் இனத்தைப் போல நூற்றுக்கணக்கான புறமணக் குழுக்களைக்கொண்ட இன்னொரினம் இல்லை எனலாம். இப்புறமணக் குழுக்களின் எண்ணிக்கை பல்வேறு அறிஞர்களால் வெவ்வேறாகக் கொள்ளப் பட்டிருக்கிறது. ந.மு.வேங்கடசாமி நாட்டார் 348 பிரிவுகளைக் காட்டியுள்ளார் எனின் அவருக்குப்பின் கள்ளர்களைப் பற்றி வரலாற்று நூலை வெளியிட்ட மு.சுவாமிநாத மாதவராயர் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பிரிவுகளைக் காட்டியுள்ளார். ஆனால், இதனையும் முழுமையானதாகக் கருதுதற்கில்லை கள்ளர் வாழும் பகுதிகள் அனைத்திற்கும் சென்று கள ஆய்வு மேற்கொண்டால் இன்னும் பலவற்றைப் புதியனவாகக் காணக்கூடும் என்றே தோன்றுகிறது. இவ்வாய்வாளர் புதுக்கோட்டைப் பகுதியில் மேற்கொண்ட கள ஆய்வின்போது முன்னர்ச் சுட்டிய இரண்டு அறிஞர்களின் பட்டியலில் காணப் பெறாத பல பட்டங்களைக் காணமுடிந்தது. இப்பட்டப்பெயர்கள் எத்தனை நூற்றாண்டுகளாக வழக்கத்தில் இருக்கின்றன என்பதைத் துல்லியமாகக் கணக்கிட்டுக் கூறுவது இயலாததாகும். எனினும் பல பட்டப் பெயர்கள் சோழர்களின் கல்வெட்டுக்களில் காணப்படுவதுகொண்டு அவற்றின் காலத்தை ஓரளவிற்குக் கணித்துக்கூற இயலும். கல்வெட்டுக்களில் காணப்படும் பட்டங்களின் எண்ணிக்கையைவிட அங்ஙனம் காணப்பெறாத பட்டியல்களே மிகுதியானவையாகும். இவை சோழர்காலத்திற்குப் பின் கள்ளர் பெருமக்களால் மேற்கொள்ளப்பட்டவை என்று கூறமுடியுமே தவிர எந்தக் காலமுதல் என்பதை வரையறுத்துக் கூறுவது எளிதன்று. வரலாற்றுச் சிறப்புமிக்க இப்பட்டங்கள் கள்ளர்களின் சமூக வாழ்க்கையில் பெற்றுள்ள இடம் மிகச் சிறப்பானதாகும். இதன் தனித்தன்மையை உணர வேண்டுமேல்

தமிழகத்தில் வாழும் குறிப்பிடத்தகுந்த ஏனைய பிரிவினரின் சமூக அமைப்போடு ஒப்பிட்டுக் காண்பது இன்றியமையாததாகிறது.

தமிழகத்தில் எத்தனையோ சாதிகள்இருப்பினும் குறிப்பிடத்தகுந்த எண்ணிக்கையில் மக்களைக் கொண்ட சாதிகள் சிலவே. மறவர், அகம்படியர், வெள்ளாளர், வன்னியகுலசத்திரியர், கவுண்டர், ஆகியோர் அத்தகையோராவர். இவர்களைப் பற்றி ஆய்ந்த சமூகவியலறிஞர்கள் இவர்களிடையே அமையும் உறவு முறைகளையும் தெளிவுபடுத்தியுள்ளனர். அஃது ஈண்டுச் சுருக்கமாக ஆராயப்படுகின்றது.

## மறவர்

முக்குலத்தோரில் ஒரு பிரிவினரான மறவரில் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி முதலான மாவட்டங்களில் குறிப்பிடத்தகுந்த எண்ணிக்கையில் வாழுகின்றனர். இவர்கள் 7 பெரும்பிரிவினராகப் பகுக்கப்படுகின்றனர். அப்பிரிவுகள் வருமாறு

1. செம்பிய நாட்டு மறவர்
2. கொண்டையன் கோட்டை மறவர்
3. ஆப்பனூர் நாட்டு மறவர்
4. அகப்ப நாட்டு மறவர்
5. ஊர்க்காட்டு மறவர்
6. தப்புக் காட்டி மறவர்
7. காய்ச்சிக் காட்டு மறவர்

என்ற ஏழு பெரும் பிரிவாகவும் மேலும் பல உட்பிரிவுகள் உடையவர்களாகவும் மறவர்கள் விளங்குகின்றனர்.

உட்பிரிவுகள்

1. அங்குக்கோட்டை மறவர்
2. அம்புஞ்ணி மறவர்
3. அனிவக் கோட்டை மறவர்
4. ஆப்ப நாட்டு மறவர்
5. காரண மறவர்
6. கள்ளிக் காட்டு மறவர்
7. கயிறுக்கட்டி மறவர்
8. கரந்தை மறவர்
9. கொட்டல் மறவர்
10. கொண்டையன் மறவர்
11. சேர்வைக் கார மறவர்
12. செட்டி மறவர்
13. சீந்தல் மறவர்
14. சிறுதாலிக் கட்டி மறவர்
15. பெருந்தாலிக் கட்டி மறவர்
16. மணியக்காரர் மறவர்
17. பண்டார மறவர்
18. பாசிக் கட்டி மறவர்
19. குறிச்சி மறவர்
20. குன்ற மராட்டு மறவர்
21. கோட்டை மறவர்

22. வேம்பக்கோட்டை மறவர்
23. செம்பி நாட்டு மறவர்
24. கொண்ட மறவர்
25. வாளிய மறவர்
26. வளம்ப மறவர்
27. ஜவுளி மறவர்
28. கிளை மறவர்
29. கொங்கு நாட்டு மறவர்
30. தொண்டை நாட்டு மறவர்
31. உறையூர் மறவர்
32. உப்புக் காட்டு மறவர்
33. நாட்டார் மறவர்
34. தோளர் மறவர்

எனப் பல உட்பிரிவுகள் உடையனவாக விளங்குகின்றன.

இவர்களின் செம்பிநாட்டு மறவர்கள் ஏனையோரைவிட உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். செம்பி நாட்டு மறவர்கள் மேலும் ஏழு குழுக்களாக விளங்குகின்றனர். ஒவ்வொரு உட்பிரிவினரும் பல கிளைக் குழுக்களைக் கொண்டுள்ளனர். அவர்கள் மரம், கொத்து, கிளை என மூன்று கிளையினராக விளங்குகின்றனர். இவர்களிடையே மணஉறவு நிகழ்வதில்லை. ஏனெனில் இவர்கள் குருதி உறவுடைய சகோதர உறவுடையவராகக் கருதப் படுகின்றனர்.[1]

அகமுடையார்

அகமுடையார் என்ற சாதிக்கு உரியவர்கள் தஞ்சாவூர், மதுரை, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் காணப்படுகின்றனர்.

தஞ்சாவூர் மாவட்டக் கையேட்டில், "அகமுடையார் என்ற பெயர் பல பொருள் தரும் 'அகம்' என்ற வேர்ச் சொல்லிலிருந்து வந்தது. அகம் என்பதன் பல பொருள்களில் வீடு என்பதும், நிலம் என்பதும் அடங்கும். அச்சொல் உடையார் என்ற விகுதி பெற்று வீடுடையார், நிலமுடையார் என்பதுபோல உரிமை உணர்த்தும் அகமுடையார் என்ற சொல்லாக்கமும் அத்தகையதே. இச்சொல் 'அகம்' என்பதன் மற்றொரு பொருளான உள்ளே என்பதன் பொருளமைய 'அகம் பாடியன்' எனப் பொருள் கொள்ளப்பட்டு அரசர்களின் அரண்மனை, கோயில் ஆகியவற்றின் உள்ளே காரியம் பார்க்கும் அதிகாரி எனப் பொருள் கொள்ளக் கூடியதாகவும் உள்ளது"[2] எனக் கூறப்பட்டுள்ளது.

அகமுடையார் அல்லது அகம்படியர் என அழைக்கப்படும் பிரிவில் வகுப்பினர் முக்குலத்தோர் என அழைக்கப்படும் பிரிவில் ஒரு வகுப்பாராக விளங்குகின்றனர். அகம்படியர் தங்களுக்குள் பல உட்பிரிவுகளைக் கொண்டு விளங்குகின்றனர்.

1. ஐவலி அகமுடையார்
2. நாட்டு அகமுடையார்
3. கோட்டைப்பத்து அகமுடையார்

4. நாட்டு மங்கல அகமுடையார்

5. இராஜபோஜ அகமுடையார்

6. இராஜகுல அகமுடையார்

7. இராஜ வாசல் அகமுடையார்

8. கள்ளர் அகமுடையார்

9. மறவர் அகமுடையார்

10. துளுவ அகமுடையார்

11. சேர்வைக்காரர்

என்பனவாகும். இவர்களிடையே அகமண, புறமணக் கட்டுப்பாடுகள் இல்லை. மறவரிடையே காணப்பட்டதைப் போலவே இவர்களிடையே புறமண உறவு குழுக்கள் இருப்பதாகக் காணப்படவில்லை. அந்தந்த வட்டாரத்திலும் தம் முடைய மணவுறவுகளைச் சுருக்கிக் கொள்கிற பொதுவான வழக்கப்படி இவர்கள் உறவு கொள்கிறார்கள். எடுத்துக்காட்டாக பேராவூரணி பகுதியிலுள்ள ஊமத்தநாடு என்னும் வட்டாரத்தைச் சேர்ந்த 18 ஊர்களில் வாழுகின்ற அகம்படிய தேவ சமூகத்தினர் அந்த 18 ஊர்களிலேயே மண உறவு கொள்வதாக விளங்குகின்றனர். தஞ்சை மாவட்டத்தில் வாழும் கோட்டைப்பத்து அகம்படியர் தம்மை ஏனையோரினும் உயர்ந்தோராகக் கருதிக் கொள்கின்றனர். இவர்களுக்குள் நிலவுகின்ற இவ்வட்டார மனப்பான்மைகூட இப்பொழுது மாறி வருகிறது. மிக நெருக்கமான சகோதர உறவுடைய குடும்பங்களைத் தவிர ஏனைய குடும்பங்களின் மண உறவு கொள்ள எந்தத் தடையுமில்லை.

## வெள்ளாளர்

வெள்ளாளர் என்ற வகுப்பினர் தொண்டை மண்டல வெள்ளாளர், சோழிய வெள்ளாளர், பாண்டிய வெள்ளாளர், கொங்கு வெள்ளாளர் எனத்

தனித்தனிப் பிரிவாக உள்ளனர். ஒவ்வொரு பிரிவிலும் மேலும் பல உட்பிரிவுகளும் இவர்களிடத்தில் காணப்படுகிறது. அவை வருமாறு

1. தொண்டை மண்டல வெள்ளாளர்

செங்கற்பட்டு, வடவார்க்காடு மாவட்டங்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்ற இவர்களின் உட்பிரிவுகளாக விளங்குவன.

1. துளுவ வெள்ளாளர்
2. பூந்தமல்லி வெள்ளாளர்
3. கொண்டை கட்டி வெள்ளாளர்

என்பனவாகும்.

2. சோழிய வெள்ளாளரின் உட்பிரிவுகள்

தஞ்சை, திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்ற சோழிய வெள்ளாளர்களின் உட்பிரிவுகளாக விளங்குவன.

1. வெள்ளாளச் செட்டி
2. கொடிக்கால் வெள்ளாளர்
3. கைக்கிலி நாட்டார்

என்பனவாகும்.

3. பாண்டிய வெள்ளாளர்

மதுரை, திருச்சி, திருநெல்வேலி மாவட்டங்களில் பெரும்பான்மையினராக வசிக்கும் இவ்வெள்ளாளர்கள் தங்களைப் பாண்டிய வெள்ளாளர்கள் என்று அழைத்துக் கொள்கின்றனர். இவர்களின் உட்பிரிவுகளாக

1. கார்காத்தார் அல்லது கரைக்காட்டார்
2. மாங்குடி வெள்ளாளர்
3. பஞ்சை வெள்ளாளர்
4. அரும்பூர் சிறுகுடி வெள்ளாளர்
5. அகம்படிய வெள்ளாளர்
6. நீறு பூசு வெள்ளாளர்

என்பவை விளங்குகின்றன.

4. கொங்கு வெள்ளாளர்

கோவை, சேலம் மாவட்டங்களில் அதிக எண்ணிக்கையில் வாழும் இப்பிரிவினர் தங்களைக் கொங்கு வெள்ளாளர் என்று அழைத்துக் கொள்கின்றனர். அவர்களின் உட்பிரிவுகளாக விளங்குவது

1. செந்தலை வெள்ளாளர்கள்
2. படைத்தலை வெள்ளாளர்
3. வெள்ளிக்கை வெள்ளாளர்
4. பவழங்கட்டி வெள்ளாளர்
5. மலையடி வெள்ளாளர்
6. தொல்லைக் காது வெள்ளாளர்

என்பனவாகும்.

வெள்ளாளர்களின் உட்பிரிவுகள் அவர்களின் திருமண உறவுக்குத் தடையானவை அல்ல.

## நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள்

நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் தங்களைத் தாங்கள் வழிபடும் தெய்வத்தின் அடிப்படையில் 9 பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டுள்ளனர். அவை வருமாறு,

1. இளையாத்தூர் கோயில்குடி
2. மாத்தூர் கோயில்
3. வயிரவன் கோயில்
4. இரணியூர் கோயில்
5. பிள்ளையார்ப்பட்டி கோயில்
6. நியமம் கோயில்
7. இலுப்பைக்குடி கோயில்
8. சேனைக்குடி கோயில்
9. வேலன் குடி கோயில்

என்பனவாகும். இக்கோயில் ஒவ்வொன்றும் புறமண உறவுடைய குழுவாகும்.

## கவுண்டர்

கோவை, பெரியார், சேலம் மாவட்டங்களும் பழனி, கரூர், குளித்தலை வட்டாரங்களும் அடங்கிய பகுதி கொங்கு நாடு என்று அழைக்கப் படுகின்றது. இப்பகுதியில் பெரும் எண்ணிக்கையில் வாழுகின்ற மக்கள் கொங்கு வேளாளர் அல்லது கவுண்டர் என்று அழைக்கப்படுகின்றனர்.

கவுண்டர்கள் பறவைகளின் பெயர்கள் அடிப்படையில் 9 உட்பிரிவுகளைக் கொண்டுள்ளனர். ஒவ்வொன்றும் தனித்தனியே கூட்டம் என்று அழைக்கப்பெறும்.

ஆந்தைக் கூட்டம், கிளிக் கூட்டம் முதலான ஒன்பது பறவைகளின் பெயர்களைக் கொண்டு விளங்குகின்ற இவர்கள் ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் தாயாதி களாக விளங்குகின்றனர். ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் வேறொரு கூட்டத்தில் மணஉறவு வைத்துள்ளனர்.

வன்னியர்

தஞ்சை மாவட்டத்தின் பகுதிகளிலும் மதுரை மாவட்டத்தின் பகுதிகளிலும் தென்னார்க்காடு, வடவார்க்காடு மாவட்டத்தின் பகுதிகளிலும் பேரெண்ணிக்கையில் வாழும் இம்மக்கள் படையாச்சியர்கள் என்றும் வன்னியகுலசத்திரியர் என்றும் அழைக்கப்படுவதைப் போன்றே பல பட்டப் பெயர்கள் காணப்படுகின்றன. வாண்டையார், மழவராயர், காலிங்கராயர், பண்டாரத்தார் முதலான பட்டங்களையுடைய இவ்வினத்தாருக்கும் கள்ளருக்குமிடையே நெருக்கமான உறவு இருந்திருக்க வேண்டுமென்பது வேறொரு இடத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.

வன்னியர்களின் உருத்திர வன்னியர், கிருட்டின வன்னியர், சம்பு வன்னியர், இந்திர வன்னியர், அகமுடையார், அக்கினி வன்னியர், அரசு வன்னியர், நாகவந்தம் வன்னியர், நத்துமர் வன்னியர், பண்டமுத்து வன்னியர், பெருமாள் வன்னியர், கள்ளவெளி வன்னியர் முதலிய உட்பிரிவுகள் காணப்படுகின்றன. நாயக்கர், வர்மா, நாயனார், உடையார், கவுண்டர் எனப்பல பெயர் களும் உண்டு. இந்தப் பெயர்கள் உட்பிரிவுகள் அல்ல. இவர்கள் தம்முள் மண உறவு கொள்ள எவ்விதத் தடையுமில்லை.[3]

## கள்ளர்

தமிழ்நாட்டில் வாழுகின்ற கள்ளரின மக்களைப் பொதுவாக, கள்ளர் என்று அழைத்தபோதிலும் சோழநாட்டுக் கள்ளர்களும் பாண்டிநாட்டுக் கள்ளர்களும் வேறுபட்ட பழக்க வழக்கங்களும் வாழ்க்கை முறையும் கொண்டோராகக் காணப்படுகின்றனர். மதுரை நாட்டுக் கள்ளர் 1901 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்புப்படி 10 அகமணக் கட்டுப்பாடுடைய பிரிவுகளாகப் பதிவு செய்யப்பட்டுள்ளனர். இப்பிரிவுகள் வாழும் நிலப்பகுதியினை அடிப்படையாகக்கொண்டு அமைகின்றன. அவை வருமாறு.

1. மேல்நாடு
2. இறுகுடி நாடு
3. வெள்ளூர் நாடு
4. மல்லாக்கோட்டை நாடு
5. பாகனேரி
6. கண்டர் மாணிக்க நாடு அல்லது அண்ணன்கோட்டை நாடு
7. கண்ட தேவி நாடு
8. புறமலை நாடு
9. தென்னிலை நாடு
10. பழைய நாடு

இப்பிரிவுகள் மேலும் பல புறமணக் கட்டுப்பாடுடைய வகுப்புக்கள் எனப் பிரிக்கப்பட்டுள்ளன. மேல்நாட்டில் வடக்குத்தெரு, தெற்குத்தெரு, மேலத்தெரு என்றும் உட்பிரிவுகள் உள்ளன. சிறுகுடி நாட்டின் உட்பிரிவுகள் ஆண்டி, மண்டை, அய்யன், வீரமாகாளி என்னும் தெய்வங்களின் பெயர்களைத் தாங்கியுள்ளன. வெள்ளூர் நாட்டில் வேங்கைப்புலி, வெக்காப்புலி, சாமிப்புலி, சம்மட்டி மக்கள், திருமான், சாயும் படைதாங்கி என்னும் பிரிவுகள் உள்ளன.

புறமலை நாட்டுக் கள்ளர்கள் பல புறமணக் கட்டுப்பாடுடைய உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளனர். தேவகோட்டைப் பகுதியில் 14 நாடுகள் உள்ளன. இப்பகுதியில் உஞ்சனை, செம் பொன்மாரி, இரவுச் சேரி, தென்னிலை ஆகிய நான்கும் ஒரு குழுவாக அமைந்துள்ளன. திருமணம் தொடர்பான உறவுகளில் இந்த 4 பிரிவுகளும் ஒரே அகமணக் கட்டுப்பாடுடைய பிரிவாக உள்ளன. இவை மேலும் பல கரைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. சிவகங்கையைச் சேர்ந்த நாட்டார் கள்ளர்கள் கிளை என்னும் புறமலைக் கட்டுப்பாடுடைய கிளைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மறவர்களிடையே உள்ளதுபோல பெண்வழிச் சமுதாயம் போல இச்சமுதாயம் அமைகிறது. ஒரு பெண்ணும் அவள் தாய் மாமனும் ஒரே கிளையினராக அமைந்துவிடுவதால் உடன்பிறந்தவள் மகளை மணக்கும் வழக்கம்இல்லாமல் போய்விட்டது.

மேலூர் பகுதியில் உள்ள கள்ளர்கள் அம்பலம் என்ற ஒரே பட்ட முடையவராவர். எனவே, இவர்கள் பட்டப்பெயர் அடிப்படையில் திருமண உறவு கொள்ள இயலாது. எனவே வேறுமுறையைக் கையாள்கின்றனர். புறமலைக் கள்ளர்கள் இங்ஙனமே தேவர் என்னும் ஒரே பட்டமுடையவர் ஆகையினால் பட்டப்பெயர் கொண்டு திருமண உறவு அமையவில்லை. அவர்களுக்குக் கோயில் அடிப்படையிலான பிரிவுகள் திருமண உறவுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ளன.

பாகனேரி

பாகனேரி நாட்டாராகிய கள்ளர்கள் "தாய்வழிக் கிளையினர்". தங்களுக்குரிய உட்பிரிவாகக் 'கிளை' எனும் பிரிவைக் கொண்டிருக்கின்றனர். தாய்வழிப் பிரிவாகக் கொண்டமையால் மாமனை மணக்கும் வழக்கம் இல்லை. 'சொத்துரிமை, தந்தைவழி வந்தாலும் "வாரிசு உரிமை", "தாய்வழியில்தான்" கூறப்படுகிறது. ஒரு பிரிவாகிய 'கிளை'யைச் சார்ந்தவர்கள் அனைவரும் உடன்பிறப்புக்களாகவே கருதப்படுகின்றனர். ஒரு கிளைக்குள் திருமணம் செய்வதில்லை.[4] தற்கால உடலியல் ஆய்வாளர் கூற்றுப்படி மேற்கூறிய முறையால் ஆரோக்கியமான சமுதாயம் உருவாக்கப்படுகிறது. ஒரே இரத்தத் தொடர்புடையாரை மணப்பதால் குறையுள்ள குழந்தைகள் பிறப்பதாகக் கூறுவர்.

இங்ஙனம் தமிழகத்தில் வாழும் பல வகுப்பாரையும் அவர்களிடையே காணப்படும் பிரிவுகளையும் திருமணத்திற்காக அமைத்துள்ள குழுக்களையும் தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை பகுதிகளில் வாழும் கள்ளர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் பெருத்த வேறுபாடு உள்ளமையை அறியமுடிகிறது. இவர்களிடையே காணப்படும் நூற்றுக்கணக்கான பட்டங்கள் இவர்களை ஏனையோரிடமிருந்து தெளிவாகப் பிரித்துக் காட்டுகின்றன. ஒவ்வொரு பட்டம் ஒரு தந்தை வழிக்குழுவாக அமைகிறது. ஒவ்வொன்றும் ஒரு புறமணக்குழுவாக அமைகின்றது. ஒரு பட்டமுடையார் எந்த பட்டத்தில் இருந்தாலும் அவர்கள் யாவரும் தொன்மையான காலத்தில் குறிப்பிட்ட பட்டத்தொடு விளங்கிய ஒரு கிளை வழியிலிருந்து தோன்றிப் பல்கிப் பெருகியதாகக் காண்கின்றனர். எனவே, அவர்கள் யாவரும் உடன்பிறப்பு உறவுடையோராகக் கருதி ஒழுகுகின்றனர். ஒருவருக்கொருவர் முன்பின் அறிமுகமில்லாதவர்களாக இருந்தபோதிலும் தம்முடைய பட்டத்தைக்

கொண்டவர் என அறியும்போது அவர்களிடையே மிக இயல்பான சகோதர உணர்ச்சி ஏற்படுவதைக் காணலாம்.

ஒரு பட்டமுடையார் யாவரும் சகோதரர்கள் என்று கருதப்படுவதால் அவர்களுக்குள் மணஉறவு தடை செய்யப்பட்டுள்ளது. எனவே அவர்கள் வேறு பட்டமுடைய எந்தக் குடும்பத்திலும் பெண் கொள்ளவும் கொடுக்கவும் உரிமை யுடையோராவர். கள்ளர் பகுதிகளில் அமைந்த ஊர்களில் இப்படி மணஉறவு கொள்ளத்தக்க வெவ்வேறு பட்டமுடையவர்கள் தனித்தனி தெருக்களில் வாழ்வதனை இயல்பாகக் காணலாம். எடுத்துக்காட்டாகத் தஞ்சாவூர் மாவட்டம் மன்னார்குடி வட்டம் நெடுவாக்கோட்டையில் நெடுவாண்டார் பட்டமுடையாரும் முனையரையர் பட்டமுடையாரும் மாமன் மைத்துனன் முறையுடையோராவர். இவர்களே பெரும் பான்மையினராக உள்ளனர். இவர்களைப் போலவே தேவர், சோழகர், தொண்டைமான் என்னும் பட்டங்களைக் கொண்ட சிறுபான்மையினர் வாழ்கின்றனர். இவர்கள் நெடுவாண்டார் பட்டமுடையோர்களுக்குப் பெண் கொடுக்க உரிமையுடையோராவர். இதனால் இவர்கள் முனையரையர்களோடு சகோதரர்களாக உறவாடுகின்றனர். அவர்களும் பொது நியதிப்படி முனையரையர்களோடு மணஉறவு கொள்ள வாய்ப்பிருந்தும்கூட அதனைத் தவிர்த்து விடுகின்றனர். இப்போக்கினால் வேறு பட்டமுடையவர்களானாலும் அவர்களைச் சகோதரர்களாகக் கொள்ளும் நிலையும் இப்பகுதிக் கள்ளர்களிடையே காணப் படுகிறது. இதே நிலையை கள்ளர்கள் வாழும் வேறு பகுதிகளிலும் காணலாம்.

சில வேளைகளில் ஒரே பட்டமுடையாரில் சிலரைச் சகோதரர்களாகவும் வேறு சிலரை மாமன் மைத்துநராகவும் கருத வேண்டிய சூழ்நிலையும் அமைந்து விடுகிறது. மேற்கூறப்பட்ட நெடுவாக்கோட்டையில் வாழும் ஒரு முனையரையரும்

ஒரு நெடுவாண்டாரும் அருகிலுள்ள மரவாக்காடு என்னும் சிற்றூரிலுள்ள ஒரு வாண்டையார் குடும்பத்தில் பெண் எடுத்ததால் இருவரும் ஒரே வீட்டின் மாப்பிள்ளை ஆனதனால் சகோதரர் ஆகின்றனர். அவர்களின் பிள்ளைகளும் சிற்றன்னை, பெரியன்னை மக்களாகின்றனர். இந்தச் சூழ்நிலையில் குறிப்பிட்ட இவர்களைத் தவிர ஏனையோரையெல்லாம் மாமன், மைத்துநராகக் கருத வேண்டியுள்ளது. இந்தச் சூழ்நிலை நிலவுவதால் இன்ன பட்டமுடையார் சகோதரர் என்றும் இன்ன பட்டமுடையார் மாமன் மக்கள் உறவுடையவர்கள் என்றும் தெளிவாக அறியமுடியவில்லை.

ஒவ்வொரு கிராமத்திலும் ஒன்றுக்கு மேற்பட்ட பட்டப்பெயர் உடைய குடும்பங்கள் வாழ்வதும் அவர்களுக்குள் மணஉறவு ஏற்படுவதும் கள்ளர் பகுதிகளில் எல்லா இடங்களிலும் காணப்படும் ஒரு நிலையாகும். மன்னார்குடியிலிருந்து மேற்கே ஏறத்தாழ 20 கல் தொலைவிற்கப்பாலுள்ள ஒரத்தநாடு வட்டத்திலுள்ள நெல்லுப்பட்டு கிராமத்தில் மழவராயர் என்னும் பட்டமுடையவர்களே பெரும் எண்ணிக்கையில் வாழுகின்றனர். ஏனைய பட்டமுடைய என்னாட்டுப் பிரியர், பொன்னாப்பூண்டார், ஆர்சுற்றியார், விசயராயர், தஞ்சிராயர், கீருடையார் என்போர் மிகமிகக் குறைந்த எண்ணிக்கையில் வாழ்கின்றனர். இவர்கள் அனைவரும் மழவராயர் தவிர ஏனையோரிடத்துச்சகோதர உறவு உடையவராக விளங்குகின்றனர்.

மேலத் தஞ்சை மாவட்டத்திலுள்ள கள்ளர் பகுதியாகிய 18 பட்டிகளில் அமைந்த உறவு முறைபற்றி ஆராய்ந்த விதருப்பையன் பதினெட்டுப்பட்டிகளிலும் வாழும் மணஉறவுக்குத் தகுதியான குடும்பத்தினர் பற்றிய பட்டியலைத் தருகின்றார். அதனை இங்கு எடுத்துக்காட்டுவது மிகவும் பொருத்தமாகும்.

| வரிசை எண் | கிராமம் | திருமண உறவுடைய பிரிவுகள் |
|---|---|---|
| 1. | செங்கிப்பட்டி | மேற்கொண்டார், கொடும்புராயர், உலகங்காத்தார், சோழகங்கர், பாம்பாட்டியார், பனாவியார். |
| 2. | சானூர்ப்பட்டி | மேற்கொண்டார், கொடும்புராயர். |
| 3. | சின்ன முத்தாண்டிப்பட்டி* | மேற்கொண்டார். |
| 4. | கனம்பட்டி | மேற்கொண்டார், கஸ்தூரியார் |
| 5. | பாளையப்பட்டி | கொடும்புராயர், மேற்கொண்டார், வில்வராயர், பண்ணியமுண்டார், தெத்துவாண்டார். |
| 6. | கரியாப்பட்டி | மேற்கொண்டார், மங்கலார், சோழதரையர், களத்தில் வென்றார், கொடும்புராயர், கட்டை வெட்டியார், சோழகங்க தேவர். |
| 7. | முத்த வீர கண்டியன்பட்டி | கண்டியர், கொடும்புராயர். |
| 8. | ஆவாரம்பட்டி | கண்டியர், கொடும்புராயர், ஒசையார், சடையர், காடவராயர், கட்டை வெட்டியார், பல்லவராயர். |
| 9. | மனையேறிப்பட்டி | கண்டியர், கொடும்புராயர். |
| 10. | நந்தவனம்பட்டி | கண்டியர், பாண்டியராயர், சடையார், மாணக்கர், கொடும்புராயர். |

| வரிசை எண் | கிராமம் | திருமண உறவுடைய பிரிவுகள் |
| --- | --- | --- |
| 11. | புங்கனூர் | கொடும்புராயர், மழவராயர், கண்டியர். |
| 12. | வேலுப்பட்டி | கண்டியர். |
| 13. | வீரமராசன் பேட்டை | மாதுராயர், கொடும்புராயர், முத்தரையர். |
| 14. | கரையான்பட்டி* | கொடும்புராயர். |
| 15. | புதுப்பட்டி | மாதுராயர், நாட்டார், கொடும்புராயர். |
| 16. | மாதுராயன் புதுக்கோட்டை | மாதுராயர், கொடும்புராயர். |

* மணஉறவுடைய பிரிவு இல்லை.

ஒவ்வொரு பட்டமுடையாரும் ஊர்களில் ஒன்று சேர்ந்து ஒரு தெருவாக வாழ்தலைக் காணலாம். சிலபோது வாண்டையார் தெரு, மழவராயர் தெரு, கண்டியன்தெரு, என பட்டப் பெயர்களிலேயே தெருக்கள் அமைவதைக் காணலாம். இவர்களுக்குரிய நிலங்களும்கூட ஒரே பகுதியில் இருத்தலையும் காணமுடிகின்றது.

ஒரே பட்டமுடையார் கரை அல்லது வகையறாக்களாகப் பிரிக்கப் பட்டு ஒவ்வொன்றுக்கும் வகையறாவின் மூத்த ஆண்மகன் தலைவராக இருக்கிறார். இப்படி அமைந்த தலைவர்கள் கரைத் தலைவர் என்று அழைக்கப்படுகின்றனர். ஊரின் திருவிழாக்கள் வழக்கு விசாரணைகள் போன்றவற்றில் இக் கரைத் தலைவர்கள்

பங்குபெறுகின்றனர். இந்த அமைப்பினால் ஒரு பட்டமுடையாரிடத்தில் குழு ஒற்றுமை தோன்ற இடமிருப்பதுபோல, சொத்துக்கள் தொடர்பான முரண்பாடுகள் தோன்றவும் இடமிருக்கின்றது.

கள்ளர் இனத்தவர் வாழும் பகுதிகளின் சிறப்புக்களில் ஒன்று நாட்டமைப்பாகும். இதுபற்றி இவ்வாய்வேட்டின் வேறு பகுதியிலும் பேசப்பட்டுள்ளது.. மதுரை நாட்டிலும் தஞ்சைப் பகுதியிலும் திருச்சிப் பகுதியிலும் காணப்படுகின்ற நாட்டுப் பிரிவுகள் பற்றியும் நாட்டுக் கூட்டங்கள் பற்றியும் கள்ளர் சரித்திரம் வெளியிட்ட ந.மு.வேங்கடசாமி நாட்டார் தெளிவாகக் கூறியுள்ளார். கள்ளர்களிடையே அமைந்த திருமண உறவு பற்றிய ஆராய்ச்சிக்கு இந்த நாடு பற்றிய சிந்தனையும் தேவையாகிறது. ஒவ்வொரு நாட்டிலும் அடுத்தடுத்துள்ள பல சிற்றூர்கள் இணைந்துள்ளன. அவர்கள் யாவருக்கும் ஓர் ஊர் பொது இடமாக அமைகிறது. அவ்வூரிலுள்ள கோயில் அவர்களுக்குப் பொதுத்தலமாகவும் கொள்ளப்படுகிறது. ஒவ்வொரு நாடும் சில கரைகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கரையிலும் சில கிராமங்கள் அடங்கும். ஒவ்வொரு கிராமத்திலும் பல பட்டப்பெயர் உடையவர்கள் வாழுகின்றனர். ஒரே பட்டமுடையார் பல ஊர்களிலும் காணப்படுகின்றனர். இதனால் ஒரு கரையில் பல பட்டமுடையவர்களும் இருக்க வாய்ப்பு ஏற்படுகிறது. அவர்களுக்குள் உறவை வளர்க்க இக்கரையமைப்பு பெரிதும் துணை புரிகின்றது. கோயில் திருவிழாக்களின்போது மண்டகப்படி செய்வது வீதியுலாவின்போது பல்லக்கு சுமத்தல், தேர் இழுத்தல் முதலான அனைத்துக் காரியங்களிலும் ஒருவரோடு ஒருவர் இணைந்து செயலாற்றுவதற்கு இக் கரையமைப்பு உறுதுணை புரிகின்றது. எடுத்துக்காட்டாக காசவளநாடு என்னும் பகுதியைக் காணலாம்.

காசவளநாடு

தமிழ் மக்கள் வாழும் நாடு தமிழ்நாடு எனவும் தமிழகம் எனவும் வழங்கி வருவதுபோன்று தமிழ் மக்களில் கள்ளர்கள் மிக்கு வாழும் நாடு அல்லது பகுதி கள்ளர் நாடு என வழங்குகின்றது. கள்ளர் நாட்டிலும் பல பிரிவுகள் உண்டு. ந.மு.வேங்கடசாமி நாட்டார், 'கள்ளர் சரித்திரம்' என்னும் நூலில் குறிப்பிடும் நாடுகள் நாற்பதாகும்.[5] ஒவ்வொரு நாடு அல்லது நாட்டின் உட்பட்ட பகுதிகளில் பொதுவான ஒரு தலம் இருக்கும் அத்தலத்தில் நாட்டின் பொது வழக்குகள், திருவிழா தொடர்பான கூட்டங்கள் முதலியன நடைபெறும். கரை, அம்பலம், நாட்டாண்மை முதலிய நிலைகளில் முன்னுரிமையும், சிறப்பு செய்தல் முதலிய நிகழ்ச்சிகளும் நடைபெறும்.

இவ்வகையில் காசவளநாடு என்பது மேற்கூறப்பட்ட 40 நாடுகளில் முதன்மையுடையதும் தலைமையுடையதும் ஆகும் என்று கருதப்படுகின்றது. நாட்டின் பொதுத் தலம் காசவளநாடு கோயிலூர் என்பதாகும். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் அகிலாண்ட நாயகி உடனுறை அருள்மிகு செம்புகேசுவரர் ஆகும். இக்கோயிலுக்கு 40 வேலி நன்செய், புன்செய் நிலங்கள் உள்ளன. புன்செய் நிலங்களில் ஆயிரக்கணக்கான மாமரங்களும் ஆல், பலா, முந்திரி முதலிய வேறு மரங்களும் நின்று வருவாய் தருகின்றன. இவ்வாலயத்தில் படியெடுக்கப்படாத கல்வெட்டுக்களும் இருக்கின்றன. ஆண்டு தோறும் பங்குனி மாதம் நடைபெறும் உத்திரத் திருவிழாவிற்கு இந்நாட்டைச் சார்ந்த 18 ஊர்களிலிருந்தும் காவடி, பால்குடம் எடுத்தல், முதலிய திருவிழாவும் பங்குனி உத்திரத் திருவிழாவிற்கு பத்து நாள் முன்பு கொடியேற்றுதல் என்ற நிகழ்ச்சியும் அதனைப் பத்து நாளும் ஒவ்வோர் ஊர் மண்டகப்படியுடன் கூடிய திருவிழா நிகழ்ச்சியும் முக்கரை என்ற பிரிவுடன் மூன்று பிரிவுகளாக இந்நாட்டைச் சேர்ந்த

ஊர்மக்கள் தெற்குக்கரை, நடுக்கரை, வடக்குக்கரை எனப் பிரிந்து ஒவ்வொரு நாளில் ஒரு கரையார் சிறப்பாக வழிபாடு செய்தல் முதலிய நிகழ்ச்சிகளும் நடைபெறும். இவை தவிர, மாதக் கார்த்திகை, வார வழிபாடு முதலிய நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன.

## நாடும் நாட்டுப்பிரிவும்

காசவளநாடு மூன்று பிரிவாக அமைந்துள்ளது. அவை தெற்குக்கரை, நடுக்கரை, வடக்குக்கரை என்ற பெயருடன் விளங்குகின்றன. நாட்டின் பொதுத்தலமாக சிவன்கோயில் அமைந்துள்ள ஊருக்கு கோயிலூர், என்று பெயர்.

## நாட்டிலுள்ள ஊர்ப்பெயர்கள்

காசவள நாட்டிலுள்ள ஊரின் மொத்த எண்ணிக்கை 18 ஆகும். அவை பின்வருமாறு

1. தெக்கூர்
2. பஞ்சநதிக்கோட்டை
3. கருக்காக்கோட்டை
4. ஈச்சங்கோட்டை
5. சேதுராயன்குடிகாடு
6. நடுவூர்
7. வீரங்கொண்டான் குடிகாடு
8. புதுப்பட்டி
9. வேங்கிராயன் குடிகாடு
10. சாமிப்பட்டி
11. காட்டுக்குறிச்சி
12. தொல்லங்கரை
13. புது

14. நெல்லுப்பட்டு

15. ஆழிவாய்க்கால்

16. கொ. வல்லுண்டாம்பட்டு, சூரியம்பட்டி, அதினாம்பட்டு (இவை மூன்றும் கொல்லங்கரையைச் சேர்ந்தவை)

17. கண்டிதம்பட்டு

18. விளார்

என்பனவாகும்.

<u>முதற்கரை அல்லது தெற்குக்கரை</u>

1. தெக்கூர்

2. பஞ்சநதிக்கோட்டை

3. கருக்காக்கோட்டை

4. ஈச்சங்கோட்டை (நடுத்தெரு காடவராயர் வடக்குக்கரை)

5. சேதுராயன்குடிகாடு

6. வீரங்கொண்டான் குடிகாடு

<u>நடுக்கரை</u>

1. நடுவூர்

2. புதுப்பட்டி

3. வெங்கிராயன் குடிகாடு

4. காட்டுக்குறிச்சி

5. சாமிப்பட்டி

வடக்குக்கரை

1. கொல்லங்கரை
2. புதூர்
3. நெல்லுப்பட்டு
4. கொ. வல்லுண்டாம்பட்டி
5. சூரியம்பட்டி
6. அதினாம்பட்டு
7. விளார்
8. கண்டிதம்பட்டு

ஆழிவாய்க்கால் முக்கரையும் கொண்ட ஊராகும். இவை தவிர வலையர்கள் மட்டும் வாழும் நாட்டரக்கோட்டை, நத்தம், கீழாநத்தம் முதலிய ஊர்களும் கோனார், நாடார், வலையர் வாழும் உஞ்சிமாஞ்சோலை, நாடார், வலையர் வாழும் பொட்டுவாச்சாவடி முதலிய ஊர்களும் உள்ளன. இவற்றில் நாட்டரக்கோட்டை, நடுவூரைச் சார்ந்தது. நத்தம், கீழாநத்தம் இரண்டும் ஆழிவாய்க்காலைச் சார்ந்தவை. உச்சிமாஞ்சோலை, பொட்டு வாச்சாவடி இரண்டும் கண்டிதம்பட்டைச் சார்ந்தவை. இவை எல்லாவற்றிற்கும் பொதுத் தலமாக கோயிலூர் விளங்குகின்றது. இவ்வூர்களைத் தனித்தனியே கூட்டினால் 25 ஊர்களாக உயரும்.

இவற்றுள் தெற்குக்கரைக்குத் தலைமை ஊராக தெக்கூரும், நடுக்கரைக்குத் தலைமை ஊராக நடுவூரும், வடக்குக் கரைக்குத் தலைமை ஊராக கொல்லங்கரையும் விளங்குகின்றன.

## ஊரும் பட்டப்பெயர்களும்

### 1. தெக்கூர்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அலங்காரப்பிரியர் | 30 | குடிகள் | பங்காளி முறையினர் உறவுமுறையினர் |
| 2. | மழவராயர் | 25 | " | |
| 3. | காடவராயர் | 2 | " | பங்காளி முறையினர் |
| 4. | கருத்துண்டார் | 4 | " | |
| 5. | தஞ்சிராயர் | 1 | " | |
| 6. | தென்கொண்டார் | 3 | " | |
| 7. | மனவாளர் | 2 | " | |

### 2. பஞ்சநதிக்கோட்டை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | காடவராயர் | 50 | குடிகள் | இவர்கள் காடவராயருக்கு உறவுமுறையினர் |
| 2. | மழவராயர் | 5 | " | |
| 3. | விசயராயர் | 5 | " | |
| 4. | தஞ்சிராயர் | 6 | " | |
| 5. | ஆவத்தியார் | 1 | குடி | |
| 6. | தின்னாப்பிரியர் | 2 | " | |
| 7. | வல்லுண்டார் | 1 | குடி | |
| 8. | சிந்துராயர் (வடக்குக் கரையைச் சார்ந்தவர்) | 1 | " | |
| 9. | இராசாளியார் | 1 | " | |

3. கருக்காக்கோட்டை

| | | |
|---|---|---|
| 1. காடவராயர் | 20 | குடிகள் |
| 2. முனையரையர் | 10 | " |
| 3. கருப்புண்டார் | 4 | " |
| 4. கருத்தண்டார் | 4 | " |
| 5. தென்கொண்டார் | 4 | " |
| 6. சோழகர் | 2 | " |
| 7. கட்கொடையார் | 2 | " |
| 8. தஞ்சிராயர் | 3 | " |
| 9. விசயராயர் | 5 | " |

காடவராயர்களுக்கு முனையரையரும் விசயராயரும் உறவுமுறையினர். ஏனையோர் ஒரு பட்டப் பெயரல்லாத ஏனைய பட்டப்பெயருடையாருக்கு உறவு முறையினர்.

4. ஈச்சங்கோட்டை

| | | |
|---|---|---|
| 1. காடவராயர் | 20 | குடிகள் |
| 2. காலிங்கராயர் | 15 | " |
| 3. விசயராயர் | 10 | " |
| 4. முதலியார் | 4 | " |
| 5. பொன்னாப்புண்டார் | 4 | " |
| 6. மழவராயர் | 1 | குடி |

இவற்றில் முதலியாருக்கு மழவராயரும் பொன்னாப்புண்டாரும் உறவு முறையினர். காடவராயருக்கு முதலியார், காலிங்கராயர், விசயராயர் உறவின்முறையினர்.

5. சேதுராயன் குடிகாடு (காடவராயர் தெரு மட்டும் (வட்டம் ஒரத்தநாடு)

| | | |
|---|---|---|
| 1. | காடவராயர் | 40 குடிகள் |
| 2. | சேதுராயர் | 10 " |

இவர்கள் உறவின் முறையினர்.

6. நடுவூர்

| | | |
|---|---|---|
| 1. | கீருடையார் | 25 குடிகள் |
| 2. | தஞ்சிராயர் | 30 " |
| 3. | தென்கொண்டார் | 10 " |
| 4. | மழவராயர் | 1 குடி |

இவர்கள் ஒருவருக்கொருவர் உறவு முறையினர்.

7. புதுப்பட்டி

| | | |
|---|---|---|
| 1. | வேங்கிராயர் | 6 குடிகள் |
| 2. | தஞ்சிராயர் | 6 " |
| 3. | தென்கொண்டார் | 6 " |
| 4. | வாண்டையார் | 5 " |
| 5. | நரங்கியர் | 2 " |
| 6. | ஆவத்தியார் | 1 குடி |
| 7. | தொண்டமார் | 1 " |
| 8. | அதியமார் | 1 " |
| 9. | கரைமீண்டார் | 1 " |

இவர்கள் ஒருவருக்கொருவர் உறவு முறையினர்.

8. வேங்கிராயன் குடிகாடு

1. வேங்கிராயர் 15 குடிகள்
2. கீருடையார் 5 "
3. தென்கொண்டார் 4 "
4. மன்னையார் 2 "
5. ஆர்சுற்றியார் 2 "
6. தஞ்சிராயர் 2 "

இவர்களில் வேங்கிராயர்களுக்கு கீருடையார், ஆர்சுற்றியார், தஞ்சிராயர் மூவரும் உறவு முறையினர்.

9. காட்டுக்குறிச்சி

| | | |
|---|---|---|
| 1. தஞ்சிராயர் | – | உறவினர் |
| 2. மழவராயர் | | |
| 3. தென்கொண்டர் | – | பங்காளி முறையினர் |
| 4. நந்தியார் | – | பங்காளி முறையினர் |
| 5. தின்னாப்பிரியர் | | |
| 6. அதியமார் | | |

தஞ்சிராயருக்கு மழவராயரும், தென்கொண்டாரும் உறவு முறையினர்.

10. கொல்லாங்கரை

1. தஞ்சிராயர்
2. மங்காத்தேவர்
3. ஆனியார்
4. கருத்தப்பொன்னார்
5. முனையரையர்
6. தேவர்

7. கிளாவர்
8. வன்னியர்
9. மன்னையார்
10. வல்லுண்டார்
11. வேங்கிராயர்
12. காடவராயர்

இவர்களில் தஞ்சிராயருக்கு ஆனியார், முனையரையர், கிளாவர், மன்னையார், வல்லுண்டார், காடவராயர் ஆகியோர் உறவு முறையினர்.

11. புதலூர்

| | | | |
|---|---|---|---|
| 1. | முனையரையர் | 25 குடிகள் | ஒருவருக்கொருவர் உறவுமுறையினர் |
| 2. | அதியமார் | 50 " | |
| 3. | தேவர் | 5 " | |
| 4. | தஞ்சிராயர் | 4 " | |
| 5. | தென்கொண்டார் | 2 " | |
| 6. | தியாகியார் | 3 " | |
| 7. | மழவராயர் | 5 " | |
| 8. | விசயராயர் | 2 " | |
| 9. | இராசாளியார் | 2 " | |
| 10. | வன்னியர் | 1 குடி | |
| 11. | வாண்டையார் | 1 " | |
| 12. | காடவராயர் | 1 " | |

12. ஏழல்ஜப்பட்டி

1. மழவராயர் 100 குடிகள்
2. எண்ணாட்டுப்பிரியர் 8 "
3. சூர்சுற்றியார் 5 "
4. விசயராயர் 3 "
5. தஞ்சிராயர் 2 "
6. வேங்கிராயர் 1 குடி
7. தின்னாப்பிரியர் 1 "
8. அண்டியர் 1 "
9. முதலியார் 1 "

இவர்களில் மழவராயருக்கு மற்ற அனைவரும் உறவு முறையினர். மழவராயர் அல்லாதார் பங்காளி முறையினராக உள்ளனர்.

13. கொல்லங்கரை வல்லுண்டாம்பட்டு

1. தஞ்சிராயர் 10 குடிகள்
2. தென்கொண்டார் 5 "
3. வல்லுண்டார் 10 "
4. நல்லியப்பிரியர் 2 "

இவர்களில் தஞ்சிராயருக்கு ஏனையோர் உறவு முறையினர்.

14. ஜூரியம்பட்டி (கொ. வல்லுண்டாம்பட்டைச் சேர்ந்தது)

1. தென்கொண்டார் 5 குடிகள்
2. வல்லான தேவர் 5 "

15. சூரியம்பட்டி (கொல்லங்கரையைச் சேர்ந்தது)

| | | |
|---|---|---|
| 1. | தஞ்சிராயர் | 5 குடிகள் |

இவர்களில் தென்கொண்டாரும் வல்லாளதேவரும் உறவு முறையினர். வல்லாளதேவரும், தஞ்சிராயரும் உறவு முறையினர் ஆவர்.

16. கண்டிதம்பட்டு

| | | |
|---|---|---|
| 1. | சேனைகொண்டார் | 25 குடிகள் |
| 2. | வன்னியர் | 30 " |
| 3. | நாட்டார் | 3 " |
| 4. | வாண்டையார் | 2 " |
| 5. | வல்லாளதேவர் | 2 " |

இவர்களில் நாட்டார், வன்னியர் ஆகியோருக்கு ஏனையோர் உறவு முறையினர் ஆவர்.

17. சாமிப்பட்டி

| | | | |
|---|---|---|---|
| 1. | காடவராயர் | 15 குடிகள் | (ஈச்சங்கோட்டை) |
| 2. | ஆவத்தியார் | 5 " | (ஆழிவாய்க்கால்) |
| 3. | தென்கொண்டார் | 2 " | (நடுவூர்) |
| 4. | தஞ்சிராயர் | 4 " | (வல்லுண்டாம்பட்டு) |
| 5. | அலங்காரப்பிரியர் | 2 " | (தெக்கூர்) |
| 6. | அதியமார் | 2 " | (புதூர்) |
| 7. | கிளாவர் | 2 " | (கொல்லங்கரை) |

இவர்களில் அலங்காரப் பிரியரும் காடவராயரும் உறவுமுறையினர்.

18. விளார்

| | | |
|---|---|---|
| 1. | மன்னையர் | 8 குடிகள் |
| 2. | விசயராயர் | 4 " |

3. முதலியார் 1 குடி

இவர்கள் ஒருவருக்கொருவர் உறவினர் ஆவர்.

19. ஆழிவாய்க்கால் (ஒரத்தநாடு வட்டம்)

| | | | |
|---|---|---|---|
| 1. | தென்கொண்டார் | 5 குடிகள் | உறவின் முறையினர் |
| 2. | ஆவத்தியார் | 40 " | |
| 3. | காலிங்கராயர் | 20 " | |
| 4. | தேவர் | 10 " | உறவின் முறையினர் |
| 5. | காடவராயர் | 10 " | |
| 6. | பல்லவநாட்டார் | 8 " | |
| 7. | தஞ்சிராயர் | 20 " | உறவின் முறையினர் |
| 8. | தியாகியார் | 2 " | |
| 9. | வீரங்கொண்டார் | 1 குடி | |

20. வீரங்கொண்டான்குடிகாடு

1. வீரங்கொண்டார் 5 குடிகள்
2. ஆர்சுற்றியார் 4 "

இவர்கள் ஒருவருக்கொருவர் உறவின் முறையினர்.

21. கோயிலூர்

| | | | |
|---|---|---|---|
| 1. | கண்டியர் | 3 குடிகள் | உறவு முறையினர். |
| 2. | மழவராயர் | 2 " | |
| 3. | கீருடையார் | 4 " | |
| 4. | தஞ்சிராயர் | 3 " | |
| 5. | காலிங்கராயர் | 1 குடி | |
| 6. | முனையரையர் | 1 " | |

இவர்கள் அனைவரும் வெவ்வேறு ஊர்களிலிருந்து வந்து 
குடியேறியவர்கள்.

ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலுள்ள ஊர்கள் இணைந்து ஒரு குழுமமாகச் செயல்படுவதால் பெரும்பான்மையான மணஉறவுகள் ஒரு நாட்டுக்குள்ளேயே அமையும் நிலை ஏற்பட்டது. இதுவே வழக்கமாகிவிட்ட நிலையில் அடுத்துள்ள நாட்டோடு உறவுகொள்ளுவது பெரும்பாலும் தவிர்க்கப்படுவதும் வழக்கமாக உள்ளது. இவர்களுக்குள் உயர்வுதாழ்வு மனப்பான்மை உருவாவதற்கும் இடமேற்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக காசவளநாடு 18 கிராமங்களைக் கொண்டு அமைந்துள்ளது. இவர்கள் அடுத்துள்ள கோனூர் நாடு, கீழ்வேங்கை நாடு முதலியவற்றோடு மணஉறவு கொள்வதைப் பெரும்பாலும் தவிர்க்கவே விரும்புகின்றனர். இங்ஙனமே ஆற்றுப்பாய்ச்சல் மிக்க வளமான பகுதிகளில் வாழும் கள்ளர்களுக்கும் மேட்டுப்பாங்கான பகுதிகளில் வாழும் கள்ளர்களுக்கும் இடையே மணஉறவு ஏற்பட அண்மைக்காலம் வரை மிகுதியான வாய்ப்பில்லை. காரணம் இரு பகுதிகளுக்குமிடையே அமைந்த பண்பாட்டு வேற்றுமையே ஆகும். காவேரியும் அதன் கிளையாறுகளும் பாய்ந்து வளங்கொழிக்கும் பகுதி பாடல் பெற்ற சைவ வைணவ தலங்களையும் பிராமணக் குடியேற்றங்களையும் கொண்டு பெரிதும் வைதீகச் சார்புடைய பண்பாட்டின் தாயகமாக விளங்குகிறது. ஆனால் மேட்டுப்பகுதி வைதீகப் பண்பாட்டிற்குப் பெரிதும் ஆட்படாமல் பழைய பழக்க வழக்கங்களைப் போற்றிக் காத்து வருகின்றது. எனவே ஒரே இனமக்கள் — ஒரே பட்டப்பெயருடைய மக்கள் இவ்விரு பகுதிகளில் வாழ்ந்தாலும் தொடர்பின்மை காரணமாக ஏறத்தாழ அயலவரைப் போலவே வாழும் நிலை அமைந்தது. கல்வி வளர்ச்சியும் அதனால் ஏற்பட்ட சமுக, பொருளாதார மாற்றமும் அண்மைக்காலமாக இந்தத் தடைகளை நீக்கி மணஉறவுகள் ஏற்பட வழி விட்டிருக்கின்றன.

ஒவ்வொரு நாட்டிலும் சில பட்டமுடையார் எண்ணிக்கையில் பெரும்பான்மையுடையவராயும் வேறு சிலர் சிறுபான்மையுடையவராயும் இருத்தலைக்

காணமுடிகிறது. இதனால் பெரும்பான்மையான பட்டமுடையார்க்கு சமூகத்தில் முதன்மை ஏற்பட வாய்ப்பு ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக மேலவைத் தஞ்சைப் பகுதியிலுள்ள பதினெட்டுப் பட்டிகளில் மேற்கொள்ளப்பட்ட ஆய்விலிருந்து மேற்கொண்டார் பட்டமுடையாரும் கொடும்புராயர் பட்டமுடையாரும் ஏனையோரினும் எண்ணிக்கையில் மிகுதியாக உடையவர் எனக் கண்டறியப்பட்டுள்ளது. இப்பெரும்பான்மை காரணமாக இவ்விரு பட்டமுடையாரிடையே ஆதிக்கப்போட்டி ஏற்பட்டதை ஆய்வாளர் வி.கருப்பையன் சுட்டிக்காட்டியுள்ளார்.

பெரும்பான்மை காரணமாக ஒரு பட்டமுடையர் தலைமை பெற வாய்ப்பளிப்பதை இந்த ஆய்வு வெளிப்படுத்துவதுபோலப் பட்டப் பெயர்களின் பரவலை அறிந்துகொள்ளவும் அதனால் சிலமுடிவுகள் பெறவும் உதவுகின்றது. பதினெட்டுப்பட்டிகளில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வின்மூலம் ஏறத்தாழ எல்லா ஊர்களிலும் கொடும்புராயர் பரவி வாழ்வது அறியமுடிகின்றது. இவர்கள் எண்ணிக்கையில் மிகுந்துள்ளனர். செல்வாக்கு உடையவர்களாகவும் காணப் படுகின்றனர். புதுக்கோட்டைப் பகுதிக்கு அண்மையில் கொடும்பாளூருக்கு அண்மையில் இவர்களின் வாழ்விடம் அமைந்துள்ளது. இச்சூழலை எண்ணுகையில் கொடும்பாளூர் அரையர் என்னும் வேளிர் பரம்பரையினர் இங்கு பரவியுள்ளனர் என்ற முடிவுக்கு வரவேண்டியுள்ளது.

இந்த ஆய்வில் மேற்கொண்டார் என்னும் பட்டமுடையார் செங்கிப்பட்டி, கனம்பட்டி, சானூரப்பட்டி, சின்ன முத்தாண்டிப்பட்டி, காரியாப்பட்டி, பாலையப்பட்டி, என்னும் அடுத்தடுத்துள்ள ஊர்களில் வாழ்வது கண்டறியப்பட்டுள்ளது. கனம்பட்டி ஒரு சமீனாக விளங்கியுள்ளது. மேற்கொண்டார் பட்டம் கோனேரின்மை கொண்டார் என்னும் சோழமன்னன் பட்டத்தின் திரிபாகக் கருதப்படுகிறது. இவர்களும் கொடும்புராரும் செல்வாக்குப் பெற்றிருப்பதைக்

காணும்போது இவர்களின் பழைய வரலாற்றையும் தொடர்பு படுத்திக் காணமுடிகின்றது.

கண்டியர் என்னும் பட்டமுடையார் ஆவாரம்பட்டி, முத்துவீர கண்டியர்பட்டி, நந்தவனப்பட்டி, புங்கனூர், வேலுப்பட்டி, மனையேறிப் பட்டி என்னும் அடுத்தடுத்த ஊர்களிலும் வாழ்வது கண்டறியப்பட்டுள்ளது. கண்டியன் பட்டி இப்பகுதியில் இருப்பதால் இது அவர்கள் குடியேறிய முதலிடம் என்றும் அங்கிருந்து அடுத்தடுத்துப் பரவினர் என்றும் முடிவு செய்யமுடிகிறது. இங்கிருந்து பல கல் தொலைவிலுள்ள எடமேலையூரில் கண்டியன் தெரு என்னும் ஒரு பகுதி உள்ளது. வேறு பல ஊர்களிலும் இவர்கள் காணப்படுகின்றனர். மேற்கிலிருந்து இவர்கள் கிழக்கே பரவினர் என்பதை இது காட்டுகிறது எனலாம்.

தொகுப்புரை
--------

1. இந்த இயலில் ந.மு.வேங்கடசாமி நாட்டார், மு.சுவாமிநாத மாதவராயர் கண்டறிந்து வெளியிட்ட பட்டப்பெயர்களின் அளவு சுட்டப் பட்டுள்ளது.
2. ஆய்வாளரால் புதுக்கோட்டைப் பகுதியில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட பட்டங்கள் சுட்டப்பட்டுள்ளன.
3. கள்ளர், மறவர், அகம்படியர், வெள்ளாளர், வன்னியர், செட்டியார், கவுண்டர் ஆகியோரின் உட்பிரிவுகளும் மணஉறவுகளும் சுட்டப்பட்டுள்ளன.
4. கள்ளர் இனத்தாரின் சிறப்பு வாய்ந்த புறமணக்குழு சுட்டப்பட்டுள்ளது.
5. பதினெட்டுப்பட்டிக் கள்ளரின் மணஉறவு சுட்டப்பட்டுள்ளது.
6. சில குறிப்பிட்ட பகுதிகளுக்கு உள்ளேயே மணஉறவு நிகழ்வது சுட்டப்பட்டுள்ளது.
7. காசவளநாட்டு அமைப்பும், மணஉறவும் காட்டப்பட்டுள்ளது.

## சான்றெண் விளக்கக் குறிப்புக்கள்

1. National Seminar on Maravar Community Seminar Papers on 3rd,4th June 1992.

2. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்திய குலங்களும் குடி, ப.8.

3. நேர்காணல், ஆறு இராமநாதன் தமிழ்ப் பல்கலைக்கழகம், நாள்: 15.10.1992.

தியாகராசன் மேலப்பெரும்பள்ளம், நாள்: 20.10.1992.

4. உ. கஸ்தூரி காந்தி, நாட்டார் வாழ்வியலும் பண்பாடும், ப.34.

5. ந.மு. வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், பக்.74-75.

பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் எப்பொழுதும் முரண்பாடு இருப்பதை அறியமுடிகிறது. இதனாலேயே பண்டைய இலக்கண ஆசிரியராம் தொல்காப்பியர் விதிகள் அமைக்கும்போது உலக வழக்கிற்கு உரியன என்றும் செய்யுள் வழக்கிற்கு உரியன என்றும் இருவேறு நிலையில் விதிகளை அமைத்துக் கூறுகிறார். இவ்வாறே ஆதன், பூதன் முதலான சொற்களோடு தந்தை என்னும் சொல் புணர்கையில் ஏற்படும் மரூஉப் புணர்ச்சியையும் அவர் சுட்டிச் செல்கின்றார்.[1] மரூஉ மொழிக்கெனத் தனிவிதி அமைக்க வேண்டிய தேவை ஏற்பட்டமையை எண்ணிப் பார்க்கையில் அது மொழியில் இயல்பாக அமையும் என்று அறியமுடிகின்றது. மக்கள் விரைவு காரணமாகவும் எளிமை காரணமாகவும் முயற்சிச் சுருக்கம் கருதியும் பிற காரணங்களுக்காகவும் சொற்களைக் கூட்டியும் குறைத்தும் வழங்குவதாலேயே மொழிகளில் திரிபு ஏற்படுகின்றன. இலக்கண ஆசிரியரும் பிற்கால மொழியியல் அறிஞர்களும் சொல்லில் ஏற்படுகின்ற திரிபுகளை அவற்றின் தன்மை நோக்கி வகைப்படுத்திக் காண்கின்றனர். தெளிவாகப் பெயர்ச்சொற்களை உச்சரிக்காத காரணத்தினால் அவற்றின் உண்மையான பொருள்களை அறவே விளங்கிக் கொள்ளஇயலாத நிலை ஏற்பட்டது. ஊர்ப்பெயர்களுக்கும் பட்டப்பெயர்களுக்கும் இக்கருத்து மிகவும் பொருந்தும். தமிழ் மக்கள் ஊர்ப் பெயர்களைத் தெளிவாக உச்சரிக்கத் தவறியமையால் அவற்றின் தோற்றத்திற்கான அடிப்படைகள் மறக்கப்பட்டு அப்பெயர்கள் சிறப்பை இழந்துவிட்டமையை அறியமுடிகின்றது. எடுத்துக்காட்டாகப் பலவற்றைக் கூறலாம். கண்டராதித்த சோழபுரம் கண்டாச்சிபுரமாகவும், செம்பியன் மாதேவி செம்புவமதையாகவும், சுந்தரக்கோட்டை சொன்ற கோட்டையாகவும், பொன்வேய்ந்த நல்லூர் பொம்மாச நல்லூராகவும், சந்திரலேக சதுர்வேதி மங்கலம் செந்தலையாகவும், மழவராய நல்லூர் மலானூர் ஆகவும் திரிந்து

வழங்குதலைக் காணலாம். இத்திரிபுகளை நீக்கி உண்மை கண்டறிய வேண்டும் என்னும் நோக்குடைய மக்கள் சிலர் தம் மனம்போன போக்கில் விளக்கம் தருதலையும் காணமுடிகிறது. பராந்தக சோழன் தில்லைச் சிற்றம்பலத்துக்குப் பொன்ஒடு வேய்ந்ததன் விளைவாக அந்த நினைவைப் போற்றும் வண்ணம் ஏற்பட்ட ஊரே பொன்வேய்ந்த நல்லூ ர் ஆகும். இது பொம்மாச நல்லூ ர் என்று வழங்கக் கண்ட யாரோ ஒருவர் இதனைப் பொன்மான் மேய்ந்த நல்லூ ர் எனத் திருத்தி மாரீசன் பொன்மான் வடிவில் வந்தபோது அந்த இடத்தில்தான் உலவினான் என்றும், இராமன் மானைத் தொடர்ந்து சென்றபோது வலப்பக்கமாக ஓடிய இடமே வலங்கைமான் என்றும் விளக்கம் தந்துள்ளார். இது உண்மை வரலாற்றுக்கு ஊறு விளைவிக்கிறது என்பதில் ஐயமில்லை. இங்குக் கூறப்பட்டது கள்ளர்களுக்கு வழங்கும் பட்டப்பெயர்களுக்கும் பொருந்துவதாகும். உண்மையறியாத மக்கள் திருத்தமின்றிக் கையாண்டு வருவதன் காரணமாக வரலாற்றுச் சிறப்புமிக்க பட்டப்பெயர்கள் பல உருச்சிதைந்து பொருளறியாத நிலை ஏற்பட்டுள்ளது. எனவே பட்டப்பெயர் பற்றிய ஆராய்ச்சி செய்வார் முதற்கண் இவற்றின் திரிபுகளைக் கண்டறிந்து உண்மை வடிவத்தை உருவமைப்பது கடமையாகிறது. இவ்வியலில் இங்ஙனம் உருமாறி வழங்கும் பல பட்டப்பெயர்களை இனங்கண்டு அவற்றின் உண்மை வடிவங்களைக் கண்டறிந்து விளக்க முயற்சி மேற்கொள்ளப் படுகிறது.

இவ்வியலில் கள்ளர் பட்டப்பெயர்களில் உருவம் திரிந்தவையாக அமைந்த அனைத்துப் பட்டப் பெயர்களையும் விளக்குவது நோக்கமன்று. விளக்கம் கூறுவதற்கு வாய்ப்புத் தரும் பட்டப்பெயர்கள் மட்டுமே இங்கு அகர வரிசையில் ஆராயப்படுகின்றன. காரணம் கூறமுடியாத பட்டப்பெயர்கள் பல காணப்படுகின்றன. இவற்றை வருங்காலத்து ஆராய்ச்சியாளர்களின் பார்வைக்கு விட்டுவிடுவதைத் தவிர வேறு வழி புலப்படவில்லை. அத்தகைய சில பட்டப் பெயர்கள் வருமாறு.

1. அசையாத்துறையார்
2. அஞ்ஞுண்டார்
3. அரியபிள்ளை
4. ஆச்சராயர்
5. இராங்கிப் பீலியர்
6. கிளியினார்
7. கையராயர்
8. கோறர்
9. சவளியார்
10. சாணார்
11. சுண்டையார்
12. செப்பிழார்
13. சோமரசர்
14. தாளிதியார்
15. திருக்காட்டியார்
16. தெத்து வென்றார்
17. தேசிராயர்
18. தேவாண்டார்
19. நாய்க்காடியார்
20. நெடுத்தார்
21. நெறிமுண்டார்
22. புவட்டுவார்
23. பிச்சாடியார்
24. பிலியராயர்
25. பீலிமுண்டார்
26. புட்டில் கழிந்தார்
27. பேதரையர்
28. போய்ந்தார்
29. மயிலாண்டார்
30. மட்டையர்
31. மாம்பழத்தார்
32. மான்சுத்தியார்
33. முஞுக்காட்டியார்
34. மூங்கிலியார்
35. மெனக்கடார்
36. மொட்டத்தேவர்
37. வங்கணர்
38. வாச்சார்
39. வாண்டாப்பிரியர்
40. வீசண்டார்
41. சன்னாடர்
42. சிங்கப்பிலியார்
43. சிறுமாடர்
44. சேண்டப்பிரியர்
45. சேப்பிழார்
46. சோணாருண்டார்
47. சோதிரையர்
48. தாக்கலிக்கியார்
49. தாளாதியார், தாளிதியார்
50. பசும்பிடியார்
51. பன்னியமுண்டார்
52. பதுங்கராயர்
53. பத்தாளர்

54. பம்பாளியார்

55. பன்னிகொண்டார்

56. பன்னையார்

57. பாப்புரெட்டியார்

58. புண்ணாக்கர்

59. புள்ளராயர்

60. போர்பொறுக்கியார்

61. மாளிகற்றியார்

62. முண்டார்

63. முதலியார்

64. வல்லாளதேவர்

இனி, விளக்கம் கூற வாய்ப்பளிக்கத்தக்கனவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டப்பெயர்கள் அகர வரிசையில் தனித்தனியே விளக்கம் பெறுகின்றன.

1. அடைக்கப்பட்டார்

இப்பட்டப்பெயரை மேற்போக்காகக் காணும்போது யாதோ சூழ்நிலையில் சிறையில் அடைக்கப்பட்ட ஒருவரைச் சுட்டுவதுபோல தோன்றுகிறது. சிறைப்படுவது என்பது ஒருவர் பெருமையோடு சொல்லிக் கொள்ளத்தக்க சிறப்பன்று. எனவே இதில் திரிபு இருப்பதாகச் சிந்திக்க வேண்டியுள்ளது. தமிழில் இரட்டித்து வரும் றகர ஒற்று டகரமாக மாறுவது இயல்பாகும். எடுக்காட்டாக பற்று-பட்டு, செங்கழு நீர்பற்று-செங்கற்பட்டு, இவ்வடிப் படையில் பட்டார் என்பதைப் பற்றார் என்பதன் திரிபாகக் கொள்ளலாம். அடைக்க என்பது அடைக்காய் (பாக்கு) என்பதன் திரிபாகக் கொண்டால் திருக்கோயிலுக்கு நாள் வழிபாட்டிற்கு நாள்தோறும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் பாக்கு அளிப்பதற்காக மானியம் பெற்றவருக்கு வழங்கிய பெயர் என்று இதற்கு விளக்கம் காணமுடிகிறது. கோயில் பற்று கோயிலுக்குப் பற்று-மானியமாகக் கொடுக்கப்படும் நிலம்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சை மாவட்டம், திருவையாறு வட்டத்திலுள்ள திருச்சினம்பூண்டி, திருச்சி மாவட்டம் கிளியூர் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 2. அடவளச்சார்

இச்சொல் அடைவளைந்தார் என்பதன் திரிபு ஆகும். அடை என்னும் சொல்லுக்கு நிலம் என்பது பொருளாகும். நஞ்சை நிலம் தண்ணடை எனப் புறநானூற்றில் சுட்டப்படுகிறது.[2] வளைவதாவது சுற்றிவருவது. எனவே நிலத்தைச் சுற்றிப் பார்த்துக் கண்காணிப்பவர் என்றோ நிலத்தை மானியமாக வழங்குமுன் அதன் எல்லையை வரையறுத்தவர் என்றோ கொள்ளலாம். யானையின் மீது அமர்ந்து நிலத்தை வரையறுப்பவர் (பிடி சூழ்தல்) என்றும் கொள்ளலாம்.

## 3. அஞ்ஞூற்றுப் பிரியர்

இச்சொல் ஐந்நூற்றுப்பிரியர் என்பதன் திரிபாகக் கொள்ளத்தக்கது. சோழர்காலக் கல்வெட்டுக்களில் எண்ணிக்கையின் அடிப்படையில் அமைந்த பெயர்கள் பல காணப்படுகின்றன. இப்பெயர்கள் இடப்பெயர்களாகவோ ஆட்பெயர்களாகவோ அமைகின்றன. குழுவின் பெயராக அமைதலும் உண்டு. இரட்டபாடி ஏழரை இலக்கம், முந்நீர் பழந்தீவு பன்னீராயிரம், நானா தேசிய திசையாயிரத்து ஐந்நூற்றுவர், எண்ணாயிரவர் என்பன அவற்றுள் சிலவாகும். ஈராயிரவன் பல்லவராயன் என்றொரு தலைவன் பேசப்படுகின்றான். இத்தகைய சோழர் காலத்துப் பெயர்களின் சாயலில் விளங்கும் இப்பெயர் ஐந்நூற்றுவர் என்னும் பெயருடைய ஒரு குழுவினருக்குத் தலைவனாகவோ பாதுகாவலனாகவோ இருந்திருக்க வேண்டும்.

4. அத்திரியர்

அத்திரி என்பது கோவேறு கழுதையாகும். பெருங்குடிப் பிறந்தோர் பயன்படுத்திய காரணத்தினால்தான் அது 'கோவேறு கழுதை' எனப்பட்டது. (கோ-தலைவன், அரசன்) பெருங்குடி வணிகனாகிய கோவலன் அத்திரியில் சென்றமைச் சிலம்பு குறிப்பிடுகின்றது.[3] சங்கப்பாடல்களிலும் தலைவன் கோவேறு கழுதையில் சென்ற குறிப்புக் காணப்படுகின்றது.[4] இவ்வடிப்படையில் காணும் போது அத்திரியில் ஊரும் தகுதிபெற்ற ஒருவருக்கு வழங்கப்பட்டதாக இப் பட்டத்தைக் கொள்ள முடிகின்றது.

5. அயிரப்பிரியர்

இச்சொல்லை அயிரைப்பிரியர் என்றோ ஆயிரப்பிரியர் என்றோ திருத்தி அமைக்கலாம். அயிரை என்பது ஒருவகை மீன். அயிரை மீனை விரும்பி உண்பவர் என்று கொள்வது அவ்வளவு பொருத்தமாகத் தெரியவில்லை. 'உருகெழு மரபின் அயிரை பரைஇ' என வரும் சங்க நூல் குறிப்பால் அயிரை என்பது கொற்றவையின் பெயர்களில் ஒன்று என்பது தெரிகிறது.[4அ] எனவே காளிதேவிக்கு அன்பர் என்று சொல்ல இடமுண்டு என்றாலும் கல்வெட்டுக்களில் இடம்பெறுகின்ற பெயர்களை ஒட்டிக் காணும்போது ஐந்நூற்றுப்பிரியன் என்பதுபோல் ஆயிரப்பிரியன் என்பது பொருத்தமாகத் தோன்றுகிறது. இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் திருச்சிமாவட்டம் நாவல்பட்டு முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

6. அருமநாட்டார்

கள்ளர் நாடுகளுள் ஒன்றாக அருமைநாடு என்பது சுட்டப்படுகிறது. எனவே அருமநாட்டார் என்னும் சொல்லை அருமைநாட்டார் என்பதன் திரிபாகக் கொள்ள இடமுண்டு. எனினும் முதலாம் இராசேந்திர சோழன் வென்ற நாடுகளில் ஒன்றாக அருமணதேசம் சுட்டப்படுதலையும் அவன் வென்ற நாடுகள் பலவற்றின் அடிப்படையில் பல பட்டப்பெயர்கள் வழங்குதலையும் காணும்போது

இச்சொல் அருமண நாட்டார் அதாவது அருமண நாட்டை வென்று அகப்படுத்தியவர் என்று பொருள்படுவதாகக் கொள்ளலாம். ஆனால் இத்தகைய பட்டம் எதுவும் கல்வெட்டுக்களில் இடம்பெறவில்லை.

### 7. ஆதாழியார்

'ஆதாழி' என்பதோடு 'ஆர்' விகுதி சேர்ந்து அமைந்ததுபோல் இச்சொல் காணப்படினும் ஆதாழ் என்னும் பெயர் யாண்டும் காணப்படவில்லை. ஆனால் அதழி என்பது ஒரு கற்றத்தின் பெயராகவும் 'அதளை' என்பது ஒரு நாட்டின் பெயராகவும் இடம்பெறுகின்றன.[5] எனவே அதழியார் அல்லது அதளையார் என்பவற்றின் திரிபாக இப்பட்டத்தைக் கொள்ளலாம்.

### 8. ஆலம்பிரியர்

இச்சொல்லைத் திரிபில்லாத பெயராகக் கொண்டால் (ஆலம்-நஞ்சு) ஆலம் பிரியர் எனப் பிரிக்க வேண்டும். இதற்கு நஞ்சுண்பதில் விருப்பமுடையவர் என்று பொருள் கொள்ள வேண்டும். இப்பொருள் பொருத்தமாகப்படவில்லை. ஆலன் பிரியர் எனக்கொண்டால் சிவபெருமானிடத்தில் அன்புடையவர் எனப் பொருள்படும். ளகரம், லகரமாகப் பேச்சில் திரிபது இயல்பானது. எனவே ஆளல் பிரியர் என்பது ஆளப்பிரியராகிப் பின் ஆலம் பிரியர் எனத் திரிந்திருக்கலாம். ஆட்சிப்பிரியர் என்னும் பட்டத்தோடு இதனை ஒப்புநோக்கலாம். இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டம் சம்பட்டி விடுதி, மேலப் பொன்னன் விடுதி, கீரனூர், தஞ்சாவூர் மாவட்டம் மன்னை வட்டத்தில் எடமேலையூர், வெட்டிக்காடு, பருத்திக்கோட்டை, காரக்கோட்டை முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

### 9. இடங்காப்பிரியர்

இப்பட்டத்தின் முற்பகுதியில் திரிபு ஏற்பட்டுள்ளதாகத் தெரிகின்றது. ஏனெனில் இடங்கா என்பது எப்பொருளையும் விளக்கவில்லை. கல்வெட்டுக்களில்

வலங்கை, இடங்கை சாதியாரைப் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. எனவே இடங்கை பிரியர் என்று கொண்டால் இடங்கைச் சாதியினருக்கு விருப்பமானவர் அல்லது பாதுகாப்பானவர் என்று கொள்ள இடம் இருக்கிறது.

## 10. இருங்களார்

இதனை இருங்கள்+ஆர் எனப் பிரித்தால் முற்பகுதிக்குப் பெருங்கள் எனப் பொருள் கொள்ள வேண்டும். அவ்வாறெனில் மிகுதியான கள்ளையுடையவர் என்று பொருள் கொள்ளலாம். கள்ளை மிகுதியாகக் கொண்டிருத்தல் பெருமைக் குரியதாகச் சங்க இலக்கியத்தில் பாராட்டப்படுகிறது. என்றாலும் இருங்கோவேள் ஆர் எனப் பிரித்தால் இருங்கோவேளிர் அல்லது இருக்கு வேளிர் தொடர்பை இப்பட்டம் வெளிப்படுத்துவதாகக் கொள்ளலாம். புதுக்கோட்டைப் பகுதியில் வேளிர் ஆண்டனர் என்பதும் அப்பகுதி பன்னெடுங்காலமாகக் கள்ளர் இனத்தாரோடு தொடர்புகொண்டது என்பதும் அறியப்படுதலால் இரண்டாவது விளக்கமே பெரிதும் ஏற்புடையதாகத் தோன்றுகிறது. இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டம் கல்லாலங்குடி, ஆலங்காடு, பள்ளத்து விடுதி, தஞ்சாவூர் மாவட்டம் மன்னை வட்டத்திலுள்ள நறுவழிக்களப்பான், கோயில்பத்து முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 11. ஈங்கொண்டார்

இப்பட்டத்தில் முற்பகுதி 'ஈம்' என்பது பொருத்தமில்லை. இச்சொல் ஈழம் என்பதன் திரிபு என்பது பொருத்தமானது. கள்ளருக்கும் ஈழத்திற்கும் உள்ள உறவை ஈழத்துரையர், ஈழமுண்டோர் என்னும் பிறபட்டங்களும் உணர்த்துவதால் ஈழம் கொண்டார் என்பதே சரியானதாகத் தோன்றுகிறது.

## 12. உத்தமுண்டார்

ஈமுமுண்டார், கொல்லமுண்டார் என்னும் பட்டங்களை ஒத்தது உத்தமுண்டார் ஆகும். இதன் பின்னொட்டு 'உண்டார்' எனக் கொண்டால் கைப்பற்றியவர் என்று பொருள் கொள்ளலாம் அல்லது உண்டார் என்பதைக் 'கொண்டார்' என்பதன் திரிபாகக் கொண்டாலும் இப்பொருளே தோன்றும் அவ்வாறெனில் முன்னொட்டினை ஒரு நாட்டுப் பகுதியின் பெயராகக் கொள்ள வேண்டும். ஆனால் உத்தம் என்னும் பெயரில் ஒரு நாடும் இல்லை. இதனை உத்தரம் என்னும் வடசொல்லின் திரிபாகக் கொண்டால் வடநாட்டை வென்றவர் அல்லது கைப்பற்றியவர் எனப் பொருள்படும். இல்றேல் 'யுத்தம்' என்னும் வடசொல்லின் திரிபாகக் கொண்டால் போரோடு தொடர்புடைய பட்டமாகவும் விளக்கமளிக்கலாம். யுத்தப்பிரியர் என்னும் பட்டத்தோடு இதனை ஒப்பு நோக்கலாம். இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் இராப்பூசல், மங்கலத்துப்பட்டி, அண்டக்குளம் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 13. எண்ணாட்டுப் பிரியர்

இப்பட்டப்பெயரில் ஒரு நாட்டின் பெயர் சிறப்புக் கூறாக அமைந்துள்ளது. ஆனால் எண்ணாடு என்று ஒரு நாட்டிற்குப் பெயர் இருந்ததாக அறிய முடியவில்லை. எனினும் எட்டு நாடுகளுக்கு விருப்பமான தலைவனாக இருந்த ஒருவனுக்கு இப்பெயர் வழங்கியிருக்கக்கூடும். அவ்வாறெனில் இது திரிபுப்பெயரென்று கொள்ளத்தக்கதன்று. ஆனால் எயில் நாட்டுப்பிரியர் எனக் கொண்டால் இதனைத் திரிபுப் பெயராகக் கொள்ள இடமுண்டு. எயிற்கோட்டம் என்பது தொண்டை நாட்டில் பண்டைநாட்களில் நிலவிய 24 கோட்டங்களுள் ஒன்றாக இருந்தது என்பதைக் கொண்டும் பல்லவரோடு தொடர்புடைய

பல பட்டப்பெயர்கள் கள்ளர்களுக்கு வழங்குதலைக் கொண்டும் காண்கையில் இப்பின்னைய விளக்கம் பொருத்தமானதாகவே தோன்றுகிறது. இப்பட்ட முடையார் தஞ்சாவூர் மாவட்டம் நெல்லுப்பட்டில் வாழுகின்றனர்.

## 14. எத்துப்பிரியர்

இப்பட்டப்பெயர் எத்தியப்பிரியர் என்றும் எத்திரியப்பிரியர் என்றும் வழங்குகின்றது. எத்து, எத்திய, எத்திரிய என்ற மூன்றனுள் பின்னை இரண்டும் பெயரெச்சங்களாக அமைய முன்னது வினையடியாக அமைகிறது. 'எத்து' என்னும் சொல்லுக்கு ஏமாற்று என்று பொருளாகும். இப்பொருளைக் கொண்டால் இஃதொரு மாண்புடைய பட்டமாகக் கருதத்தக்கது அன்று. எனவே, துறவிகளுக்கு விருப்பமானவர் அல்லது துறவிகளிடத்து அன்பு பூண்டவர் என்று பொருள்தரும் யதிப்பிரியர் என்பதே பின்னர் எதுப்பிரியர் ஆகிப் பின் எத்துப்பிரியர் ஆகி மேலும் திரிந்து, எத்திப்பிரியர், எத்திரிப்பிரியர் என்று ஆகியிருக்க இடமுண்டு. இராமானுசருக்கு உரிய 'யதிராசர்' என்னும் பெயர் மக்கள் வழக்கில் எத்திராசன் என மருவி வழங்குவதைக் கருத்தில் கொள்ளலாம்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டை வட்டத்தில் வடக்குக்கோட்டை, மன்னை வட்டத்தில் பெருக வாழ்ந்தான், குடவாசல் வட்டத்தில் கமுகக்குடி முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 15. எத்தொண்டார்

இப்பட்டத்தின் பின்னொட்டினைத் தொண்டார் என்று கொண்டாலும் முன்னொட்டினைச் சரியாக விளங்கிக் கொள்ள முடியவில்லை. இச்சொல்லில் முற்பகுதியிலும் பிற்பகுதியிலும் திரிபு ஏற்பட்டுள்ளதாகத் தெரிகின்றது. 'ஏத்துண்டார்' அதாவது பாராட்டுப் பெற்றவர் என இருந்தது திரிந்து இவ்வாறு அமைந்தது எனக் கொள்ளலாம். இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனத்தவர் திருச்சி மாவட்டம் நடராசபுரத்தில் வாழுகின்றனர்.

## 16. ஒநாயர்

இதன் பின்பகுதியை 'அர்' என்னும் மரியாதைப் பன்மை விகுதியாகக் கொண்டால் ஒநாய் என்பதே மிஞ்சும். இப்படி ஒரு பட்டம் வழங்கியிருக்க முடியாது. எனவே இதனைத் திரிபுப் பெயராகவே கொள்ள வேண்டும். ஒய்மான் அரையர் என்பது ஒநாயர் என்று திரிந்திருக்க இடமுண்டு. ஒய்மா நல்லியக்கோடன் வேலூர், ஆமூர், கிடங்கில் முதலிய பகுதிகளை ஆண்டான் என்பது வரலாறு. அவன் நாடு ஒய்மா நாடாகும். இந்த நாட்டுக்கும் கள்ளர் இனத்தாருக்கும் உறவுண்டென்பது ஒய்மாந்தலையர் என்னும் பட்டத்தால் உறுதியாகிறது. இப்பட்டமே ஒந்தரையர் என்றும் திரிந்து வழங்குகின்றது.

இன்று ஒந்தரையர் பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் சம்பட்டி விடுதி, ஒத்தக்குடிப்பட்டி, குலவாய்ப்பட்டி, அரையப்பட்டி, வெண்ணாவல்குடி, தீத்தானிப்பட்டி, மேலப்பொன்னன் விடுதி, தஞ்சாவூர் மாவட்டம் மன்னை வட்டத்தில் பைங்காநாடு, வடுவூர், ஒரத்தநாடு வட்டத்தில் கண்ணுகுடி, பட்டுக்கோட்டை வட்டத்தில் நம்பிவயல் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 17. கதவாடியார்

இச்சொல்லைக் கதவாடி+ஆர் என்றோ கதவு ஆடியார் என்றோ பிரித்தால் யாரோ ஒரு கதவினை ஆட்டியவர் அல்லது அசைத்தவர் என்ற சிறப்பில்லாத ஒரு பொருளைத் தருகிறது. பட்டங்கள் அவற்றைப் பூண்டாரின் அருமைபெருமைகளுக்கு அடையாளம் ஆகும். எனவே இப்பட்டத்தைக் கதவு அடையார் என்று பிரித்துக் காண்பது நேரியது. சிறந்த வள்ளல்களை அடையா நெடுங்கதவு உடையோராகப் பாராட்டுவது மரபாக இருந்துள்ளது.

18. கருடியார்

கருடி+ஆர் எனப் பிரித்தால் பொருள் விளங்கவில்லை. எனவே, இதனைக் கரடியார் என்பதன் திரிபாகக் கொள்ளலாம். ந.மு.வேங்கடசாமி நாட்டாரும் இவ்வாறே கொள்கிறார். போர்ப்பயிற்சி செய்கின்ற குழுவுக்குக் கருடிக்கூட்டம் என்னும் வழக்கம் இன்றளவும் நிலை பெற்றுள்ளது. எனவே, இப்பட்டம் களரிகளில் படைப்பயிற்சியை அளித்தவருக்குரிய ஒன்றாகத் தெரிகிறது. நாட்டாட்சியோடும் போர்க்களங்களோடும் தொடர்புடையாருக்கு இத்தகைய பட்டம் வழங்கியிருப்பது பொருத்தமானதேயாகும்.

19. கருப்பட்டியார்

இதில் 'ஆர்' என்பது மரியாதைப்பன்மை விகுதி. எனவே, கருப்பட்டி என்பதையே செட்டி என்பதைப்போலப் பட்டமாகக் கொள்ள வேண்டியுள்ளது. இதனைக் கரும்பு + அட்டி எனப் பிரித்தால் தமிழ்ப்புணர்ச்சி விதிப்படிக் கருப்பட்டி எனவாகும். கரும்பைப் பிழிந்து காய்ச்சிச் சர்க்கரை சமைத்தவனுக்குத் தொழில் அடிப்படையில் இப்பட்டம் வழங்கியிருக்கலாம். இல்லையேல் 'அட்டுதல்' என்னும் சொல்லுக்கு வழங்குதல் என்னும் பொருள் உண்மையால் திருக்கோயில்களுக்குப் பூசனைப் பொருள்களாகக் கரும்பையோ கரும்புச் சாற்றையோ வழங்கியவராக இருத்தல் வேண்டும். கருப்பட்டிப்பட்டி என்று ஊருக்குப் பெயர் வழங்குவதால் கருப்பட்டி என்பதே பட்டமாகக் கருதத்தக்கதாகும். இல்லையேல் கரு பட்டி என்று பிரித்து அதனை ஓர் ஊர்ப்பெயராகக் கொள்ள இடமேற்பட்டிருக்கும்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் கருப்பட்டிப்பட்டி, கருப்பட்டிவிடுதி, தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் கருப்பட்டிப்பட்டி, மடிகை முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

20. கலியனார்

துன்பம் மிகுந்த காலத்தை அதாவது தீமை மலிந்த காலத்தைக் கலிகாலம், கலியுகம் என வழங்குகின்றோம். எனவே கலியன் என்பதற்குப் பகைவர்க்குத் துன்பத்தைத் தருபவன் எனப் பொருள் கொள்ளலாம். ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கை மன்னர் தம்மைப் பலகாலும் கலியன் என்று அழைத்துக் கொள்கின்றார். எதிரிகளுக்குத் துன்பம் அளிக்கக் கூடியவர் என்று தம்மைப் பாராட்டிக் கொண்டதாகக் கொள்ளலாம். இப்பட்டம் கலியராயர் என்றும் வழங்குகிறது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனத்தவர் புதுக்கோட்டை மாவட்டம் கலியராயன்பட்டி, கரம்பக்குடி, கீரனூர், இலந்தைவாடி, பிலாவிடுதி, குலத்திரான்பட்டு, தஞ்சை மாவட்டம் நீடாமங்கலம்வட்டத்தில் சித்தமல்லி முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

21. களந்தண்டார்

களம்+தண்டார் எனப் பகுத்தால் அறுவடைகாலத்தில் நெற்களங்களுக்கு வழி வழங்குபவர் என்று பொருள் கொள்ளக்கூடும் (தண்டுதல் - வசூலித்தல், வாங்குதல் - தண்டல் நாயகர்) ஆனால் களந்தை ஆண்டார் எனப் பிரிப்பது கள்ளர் இனத்தாரின் வரலாற்றுக்கு மேலும் பொருத்தமுடையதாகலாம். ஏனெனில் பாலாண்டார், பல்லவாண்டார் எனப் பட்டங்கள் வழங்குகின்றன. களந்தை என்பது களப்பாள் என்னும் ஊருக்கு உரிய வேறொரு பெயராகும். களந்தையை ஆண்டவர் என்னும் பொருளில் களந்தையாண்டார் என்னும் பட்டம் தோன்றியிருக்க வேண்டும்.

## 22. களப்பாடியார்

இதனைக் களம்+பாடியார் என்று பிரிக்கலாம். பாடியார் என்பதைப் பாடுபவர் என்று விளக்கினால் ஏர்க்களத்தையோ, போர்க்களத்தையோ போற்றிப் பாடியவர் என்று பொருள் தோன்றும். அவ்வாறெனில் அவர் புலமையாளராகக் கருதத்தக்கவர். கள்ளரினத்தவரில் புலவர்களும் இருந்திருத்தல் கூடுமேனும் அவர்களை வீரமறவர் குலத்தினராக வரலாறு காட்டுவதால் பாடி என்பதைப் 'பாடி வீடு' என்று விளக்குவது மேலும் பொருத்தமாகலாம். கள்ளர் இனத்தவர்கள் பிற்காலத்தில் பாடிகாவல் அதிகாரிகளாக இருந்தனர் என்பதற்கும் அதற்காக ஊரவர்கள் ஆவணங்கள் செய்து கொடுத்து வரி செலுத்தி உள்ளனர் என்பதற்கும் பல சான்றுகள் உள்ளன. பாடிகாவல் என்பது சோழர் காலத்தில் வழக்கிலிருந்த ஒரு வரி என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் மாவட்டம் மன்னை வட்டத்தில் காரக்கோட்டை, முக்குலம் சாத்தனூர், பட்டுக்கோட்டை வட்டத்தில் மணியார்புரம் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 23. களப்பிலார்

இதனைக் களைப்பு+இலார் என்று பிரிக்கலாம். சலியாது செயலாற்றுபவர் என்று இதற்குப் பொருள் சொல்லலாம். அசையாத்துறையார் என்னும் பட்டப் பெயர்கூட இப்பொருளுடையதாகத் தோன்றுகிறது. இல்லையேல் களப்பாழார் என்பது களப்பாலராகிக் களப்பிலார் என்று திரிந்திருக்கலாம். களந்தை பற்றி முன்னும் கூறப்பட்டது. கூற்றுவநாயனார் என்பது களந்தையை ஆண்டார் என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது. அவரைக் 'களப்பாளனாகிய கூற்றுவனே'[6] என்று நம்பியாண்டார் நம்பி கூறுகின்றார். இதனால் களப்பாளர் என்பது களப்பால் பகுதியை ஆண்டவர்க்குரிய பெயராகச் சோழர் காலத்தில்

வழங்கிற்று என்பது தெரிகிறது. எனவே, களப்பாளர் என்பதே களப்பிலார் என்று திரிந்தது எனக் கொள்ளலாம்.

களப்பாளர் என்ற பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சை மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் தென்னமநாடு என்னும் ஊரில் வாழுகின்றனர்.

## 24. கிளாவர்

கிளாவர் என்பது தமிழ்ப் பெண்களின் காதணிகளில் ஒன்று. அது மூன்று தலைகளைக் கொண்ட அமைப்புடையது. இந்த அடிப்படையில் இப்பட்டம் அமைந்திருக்க முடியாது. எனவே, இதனைக் களவர் அல்லது களபரு என்ற சொற்களில் ஒன்றுடைய திரிபாகக் கொள்ள இடமுண்டு. சங்ககாலத்தில் வேங்கடமலைப்பகுதியில் ஆண்ட புல்லியைக் களவர் கோமான் புல்லி என்பர்.[7] ஒருவேளை இப்பட்டம் புல்லியினுடைய தொடர்பை விளக்கக்கூடும். இல்லையேல் தமிழ்நாட்டுள் ஊடுருவி மூவேந்தர்களை வென்றோராகச் சொல்லப்படும் கன்னட நாட்டைச் சேர்ந்த களப்பிரரோடு கள்ளரின் ஒரு பிரிவினரை இப்பட்டம் உறவுபடுத்தக்கூடும். முத்தரையர்களை கள்ளரோடு உறவுபடுத்த வாய்ப்பிருப்பது வேறோர் இயலில் விளக்கப்பட்டது. களப்பிரருக்கும் முத்தரையருக்கும் உறவு உண்டு என்பதும் ஈண்டு நினைக்கத் தோன்றுகிறது.

கிளாவர் என்ற பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சை வட்டத்தில் கொல்லங்கரை முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 25. காவாலியார்

புதுக்கோட்டைப் பகுதியில் காவாலி நாடும் காவாலிப்பட்டியும் உள்ளன. காவாலி + ஆர் என்று பிரித்தால் காவாலி என்பது பட்டத்தின் உருவமாகத் தெரிகிறது. இதன் உண்மையான பொருள் விளங்கவில்லை.

ஒருவேளை காவல் கடமையின் அடிப்படையில் காவாலியார் என இருந்து இப்படித் திரிந்திருக்கலாமோ என ஐயுற இடமிருக்கிறது. இல்லையேல் காபாலியார் என்பது பகர வகர மாற்றத்தால் ஐங்ஙனம் திரிந்ததாகக் கொள்ளவேண்டும். இதனை ஏற்றுக் கொண்டால் பல்லவர் காலத்தில் தமிழகத்தில் நிலவிய சைவ சமய பிரிவுகளுள் ஒன்றான காபாலி சமயத்தோடு இப்பட்டப்பெயரை இணைத்துக் காணவேண்டும். சிவபெருமானுக்குக் கபாலீசுவரர் என்னும் பெயர் வழங்குவதையும் எண்ணிப் பார்க்கலாம்.

இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் காவாலிப்பட்டி முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 26. களாக்குடையார்

இதனைக் களக்குடையார் என்றோ களக்குடியார் என்றோ பகுத்துக் காணலாம். முன்னதற்குப் போர்க்களத்தில் குடைதாங்கிச் செல்லும் மறவர் என்று பொருள் கூறலாம். பின்னதற்குக் களக்குடி என்னும் ஊருக்குத் தலைவர் என விளக்கம் கூறலாம்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டை வட்டத்தில் வடக்குக்கோட்டை, பாபநாசம் வட்டத்தில் புலவர் நத்தம் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 27. கிளிகாண்டார்

இதனைக் கிளியைக் கண்டவர் என்று விளக்குவதில் யாதொரு சிறப்புமில்லை. கிளியினார் என்பதும் இதனோடு ஒத்ததாகவே தோன்றுகிறது. கிளியூர் மலையமான்களைப் பற்றி வேறொரு இடத்தில் விளக்கப்பட்டதை நினைவு கூறலாம். எனவே கிளியூர் ஆண்டார் என்பது கிளியாண்டார் ஆகி

கிளியண்டார் என்று மாறியிருக்கலாம் எனத் தோன்றுகிறது. கிளியூர் அரையர் என்பது கிளியூராயர் என்று வழங்குவதனையும் இதனோடு ஒப்பு நோக்கலாம்.

## 28. கீருடையார்

இதனைக் கீரை+உடையார் எனப் பிரிக்கலாம். அப்போது கீரை என்னும் ஊருக்கு அல்லது நாட்டுக்குத் தலைவர் எனப் பொருள் வரும். கீரைக் கட்டையார் என்னும் ஒரு பட்டப்பெயரும் வழங்குகிறது. இது கீரைக்காட்டார் என்பதன் திரிபாகலாம். அவ்வாறெனில் கீரைக்காடு என்பது ஒரு ஊரின் பெயராதல் வேண்டும். அதுவே கீரை என்று சுருக்கமாக அழைக்கப் பட்டிருக்கலாம். அந்த அடிப்படையில் கீருடையார் என்னும் பெயர் தோன்றி யிருக்கலாம். அன்றேல் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள கீரனூரோடு இப்பட்டத்தை இணைத்துக் காணலாம்.

இன்று இப்பட்டமுடையர் தஞ்சை வட்டத்தில் வேங்கிராயன்குடிகாடு, நடுவூர் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 29. குடிக்கமுண்டார்

பல பட்டப்பெயர்களில் மகரத்தில் முடியும் முன்னொட்டோடு கொண்டார் என்பது தொடரும்போது அது உண்டார் எனத் திரிகிறது. எனவே இப்பெயரின் முன்னொட்டைக் குடிக்கம் என்று கொள்ள வேண்டியுள்ளது. நாடும் ஊரும் அறியப் பெறவில்லை. யாதானும் ஒன்றன் திரிபாகக் கொள்ள வேண்டு மேல் அதனைக் கடக்கம் என்று கொள்வது மிகப்பொருத்தம். எனவே இப்பட்டத்தைக் கடக்கம் கொண்டார்என்பதன் திரிபாகக் கொள்வது கள்ளர் வரலாற்றுக்குப் பொருத்தமானது. மண்ணைக் கடக்கத்திற்கும் இராசேந்திர

சோழனுக்கும் உள்ள தொடர்பு பற்றியும் கள்ளர் பட்டப்பெயருக்கும் கடக்க வெற்றிக்கும் உள்ள உறவு பற்றியும் சோழரும் கள்ளரும் என்னும் பகுதியில் விளக்கப்பட்டிருப்பதை நினைவிற் கொள்ளலாம்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் பனையக்கோட்டை, சின்னபுலிக்குடிகாடு, நாகை வட்டத்தில் சொக்கநாதபுரம் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 30. குடிபாலர்

இச்சொல் துவாரபாலர், கோபாலர், சேத்திரபாலர் என்ற பெயர்களைப் போன்றது. பாலர் என்னும் வடசொல்லுக்குப் பரிபாலனம் செய்பவர், காவல்புரிவோர் என்பது பொருள். எனவே குடிகளைக்காப்பவர் என்னும் பொருள் கொண்டது இப்பட்டம் என்பதை உணரலாம். குடிகாத்தல் என்பது அரசருக்கும் அவர்போலும் தலைவருக்கும் உரிய கடமை என்பதை விளக்கத் தேவையில்லை.

## 31. கொத்தப்பிரியர்

இச்சொல் கொத்தாப்பிரியர் என்றும் வழங்குகின்றது. தமிழில் றகரம், தகரமாகத் திரிவது இயல்பானது. பற்று, பத்து, புற்று-புத்து, என்பனபோலக் கொற்றப்பிரியர் என்பது கொத்தப்பிரியர் எனத் திரிந்திருத்தல் வேண்டும். கொற்றமாவது வெற்றியாகும். எனவே இப்பட்டப்பெயருக்கு வெற்றியை விரும்புபவர் என்று பொருள் கொள்ளவேண்டும். இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சை மாவட்டத்தில் பெருமாங்குடி, மருதகுடி முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

32. கொழுந்தராயர்

இச்சொல் கொழுந்து+அரையர் என்றோ குழந்தை+இராயர் என்றோ பிரித்துக் காண இடந்தருகிறது. இத்தகைய பெயர்களில் சிறப்புக் கூறு ஒரு நாட்டுப்பகுதியைக் குறிப்பது இயல்பு அல்லது ஒரு மரபுப் பெயரைக் குறிப்பதும் உண்டு. கள்ளர் நாடுகளில் குழந்தை வளநாடும் ஒன்றாக இருப்பதால் குழந்தைராயர் என்பதன் திரிபாகவே இப்பட்டப்பெயரைக் கொள்ள இடமிருக்கிறது.

33. கொல்லமுண்டார்

இச்சொல்லைக் கொன்னம்+கொண்டார் என்று பிரித்தால் கொன்னம் என்பது நாட்டுப் பகுதியைக் குறிக்கவேண்டும். ஆனால் கள்ளர் நாடுகளில் இப்படியொரு பகுதி காணப்படவில்லை. மாறாகக் குன்னங்கோட்டைநாடு என்று ஒன்றுண்டு. எனவே குன்னம்+கொண்டார் என்பதன் திரிபாக இதனைக் கொள்ளலாம்.

34. கோதண்டப்பிரியர்

இப்பட்டப்பெயர் கோதண்டப்புலியர் என்றும் வழங்குகின்றது. பட்டப் பெயரிலுள்ள புலியர் என்பதைப் பொதுக்கூறாகக் கொண்டபோதும் பட்டத்திற்குரியார் 'பிரியர்' என்பதனையே கொள்கின்றனர். கோதண்டம் என்பது 'வில்' ஆகும். எனவே போரில் வில்லைக் கையாள்வதில் விருப்ப முடையார் என்றும் சிறந்த பொருள் இதற்கு அமைகின்றது. இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனத்தவர் தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் சூரக்கோட்டை முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

35. கோழையர்

கள்ளர் நாடுகளில் மீக்கோழைநாடு என்பதும் ஒன்று. அப்பகுதிக்குத் தலைவர் என்னும் பொருளில் கோழையர் என்னும் பட்டம் அமைந்தது எனத் தெரிகிறது. உறையூருக்கு உரிய மாற்றுப் பெயர் கோழி என்பதாகும். இது பற்றியே சோழர்கள் சோழியர் என அழைக்கப்பெற்றனர். சோழருக்கும் கள்ளருக்கும் இடையேயுள்ள உறவு தெளிவாகத் தெரிவதால் இப்பட்டப்பெயர் உறையூரோடு தொடர்பு கொண்டதோ என்னும் ஐயத்தைத் தோற்றுவிக்கின்றது.

36. சங்காத்தியார்

இப்பட்டத்திலுள்ள மரியாதைப் பன்மை விகுதியை நீக்கினால் எஞ்சுவது சங்காத்தி என்பதாகும். இச்சொல்லிலுள்ள முன்னொட்டாகிய சங்கு என்பதன் பொருள் விளங்கினாலும் ஆத்தியார் என்பதன் பொருள் விளங்கவில்லை. எனவே, இதனைச் சங்கேந்தியார் என்பதன் திரிபாகக் கொள்வது பொருத்த மாகும். போர்க்களங்களில் போரின் தொடக்கத்தையோ வெற்றியையோ அறிவிப்பதற்குச் சங்கொலி எழுப்புவது மரபு என்பதை எண்ணும்போது இவ்விளக்கம் பொருத்தமான விளக்கமாகவே தோன்றுகிறது. திருத்துறைப் பூண்டிற்குப் பக்கத்தில் சங்கேந்தி என்னும் ஊர் உள்ளதையும் இதனோடு இணைத்துப் பார்க்கலாம்.

37. சமையர்

இப்பட்டப்பெயருக்கு அமைந்தவர் அல்லது சமைந்தவர் என்று பொருள் கூறலாம். எந்நேரமும் போரிடுவதற்கு ஆயத்தமாக இருப்பவர்

என்பது இதற்குரிய விளக்கமாகும். இச்சொல்லைச் சமயர் எனக்கொண்டால் தக்கவேலையில் வந்து உதவுபவர் என்றும் பொருள் தோன்றும். இப்பொருளுக்கு ஏற்ப பிற்காலச் சோழர் காலத்தில் வலிமை வாய்ந்த வேலைக்காரப்படை இருந்ததையும் பாண்டியரிடத்தில் ஆபத்துதவிகள் என்னும் சிறப்புப் படையினர் பணியாற்றியதையும் எண்ணிப் பார்த்தல் நலம் பயக்கும்.

38. சம்பிரத்தேவர்

தேவர் என முடியும் பட்டப்பெயர்களில் இது புதுமையானதாகத் தோன்றுகிறது. தமிழ்ப்புணர்ச்சி விதிப்படி இச்சொல்லைப் பிரிப்பதானாலும் சம்பிரம் தேவர் எனப்பிரிக்க வேண்டும். சம்பிரம் என்ற சொல்லுக்கும் விசயநகர ஆட்சிக்காலத்தில் இருந்த சம்பிரதி என்னும் பதவிக்கும் தொடர் பிருக்குமானால் அப்பதவி வகித்தவர்களுக்கு உரிய பட்டமாக இச்சொல்லைக் கருதலாம்.

39. சவுட்டியார்

இது சவட்டுதல் என்னும் சொல்லடியாய் பிறந்த பட்டமாகத் தெரிகின்றது. சங்க இலக்கியத்தில் ஒரு பொருளை நைத்தல் என்னும் பொருளில் இச்சொல் ஆளப்பெறுகிறது. 'பஞ்சாய்க்கோரை பல்லில் சவட்டி' என்னும் தொடர் பெரும்பாணாற்றுப்படையில் இடம்பெறுகிறது.[8] காலால் மிதித்து உழக்குதல் என்னும் பொருளில் இச்சொல் இன்று மலையாளத்தில் வழங்குகிறது. காலைத் தரையில் அழுத்தமாக ஊன்றித் தேய்த்து நடப்பவர்களைச் சவட்டைக் காலர் என்று தமிழர் கூறுவர். எனவே, பகைவர்களைக் 'காலால்' தேய்த்து அழிக்கக்கூடிய திறம்மிக்கவர் என்றும் பொருள் தோன்றுமாறு இப்பெயர் அமைகின்றது. இப்பெயரால் சவட்டிநாடு என்னும் பகுதியொன்றும் வழங்குகின்றது.

40. சவுளியார்

இதுவும் மேற்கண்ட பட்டத்தோடு தொடர்புடையது போல் தோன்றுகிறது. 'சவல்' என்பது இரண்டுக்கும் பொதுவான வேர்ச்சொல்லாகத் தோன்றுகிறது. இச்சொல்லுக்கு அடக்குதல் என்றும் பொருள் உண்டு. ஏறு தழுவுதலைத் தஞ்சையின் சில பகுதிகளில் சவுளிக்கட்டுதல் என்று வழங்கும் வழக்கு இன்றளவும் காணப்படுகிறது. இதுவே சல்லிக்கட்டு எனத் திரிந்ததாகக் கொள்ள இடமிருக்கிறது. இந்த அடிப்படையில் காணும்போது பகைவர்களை அடக்குதல் என்னும் பொருள் இப்பட்டத்திற்குப் பொருந்தும்.

41. சன்னாடர்

இப்பெயர் கள்ளர் நாடுகளில் ஒன்றான சென்னாடு என்பதன் அடிப்படையில் தோன்றியதாகத் தெரிகிறது.

42. சாணார்

இப்பட்டம் சான்றார் என்பதன் திரிபாகக் கொள்ளத்தக்கது. சங்க காலத்தில் 'சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே', 'தேர்தர வந்த சான்றோரெல்லாம்' என்னும் இடங்களில் போர்மறவர் என்னும் பொருள் தோன்றக் காணலாம். சேக்கிழார் சுவாமிகளும் ஏனாதிநாதனாரை 'ஈழக்குலச் சான்றார்' எனக் குறிப்பிடுவார்.[9] இதனால் சான்றார் என்னும் பெயரின் திரிபாகக் கொள்ளலாம்.

43. சிங்கப்பிலியார்

இச்சொல்லில் இரண்டு விலங்குகளின் பெயர்கள் இருப்பதாகத் தெரிகிறது. புலி என்பது பேச்சு வழக்கில் பிலி என்றாகும். சிங்கம்

போலவும் புலி போலவும் பகைவர்க்கு அச்சம் தருபவர் என்னும் பொருள்படச் சிங்கப்புலியர் என்னும் பட்டம் வழங்கியிருக்கலாம். அல்லது இப்பட்டத்தின் பின்பகுதி பிரியர் என இருந்து பிலியர் என்று திரிந்திருக்கலாம். அவ்வாறெனின் சிங்கம் என்பதனையும் சிங்களம் என்பதன் திரிபாகக் கொண்டு சிங்களத்தை அழிப்பதில் அல்லது கைப்பற்றுவதில் பிரியமுள்ளவர் என்று பொருள் கொள்ளலாம். சோழப்பேரரசுக் காலம் முழுவதும் சிங்களரோடு சோழர்களுக்குப் பகையுணர்வு இருந்ததை வரலாறு காட்டுகிறது.

44. சிறுமாடர்

இப்பட்டப்பெயர் செருமடார் என்றுதான் பட்டத்திற்குரிய பெயரால் வழங்கப்படுகின்றது. இவர்களின் ஊரும் செருமங்கலம் என்றே வழங்குகின்றது. 'செரு' என்பது போர் என்னும் பொருளுடைய சொல்லாகும். மடார், முட்டார் என்பதன் திரிபாகக் கொள்ளத்தக்கது. அதாவது இடையறாது போரில் ஈடுபடுபவர் என்று இதற்குப் பொருளாகும். முட்டுப்பாடு என்றால் வறுமை, பற்றாக்குறை என்பது பொருளாகும்.

45. சேண்டப்பிரியர்

இப்பட்டம் செண்டுப்பிரியர் என இருந்து பேச்சு வழக்கில் இங்ஙனம் திரிந்திருக்க வேண்டும் போல் தெரிகிறது. கோதண்டப்பிரியர் என்பதோடு இதனை ஒப்பிட்டுக் காணலாம். 'செண்டு' என்பது தற்காலத்தில் பூச்செண்டைக் குறித்தாலும் அது ஒரு காலத்தில் ஒரு போர்க்கருவியாக விளங்கிற்று என அறியலாம். பெருமாளுக்குச் செண்டலங்காரப்பிரியன் எனப் பெயரும் உண்டு. செண்டு என்னும் போர்க்கருவியை ஆளுவதில் விருப்பமுடையவர் என்னும் பொருளில் இப்பட்டம் அமைந்துள்ளது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் இனத்தவர் தஞ்சாவூர் மாவட்டம் மன்னை வட்டத்தில் பைங்காநாடு, கன்னாரப்பேட்டை, காரக்கோட்டை, பட்டுக்கோட்டை வட்டத்தில் மெயில்பாளையம் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 46. சேப்பிழார்

இப்பட்டப்பெயர் சேப்ளார் என்றும் வழங்குகிறது. இச்சொல் மேற்போக்காகக் காணும்போது பொருள்விளங்காததாகத் தோன்றிலும் 'சேவகப் பிள்ளையார்' என்பதன் திரிபாகக் கொள்ளத்தக்கதாகும். சிவப்பு என்பது சேப்பு என்று மாறுவதைப்போல சேவகப்பிள்ளை என்பது சேப்பிள்ளை என்றாகிக் காலப்போக்கில் சேப்பிளார் என மாறியிருக்க வேண்டும். இன்றும் காவலர்கள் ( Police ) சேவகர் என வழங்கப்படுவர். சேவகம் செய்தல் என்பதற்குப் போர்த்தொழில் செய்தல் என்றும் பொருளுண்டு. அதனாலேயே முருகனுக்குச் சேவகன் எனப் பெயருண்டு. 'சேவகப் பெருமாளே' என்று அருணகிரியாரும் பாடுவார். "நடையில்லான் சேவகம் செய்ய முற்படுவது நகைப்புக்குரியது" என்று தமிழ் நீதிநூல் ஒன்று குறிப்பிடுகின்றது.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் வெண்ணாவல்குடி, கிளிக்குடி, சேப்பிழான்பட்டி, தேக்காட்டூர், ஆலங்குடி முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 47. சோணாருண்டார்

இச்சொல்லைச் சோணாடு ஆண்டார் என்பதன் திரிபாகக் கொண்டால் சோழநாட்டை ஆண்டவர் என்று பொருள்படும். சோணாடு கொண்டார் என்பதன்

திரிபாகக் கொண்டால் சோழர் ஆட்சியின் இறுதிக்காலத்தில் சோழநாட்டின்மீது படையெடுத்துப் பேரழிவு உண்டாக்கி முடிகொண்ட சோழபுரமாகிய பழையாறையில் முடிசூட்டிக் கொண்டு சோனாடு கொண்டருளிய சுந்தரபாண்டியதேவர் எனப் பட்டம் சூட்டிக் கொண்ட மாறவர்மன் சுந்தரபாண்டியனோடு தொடர்புடைய பட்டமாக இதனைக் கருதலாம். வியப்புக்குரிய முறையில் இப்பட்டம் உடையவர் பழையாறைக்கு அண்மையிலுள்ள இராசாக்கள் இருப்பு என்னும் ஊரில் வாழுகின்றனர்.

## 48. சோதிரையர்

இடைக்காலத் தமிழகத்தில் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலங்களுக்குக் கொடுக்கப்பட்டவர்களின் அடிப்படையில் பல்வேறு பெயர்கள் வழங்கின. பள்ளிச் சந்தம், திருவிடையாட்டம், சாலாபோகம், அர்ச்சனாபோகம் என்பன அத்தகையனவாகும். சோத்ரியம் என்பது நிலக்கொடைகளில் ஒன்றாகும். சில ஊர்கள் சோத்திரியம் என்னும் பெயருடன் விளங்குகின்றன. இதன் அடிப்படையில் இப்பட்டம் தோன்றியிருக்கலாம்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் மாவட்டம் இராசாக்கள் இருப்பு, பசுபதி கோயில் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

## 49. தாக்கலிக்கியார்

இதனைத் தாக்கலக்கியர் எனக் கொண்டால் பகைவர்களைக் கலக்கி அவர்களின் வலிமையை அழித்தவர் என்று பொருள் கொள்ளலாம். தார்க்கலக்கியார் என்று கொண்டால் பகைவர்களின் தூசிப் படையைக் கலக்கி அழுக்கக்கூடியவர் என்று பொருள்கொள்ளலாம்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் மாவட்டம் மன்னை வட்டத்தில் முக்குலம் சாத்தனூர், நீடாமங்கலம் வட்டத்தில் சித்தமல்லி, ஒரத்தநாடு வட்டத்தில் மேலஉளூர், மன்னை வட்டத்தில் பைங்கா

50. தானாதியார், தாளிதியார்

இவ்விரண்டும் ஒரு பொருள் கொண்ணும் பட்டப்பெயர்களாகும். தானாதியார் என்பதே தாளிதியார் என்று திரிந்ததாகத் தெரிகிறது. தானை பதியார் தானாபதியார் தானாதியார் என்று மாறியுள்ளது. சேனைக்குத் தலைவன் என்பது இதன் பொருளாகும். விசயநகர மன்னர் காலத்தில் அமைச்சராகவும் தளபதியாகவும் விளங்கிய ஒருவர் தானாதிபதி என்று அழைக்கப்படுகின்றார். இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டம் கருக்காக் குறிச்சியில் வாழுகின்றனர்.

51. பசும்பிடியார்

இச்சொல் பசும்படையார் என்பதன் திரிபாகத் தோன்றுகிறது. பசும் படையாவது புதிதாகச் சேர்க்கப்பட்ட படை எனத் தோற்றமளிக்கிறது. இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் வலங்கைமான் வட்டம் உடையார் கோயில் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

52. பண்ணியமுண்டார்

கள்ளர் நாடுகளில் ஒன்றாகிய பண்ணிய நாட்டிற்குத் தலைவர் பண்ணியமுண்டார் என்று பொருள் கொள்ளலாம்.

53. பதங்கராயர்

இச்சொல் வைதம்பராயர் என்பதன் திரிபாகிய வைதங்கராயர் என்பதனைச் சரியாக உச்சரிக்காமையினால் பதங்கராயர் என்று மாறியதாகத் தெரிகிறது.

54. பத்தாளர்

பத்தாளம் என்னும் ஊரினர் அல்லது நிலக்கொடைக்கு உரியார் (பற்றாளர்) என்னும் பொருளில் இப்பெயர் அமைந்திருக்க இடமுண்டு.

55. பம்பாளியார்

கள்ளர் நாடுகளில் ஒன்றான பாம்ப நாட்டோடு இப்பட்டப்பெயர் தொடர்புடையதாகலாம். இல்லையேல் முதலாம் இராசேந்திரன் வென்ற பப்பாளத்தோடு தொடர்புடையதாக இருக்கவேண்டும்.

56. பன்னிகொண்டார்

இச்சொல் பன்றிகொண்டார் என்பதன் திரிபாகும். கள்ளர் நாடுகளில் ஒன்று பன்றி நாடாகும்.

57. பன்னயார்

இச்சொல் பண்ணையார் என்பதன் திரிபாகும். பண்ணை என்பது இராசேந்திரன் வென்ற கிழக்கிந்தியத்தீவுப் பகுதிகளில் ஒன்றாகும்.

58. பாப்புரெட்டியார்

இதனைப் பார்புரட்டியார் என்று விளக்கமுடியும். உலகத்தைத் தம் வீரத்தால் தலைகீழாகப் புரட்டக்கூடிய ஆற்றல் மிக்கவர் என்பது பொருளாகும்.

இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் திருவையாறு வட்டத்தில் திருச்சின்னம்பூண்டி, இளங்காடு, வானரங்குடி, திருச்சி, தஞ்சாவூர் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

59. புண்ணாக்கர்

இச்சொல் பொன்னாக்கர் என்பதன் திரிபாகக் கொள்ளத்தக்கது. பேச்சாற்றல் மிக்கவர் என்று இதற்குப் பொருள் செய்யலாம். இல்லையேல் புண் ஆகர் தன் உடம்பில் விழுப்புண்கள் ஏற்றவர் என்று விளக்கம் கொள்ளலாம்.

60. புள்ளராயர்

இப்பட்டம் புள்ளவராயர் என்றும் வழங்குகிறது. இதனைப் புள்ளரையர் என்று கொண்டால் பறவைகளுக்கு அரசர் என்று விளக்கங் காணலாம். பறவைகளின் அரசனாகக் கருதப்படும் பருந்தில் ஒருவகையாக இராசாளி அமைகிறது. பகைவரைத் தாக்குவதில் இராசாளியைப் போன்றவன் என்னும் பொருளில் இராசாளியார் என்னும் பட்டமும் வழங்குகிறது. கள்ளர்களுக்கு வழங்கும் பட்டப்பெயர்களில் ஒன்றான சாளுவர் என்பதற்கும் இராசாளி என்றதான் பொருளாகும். விசயநகர ஆட்சியாளருள் சாளுவ மரபினர் ஒரு வகையினர் என்பதும் குறிப்பிடத்தக்கது. புள்ளவராயர் என்பதைப் புள்ளுவராயர் என்று விளக்கினால் போருக்குச் செல்லுமுன் வெற்றி தோல்வியை அறிதற்காகப் புள் சகுனம் பார்த்துச் சொல்லுபவர் என்று பொருள்படும் 'புள்ளுவம்' என்பது இச்செயலுக்குரிய பெயராகும். இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் தஞ்சாவூர் மாவட்டம் மன்னை வட்டத்தில் புள்ளவராயன் குடிகாடு, நெடுவாக் கோட்டை, காரக்கோட்டை, வடுவூர், ஒரத்தநாடு, தென்னமநாடு முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

61. போர் பொறுக்கியார்

இப்பட்டம் போர் பொறுத்தார் என்றும் வழங்குகிறது. பொறுத்தலாவது தாங்குதலாகும். தார்ப்படையைத் தடுத்து நிறுத்துவதைத் தார்தாங்கல் என்பர்.

எனவே பகைவர் படையெடுத்து வரும்போது எதிர்நின்று தாக்கித் தடுத்து நிறுத்தக்கூடியவர் என்னும் பொருளில் இப்பட்டப்பெயர் அமைந்திருத்தல் கூடும்.

62. மாளிகசுற்றியார்

இச்சொல் மாளிகைச் சுற்றியார் என்பதன் திரிபாகலாம். அரண்மனையைக் காவல் பூண்டோருக்கு இப்பெயர் வழங்கியிருக்கலாம். இன்று இப்பட்டமுடைய கள்ளர் குடியினர் புதுக்கோட்டை மாவட்டத்தில் வல்லத்திராக் கோட்டை, தஞ்சாவூர் மாவட்டம் ஒரத்தநாடு வட்டத்தில் தம்பத்திக்கோட்டை, மன்னை வட்டத்தில் பைங்காநாடு, பட்டுக்கோட்டை வட்டத்தில் ஆவிக்கோட்டை நாகை வட்டத்தில் மஞ்சக்கொல்லை, குடவாசல் வட்டத்தில் அம்மையப்பன் முதலிய ஊர்களில் வாழுகின்றனர்.

63. முண்டார்

இதனை மிண்டார் என்பதன் திரிபாகக் கொள்ளலாம். மிண்டர் என்பது முண்டர் ஆகி அது மேலும் திரிந்து முண்டார் என ஆகியிருக்கலாம். முண்டர் என்பதற்கு வலிமையானவர், கெட்டிக்காரர் என்றும் பொருள்களுண்டு. நாயன்மார்களுள் ஒருவர் விறல்மிண்ட நாயனார் என்பது ஈண்டு நினைத்துப் பார்க்கத்தக்கது. முண்டா மொழிபேசும் வடநாட்டுப் பழங்குடியினரோடு ஒருவர் கள்ளர்களை இணைத்துக் காட்டுகிறார். அக்கருத்து ஏற்புடைத்தன்று.

64. முதலியார்

இப்பட்டப்பெயர் கள்ளருக்கும் நெசவுத் தொழிலில் ஈடுபடும் செங்குந்த மரபினருக்கும் தொண்டைமண்டல வேளாளருக்கும் ஆர்க்காட்டில் வாழும் அகம்படியாருக்கும் பொதுவாக வழங்குகிறது. இச்சொல்லுக்குத் தலைவர் முதன்மையானவர் என்பதே பொருளாகும். தேவாரம் பாடிய பெருமக்களை மூவர் முதலிகள் என்பது சைவ உலகத்தில் பெருவழக்காகும்.

அடியார்க்குக் தலைமையேற்றோருக்கும் படைத்தலைவர்களுக்கும் இப்பெயரே வழங்குகிறது. செங்குந்தர்களும் படைவீரராய்ப் பணியாற்றியோர் என்பது நினைவுகூரத்தக்கது. தளவாய் அரியநாதமுதலியார் விசுவநாதநாயக்கர்களின் தானைத் தளபதியாக விளங்கினர் என்பதும் எண்ணத்தக்கதாகும்.

## 65. வல்லாளத்தேவர்

வல்லாளன் என்பதற்குத் தமிழில் ஆற்றல் வாய்ந்தவர் என்பது பொருளாகும். என்றாலும் விசயாலயன் மரபினர் தமிழகத்தை ஆண்டபோது கன்னட நாட்டில் பெருவலி பெற்று ஆண்ட வல்லாளர்கள் அல்லது வள்ளாளர்களையும் நினைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. வீரவல்லாளன் என்னும் புகழ்மிக்க மன்னனைப் பற்றி வரலாறு பேசுகிறது. இப்பட்டப்பெயருக்கும் பல்லாளர்கள் அல்லது வல்லாளர்களுக்கும் தொடர்புண்டா எனச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

## தொகுப்புரை

பொருள் விளங்காதிருந்த பட்டப்பெயர்களில் மிகவும் குறிப்பிடத்தகுந்த பட்டங்களே இங்கு ஆராயப்பட்டன. விடுபட்டவற்றிற்கு எதிர்கால ஆராய்ச்சி விடை காணும் என்னும் நம்பிக்கை இவ்வாய்வாளருக்கு உண்டு.

## சான்றெண் விளக்கக் குறிப்புக்கள்

1. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், சூ.349.
2. புறம்., 285, 287, 297.
3. சிலம்பு., புகார்: அடி.119.
4. அகம்., பா.120.

4அ. அ. பதிற். 88-12, 90-19.

5. ந.மு.வேங்கடசாமி நாட்டார், கள்ளர் சரித்திரம், ப.73.
6. நம்பியாண்டார் நம்பி, திருத்தொண்டர் திருவந்தாதி, பாடல் எண்.47.
7. அகம்., 61.
8. பெரும்பாணாற்றுப்படை, 217.
9. பெரியபுராணம், ஏனாதி நாத நாயனார் புராணம், பாடல் எண்.2.

"கள்ளர் மரபினரின் பட்டப்பெயர்கள் - ஓர் ஆய்வு" என்னும் இவ்வாய்வு பத்து இயல்களாக ஆராயப்பட்டது. ஒவ்வோர் இயலின் முடிவிலும் ஆய்வு முடிவுகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. எனினும் ஆய்வின் சிறந்த முடிவுகள் மட்டும் ஈண்டுத் தொகுத்து அளிக்கப்படுகின்றன.

முன்னுரையில் வரலாற்றின் இன்றியமையாமையும், நாட்டு வரலாற்றுக்கும், சமூக வரலாற்றுக்கும் இடையே உள்ள உறவும் தமிழகத்தில் வாழும் மக்கள் இனத்தில் உள்ள வேறு சில பிரிவுகள் பற்றிய செய்திகளும் இப்பிரிவுகளுள் கள்ளர் மரபினரின் தனித்தன்மையும், இம்மரபினரிடையே காணப்படும் பெரும்பிரிவுகளும், உட்பிரிவுகளும் இவர்களைப் பற்றிப் பல்வேறு அறிஞர்களின் மதிப்பீடுகளும் ஆராயப்பட்டுள்ளன.

இரண்டாம் இயலில் கள்ளர் என்னும் சொல்லின் பொருளும், செய்திகளும் இவ்வினம் பற்றி அறிஞர்கள் மேற்கொண்ட பல்வேறு ஆய்வுச் சிந்தனைகளும் கள்ளர் நாடுகளும், நாட்டுக் கூட்டமும் பற்றிய செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

மூன்றாம் இயலில் பெயர், இயற்பெயர், சிறப்புப்பெயர் பற்றிய பொதுவான மரபுகளும் தமிழ்நாட்டில் பட்டப்பெயர்களின் தோற்றமும், தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும் பட்டப்பெயர்கள் பற்றிக் கூறும் செய்திகளும் பல்லவ மன்னர்களுக்குரிய பட்டங்களும், சோழர்காலத்தில் பட்டம் அளிக்கப்பட்ட சூழலும், சோழமன்னர்கள் தமக்குச் சூட்டிக்கொண்ட

பட்டங்களும் மன்னர்கள் பிறருக்கு அளித்த பட்டங்களும் பாண்டியர் கல்வெட்டுக்களில் காணப்படும் பட்டங்களும் ஆராயப்பட்டுள்ளன.

நான்காம் இயலில் பல்லவர்களின் வரலாறும் அவர்களின் ஆட்சிச் சிறப்பும் அவர்களுக்குரிய பட்டங்களும் அப்பட்டங்கள் கள்ளர் பட்டங்களோடு ஒத்திருப்பதும் படையாட்சிகளின் பட்டங்களும் பழைய கள்ளர்களின் பட்டங்களும் ஒத்திருக்கும் தன்மையும் ஆராயப்பட்டுள்ளன.

ஐந்தாம் இயலில் சோழர்களின் தொன்மையும் சோழப் பேரரசின் விரிவும் அதன் சிறப்பும் சோழ மன்னர்களுக்குரிய பட்டங்களும் அவர்கள் பிறருக்கு அளித்த பட்டங்களும், சோழர் காலக் கல்வெட்டுக்களில் இடம்பெற்ற அப்பட்டங்கள் கள்ளர் பட்டங்களோடு ஒத்திருத்தலின் அவற்றின் வரலாற்றுச் சிறப்பும் அவர்கள் வென்ற நாடுகளுக்கும் கள்ளர் பட்டப் பெயர்களுக்கும் உள்ள உறவும் ஆராயப்பட்டுள்ளன.

ஆறாவது இயலில் அதியமான் இருக்குவேளிர், களப்பிரர், திருக் கோவலூர், மலையமான், மழவராயன், முத்தரையர், முனையரையர் ஆகிய அரசமரபினர் பற்றியும், அவர்களின் ஆட்சிச்சிறப்பும் அவர்களுக்குரிய பட்டங்கள் கள்ளர் பட்டப் பெயர்களோடு ஒத்திருப்பதின் வரலாற்றுப் பின்னணியும் ஆராயப்பட்டுள்ளன.

ஏழாம் இயலில் ஊர்ப்பெயர் ஆய்வின் இன்றியமையாமையும், கள்ளர் பட்டப் பெயர்களில் அமைந்துள்ள ஊர்ப் பெயர்களும் இவ்வூர்களில் இப்பட்டப்பெயருடையார்க்கு உள்ள சிறப்புக்களும் இவ்வூர்ப்பெயர்கள் காட்டும் வரலாற்றுப் பின்னணியும் இவ்வூர்கள் அமைந்த வட்டாரத்தின் தன்மையும் ஆராயப்பட்டுள்ளன.

எட்டாம் இயலில் பட்டப்பெயர்கள் கள்ளர் சமூகத்தில் பெறும் சிறப்பிடமும் தமிழகத்தில் உள்ள குறிப்பிட்ட சில சாதிகள் பற்றியும் இச்சாதி மக்களிடையே மணஉறவுகளும் கள்ளர் பட்டபெயர்கள் சிறந்த புற மணக்குழுவாக விளங்கும் சிறப்பும் ஆராயப்பட்டுள்ளன.

ஒன்பதாம் இயலில் மக்கள் வழக்கில் பட்டப்பெயர்களில் ஏற்பட்டுள்ள மாற்றங்களும் அம்மாற்றத்தினால் பட்டப்பெயர்களின் பொருள் விளங்காத தன்மையும் அவற்றின் உண்மையான வடிவமும் பொருளும் அதற்குரிய சான்றுகளும் ஆராயப்பட்டுள்ளன.

முடிவுரையில் முன் இயல்களில் கூறப்பட்ட ஆய்வு முடிவுகள் சொல்லப்படுவதோடு இன்றைய கள்ளர் இனம் தமிழ் நாட்டை ஆண்ட பல்வேறு அரசமரபினரோடும் குடும்பநிலையிலும் உறவு உடையது என்னும் உண்மை வலியுறுத்தப்படுகிறது. இந்த ஆய்வு ஒரு இனத்தின் வரலாறு என்பதைவிட தமிழகத்தின் வரலாறு என்று கொள்ள முடிகிறது.

இனி, எதிர்காலத்தில் இதுவரை விளக்கப்பெறாத பட்டங்களுக்குரிய உண்மையானபொருள்கள் விளக்கப்படவேண்டும்.

கள ஆய்வு மூலம் கள்ளர் பற்றுக்களில் வழங்கும் அனைத்துப் பட்டங்களையும் தொகுத்து ஆராயவேண்டும்.

படையாட்சிகளின் பட்டங்களையும் கள்ளர்களின் பட்டங்களையும் இணைத்து ஆராயவேண்டும்.

அதியமான், சேதிராயன், முனையரையன், பாலாண்டான், பால்ராயன் முதலான பட்டம் கொண்டோரின் கால்வழியினர் அவர்களுக்குரிய பூர்விக இடங்களில் உள்ளனரா என்று ஆராயவேண்டும்.

சோழநாட்டுக் கள்ளர்களைப் பற்றி விரிவாக ஆராய வேண்டும். இவர்களை பாண்டிய நாட்டுக் கள்ளர்களோடு ஒப்பிட்டு ஆராயவேண்டும்.

நாட்டார், வன்னியர் ஆகிய பட்டமுடையோர்கள் தமக்குள் மணஉறவு கொள்வதன் பின்னணி பற்றி ஆராய வேண்டும். ஊர்ப்பெயரையும், பட்டப் பெயரையும் தனியாக ஆராயவேண்டும்.

நாட்டுக்கூட்டம் பற்றி முழுமையாக ஆராயவேண்டும். இந்த ஆய்வுகளை அரசு பல்வேறு அறிஞர்களைக் கொண்ட குழுக்களை அமைத்துத் தனித்தனியே மேற்கொள்ள வேண்டும். இம்முயற்சியில் அரசு முனைந்தால் தமிழக வரலாற்றில் விளங்காத பல புதிய உண்மைகள் புலனாகும்.

இவ்ஆய்வு ஒரு சாதியினைப் பற்றிய ஆய்வாக இல்லாமல், தமிழ் நாட்டின் வரலாற்றுச் சிறப்புக்கும் பண்பாட்டு மேன்மைக்கும் துணைசெய்வதாக அமையும் என்பதும் இத்துறையில் வருங்காலத்தில் மேற்கொள்ளும் ஆய்வுகளுக்கு இது ஓரளவு வழிகாட்டுவதாக அமையும் என்பதும் ஆய்வாளரின் நம்பிக்கையாகும்.

பின்னிணைப்பு – 1 ந.மு. வேங்கடசாமி நாட்டாரின் கள்ளர் பட்டப்பெயர் பட்டியல்

1. அங்கராயர்
2. அசையாத்துரையர்
3. அச்சுதப்பண்டாரம்
4. அடைக்கப்பட்டார்
5. அடைவளைந்தார்
6. அன்னுண்டார்
7. அன்னூ த்திப்பிரியர்
8. அதிகமான்
9. அத்திரியர்
10. அம்மாலைத்தேவர்
11. அயிரப்பிரியர்
12. அரசாண்டார்
13. அரசுக்குழைத்தார்
14. அரியபிள்ளை
15. அருமைநாடார்
16. அருவாத்தலைவர்
17. அருவாநாட்டார்
18. அலங்காரப்பிரியர்
19. அன்னவாசல் ராயர்
20. ஆச்சராயர்
21. ஆட்சிப்பிரியர்
22. ஆதாழியார்
23. ஆதித்தநெடுவாண்டார்
24. ஆரம்பூண்டார்
25. ஆர்சுற்றியார்
26. ஆலத்தொண்டமார்
27. ஆலம்பிரியர்
28. ஆவத்தியார்
29. ஆளற்பிரியர்
30. ஆள்காட்டியார்
31. இடங்காப்பிறந்தார்
32. இராங்கிப்பிலியர் (இராங்கியர்)
33. இராயமுண்டார்
34. இராஜாப்பிரியர்
35. இராஜாளியார்
36. இருங்கள்ளர்
37. ஈங்கொண்டார்
38. ஈழத்தரையர்
39. ஈழமுண்டார்
40. உத்தமுண்டார்
41. உய்யக்கொண்டார்
42. உலகங்காத்தார்
43. உலகுடையார்
44. உழுவாண்டார்
45. உறந்தைராயர்
46. ஊமத்தரையர்
4 . ஊரத்தியார்
48. ஊரான்பிலியர்
49. எண்ணாட்டுப்பிரியர்
50. எத்திரியப்பிரியர்
51. எத்தொண்டார்
52. ஒண்டிப்புலியார்
53. ஒளிராயர்
54. ஓசையார்
55. ஓட்டம்பிடிக்கியார்
56. ஒந்தரையர் (ஓமாந்தரையர்)
57. ஓயாம்பிலியர்
58. ஓனாயர்
59. கக்கொடையார்
60. கங்கநாடர்
61. கச்சியராயர்
62. கடம்பராயர்
63. கடாத்தலைவர் (கடாரத்தலைவர்)
64. கடாரந்தாங்கியார்
65. கட்டவெட்டியார்
66. கண்டபிள்ளை
67. கண்டர்சில்லி
68. கண்டியர்
69. கதவாடியார், கதவடையார்
70. கரடியார் (கருடியார்)
71. கரமுண்டார்
72. கரம்பையார்
73. கருப்பட்டியார்
74. கருப்பூண்டார்
75. கரும்புரார்

76. கலிங்கராயர்
77. கலியனார்
78. கவுண்டர் (கண்டர்)
79. களத்துவென்றார்
80. களந்தண்டார்
81. களப்பாடியார்
82. களப்பிலார்
83. களமுடையார்
84. களாவர்
85. கனகராயர்
86. கன்னப்பட்டையார்
87. கஸ்தூரிமுண்டார்
88. கஸ்தூரியர்
89. காங்கெயர்
90. காசிநாடர்
91. காடவராயர்
92. காடுவெட்டி
93. காறைக்காச்சியார்
94. காலாக்குடியர்
95. காவாலி
96. காவெட்டார்
97. கிளாக்கடையார் (கிளாக்கர்)
98. கிளிகண்டார்
99. கிளியிநார்
100. கீருடையார்
101. கீரைக்கட்டையார்
102. கீவுடையார்
103. குங்கிலியர்
104. குச்சராயர்
105. குடிக்கமுண்டார்
106. குடிபாலர்
107. குமரையண்டார்
108. குறுக்கண்டார்
109. கூசார்
110. கூராயர்
111. கூழாக்கியார்
112. கையராயர்
113. கொம்மனர்
114. கொங்ககரையர்
115. கொடுப்புலியார்
116. கொடும்புராயர் (கொடும்பூர் ராயர்)
117. கொட்டையாண்டார் (கோட்டையாண்டார்)
118. கொத்தப்பிரார் (கொற்றப்பிரியர்)
119. கொல்லத்தரையர்
120. கொழுந்தராயர்
121. கொன்றையர்
122. கொன்னமுண்டார்
123. கோதண்டப்புலியர்
124. கோபாலர்
125. கோழயர்
126. கோறர்
127. சக்கராயர்
128. சங்கரதேவர் (சங்கரர்)
129. சங்காத்தியார்
130. சமையர்
131. சம்பிரத்தேவர்
132. சர்க்கரை
133. சர்க்கரையப்ப நாடாள்வார்
134. சவுட்டியார்
135. சவுளியார்
136. சன்னாடர்
137. சாணர் (சாணார்)
138. சாமுத்திரியர்
139. சாளுவர்
140. சாதகர்
141. சிங்கப்பிலியர் (சிங்கப்புலியர்)
142. சிங்காரிக்கர்
143. சிட்டாச்சியார் (சிற்றாட்சியார்)
144. சிந்துராயர்
145. சிறுநாட்டுராயர்
146. சிறுமாடர்

147. சீனத்தரையர்
148. சுக்கிரர்
149. சுண்டையார்
150. சுந்தர்
151. சுரக்குடியார்
152. சுரைப்பிடுங்கியார்
153. செம்படையார்
154. செம்பியமுத்தரசர்
155. செம்மைகொண்டார்
156. செம்மைக்காரர்
157. செயங்கொண்டார்
158. செனவராயர்
(சன்னவராயர், சனகராயர்)
159. செவ்வண்டார்
160. சேண்டாப்பிரியர்
161. சேதிராயர்
162. சேப்பிழார்
163. சேர்வைகாரர்
164. சேலைக்கொண்டார்
165. சேனாபதியார்
166. சேனைகொண்டார்
167. சேனைநாடார்
168. சோனாருண்டார்
169. சோணையர்
170. சோதிரையர்
171. சோமணநாயக்கர்
172. சோமரசர்
173. சோழகர்
174. சோழங்கதேவர்
175. சோழங்கநாடார்
176. சோழங்கர்
177. சோழதரையர்
178. சோழப்பிரியர்
179. சோழன்கிளையார்
180. ஞானிசேவகர்
181. தஞ்சைராயர்
182. தனஞ்சராயர்
183. தாக்கலக்கியார்
184. தாளிநியார்
185. தானாதியார்
186. தின்னாப்பிரியர்
187. திராணியார்
188. திருக்காட்டியார்
189. திருப்பூவாட்சியார்
190. துண்டுராயர் (துண்டீரராயர்)
191. துறவாண்டார்
192. தெத்துவென்றார்
193. தென்கொண்டார்
194. தென்னரையர்
195. தேசிராயர்
196. தேவண்டார்
197. தேவர்
198. தொண்டார்
199. தொண்டைமான்
200. தொண்டைமான் கிளையார்
201. தொரையண்டார்
202. நந்தியராயர்
203. நரங்கியப்பிலியர்
204. நரங்கியர்
205. நல்லவன்னியர்
206. நல்லிப்பிரியர்
207. நாடாள்வார் (நாடாவார்)
நாடார், நாட்டார்)
208. நாட்டரையர்
209. நாய்க்கர்
210. நாய்க்காடியார்
211. நார்த்தவார்
212. நாவிளங்கியார்
213. நெடுங்காளியார்
214. நெடுத்தார்
215. நெடுவாண்டார்
216. நெறிமுண்டார்
217. நைனியார்
218. பசும்பிடியார்

